உங்களுடைய கேசம் ஆரோக்யமாகவும்
பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!






பிரில்க்ரீம் மட்டுமே

- அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, சேர்த்தியான கலவை வாய்ந்தது.
- உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.

**எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!**

**உலகமுழுவதிலும் லக்ஷகணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்**

BI/P12/64 TM B

# கல்கி

## பொருளடக்கம்

சோபகிருது, தை 27 ★ பிப்ரவரி 9



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



படவிளக்கம் 33ம் பக்கம்


பனமா
இழுக்க இழுக்க இன்பம் இறுதிவரை
Panama 20
CIGARETTES
Specially blended for a cool and pleasant smoke from selected Virginia Tobacco leaves.
GTC
GOLDEN TOBACCO COMPANY PRIVATE LTD
செழுமையான வர்ஜீனியாப் புகையிலை
சீர்நிரவிய கலவை
புதுமை மயமானது
விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டுபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட். பம்பாய்-56
பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப்பெரியது
GT. (P) 632 TM
Greens' Advtg.



மலர் 23 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 28

# இளைஞர்கள், கவனிக்க!

அரசியல் விஷயங்கள் எப்படியானாலும், நாட்டின் இளைஞர்களை நல்வழிப் படுத்தும் முயற்சியில் எல்லோரும் ஏகோபித்து ஈடுபட வேண்டும் என்று சமீபத்தில் ராஜாஜி எழுதினார்.

சரித்திரப் பேராசிரியராகிய ஏ. எல். பாஷாம் என்ற ஆங்கிலேயர் நம் நாட்டு இளைஞர்கள் எப்படிச் சீர்கெட்டுப் போயிருக்கிறார்கள் என்பதைச் சமீபத்தில் சென்னையில் எடுத்துக் கூறியிருப்பதைப் பார்க்கும்போதுதான் ராஜாஜியின் கவலை எவ்வளவு அவசிய மானது, நியாயமானது என்று புரிகிறது.

நமது தேசத்தைச் சேர்ந்த மடாதிபதி ஒருவர் பேசுவதுபோல் பாரதப் பண்பை வெகு ஆழமாகப் புரிந்துகொண்டு பேராசிரியர் பாஷாம் அவர்கள் மனம் திறந்து சொல்லுகிறார்: 'நல்ல வாழ்க்கை முறையைப் பரம்பரையாகப் பெற்று, யுக்தமான முறையில் வாலிபர்களை வளர்த்த தேசமல்லவா இந்தியா? மேல் நாட்டினரான எங்களைப் பின்பற்றி ஏன் கெட்டுப் போகிறீர்கள்?' என்கிறார்.

'இளம் பருவத்தில் ஆணும் பெண்ணும் சேர்ந்து படிக்கும் வழக்கம் இருப்பதால் தான் நெறிகள் கெடுகின்றன. உங்கள் நாட்டில் முன்பு இந்தக் கூட்டுப் படிப்பு வழக்கம் இருக்கவில்லை. பெரியோர் பார்த்து விவாகம் செய்து வைப்பது என்ற வழக்கம் இந்தியாவில் இருந்ததால் துன்மார்க்கம் குறைவாக இருந்தது' என்று கூறி, நம்மைத் தீர்க்கமாகச் சிந்திக்க வைத்து விட்டார் இந்த ஆங்கிலேயக் கல்வியாசிரியர்.

பௌதிக நியதிக்கு ஊறு நேரும் விதத்தில் பாலிய விவாகம் செய்வது தவறு தான். என்றாலும் ஆணுக்கும், பெண்ணுக்கும் இனவேட்கை தீவிரமாகுமுன் பெரி யோர்கள் மணம் முடித்து வைத்ததால், பௌதிக வேகங்கள் முறை பிறழாமல், ஓர் அமைப்புக்குக் கட்டுப்பட்டிருந்தன. தாங்கள் திருமணமானவர்கள் என்ற உணர்வே பெரும்பாலானவரிடம் ஒரு கௌரவ புத்தியை உண்டாக்கி, எதிர் இனத்தாரிடம் தவறான கருத்தை உண்டாக்காமல் இருந்தது. வயது கடந்த பின், தாங்களாகவே வரனைத் தேடும் போது மனம் பலரிடம் செல்வது இயற்கை. இயற்கை என்பதால் அது தர்மமாகிவிடாது. இந்த அதர்மம் இந்தியா தானே வலுவில் மேல்நாட்டினரிடமிருந்து பெற்றுக் கொண்டது என்பதை ஒரு மேல்நாட்டு ஆசிரியரே கூறியிருக்கிறார்!

லௌகிகப் பொருட்களின் மீதே வாலிபர்களின் நாட்டமெல்லாம் படிந்திருப்பது இன்றைய துர்ப்பாக்கியம். பத்திரிகைகளும், ஸினிமாக்களும் இத்தகைய உடற்பசி களுக்கே கள் வார்த்து, பசியைத் தூண்டிவிடுவதைக் கண்டு விசனித்து ராஜாஜி எழுதுகிறார்: "பௌதிகப் பொருள்களை மட்டுமே நாடுவதில் நாம் காட்டும் தீவிரத்தின் காரணமாக ஆத்மா என்று ஒன்று இருப்பதையே இளைஞர்கள் மறக்கும் நிலை ஏற்பட்டு விட்டது. 'நான் ஏன் கட்டுப்பட வேண்டும்?' என்று நினைத்துத் தவறாகச் செல்லும் வாலிபர்களுக்குப் பௌதிகம் ஏதும் சமாதானம் கூறமுடியாது. ஆத்மா ஒரு சூட்சுமப் பொருள்; அதற்கு உருவம் இல்லை; எடை இல்லை; அளவுகள் இல்லை; ஆனபடியால் அதனை நம்முடைய கண்ணுக்குத் தெரிகிற பணத்துக்காகவும், இதர பொருள்களுக்

காகவும் இழந்துவிட நாம் தயாராகி விட்டோம்.''

அப்படி இழந்தபின் ஏற்படுகிற விபரீதங்களைப் பார்த்தபின்தான் ஆத்மிகத்தின் அவசியம் தெரிகிறது. இளைஞர்களிடம் பொய்யும், சூதும், பயமும், பலவீனமும், எல்லாவற்றுக்கும் மேலாகத் தூய்மைக் குறைவும் உண்டாகி வருவது ஆத்மிகமும், மத நம்பிக்கையும் அழிந்ததால்தான் என்று தெரிகிறது. 'இனி, பகுத்தறிவினால் சமூகத்தைச் செவ்வையாக்க முடியாது. பகுத்தறிவு செல்ல வேண்டிய அளவுக்குச் சென்றாயிற்று. இனிமேல் எதிர்த் திசையில் செல்ல வேண்டும். மத உணர்வினால்தான் சமூகத்தைச் சீர்செய்ய வேண்டும்' என்று புகழ்பெற்ற சரித்திர நிபுணர் டோயன்பீ சமீபத்தில் கூறியிருக்கிறார்.

'நம்பிக்கை கூடாது; பகுத்தறிவுதான் வேண்டும்' என்று எவ்வளவுதான் முழங்கினாலும் மனித உள்ளம் தானாகவே சில நம்பிக்கைகளுக்கு உட்படத்தான் விரும்புகிறது. மத நம்பிக்கை போனால் அதனிடத்தில் வேறு நம்பிக்கைகள் தோன்றுகின்றன.

ஆண்டவனின் நியதியாக உள்ள ஆன்ம உணர்வுக்குக் கட்டுப்படாத மனித உள்ளம் அரசியல் கட்சிக்கும், தலைவர்களுக்கும் கட்டுப்பட முற்படுகிறது. நிரந்தர தர்மங்களுக்குப் பதிலாக மாறுபடும் கட்சிக் கொள்கைகளையும், சமயச் சின்னங்களுக்குப் பதிலாகக் கட்சிக் கொடிகளையும், தெய்வத்துக்குப் பதிலாக அரசியல் தலைவர்களையும், ஸினிமாக் கலைஞர்களையும், புரட்சி எழுத்தாளர்களையும், விளையாட்டு விற்பன்னர்களையும் இளைஞர்கள் 'பூஜை' செய்கிறார்கள். இந்தப் பூஜையில், சத்தியமும், தர்மமும் இதுவரை பெற்றிருந்த முக்கியத்துவம் தேய்ந்து விடுகிறது. புதிய பூஜை முறையில் மக்களின் உள்ளத்தைத் தூய்மைப்படுத்த எதுவுமே இல்லை. ஆனபடியால், சிறுகச் சிறுக நற்பண்புகள் மறைந்து தீமைகள் வலுக்கின்றன.

இந்தத் தீமைகளை இரண்டு மேல் நாட்டுப் பேரறிஞர்கள் எடுத்துக் காட்டி, 'இதற்கு மருந்து உங்களுடைய மரபிலேயே இருக்கிறது' என்று கூறியிருக்கிறார்கள். அந்த நல்லுரைகளிலிருந்தேனும் நாம் அறிவு பெறுவோமா?



# நமது பணி

**[ பெங்களூரில் நடைபெற்ற சுதந்திரக் கட்சியின் தேசிய மகாநாட்டில் தலைவர் ராஜாஜி நிகழ்த்திய தொடக்க உரை. ]**

இன்றைய நிலையில் பொதுத் தேர்தல்கள் தான் ஜனநாயகம்என்ற அமைப்பின் புறஅடையாளமாக உள்ளன. பொதுத் தேர்தல்களுக்கு ஜனநாயகத்தில் உள்ள நோக்கம் வேறு; சோஷலிஸ ஆட்சியில் உள்ள நோக்கம் வேறு. ஜனநாயகத்தில் மக்கள் தங்களுக்காக அரசாங்கத்தில் உழைத்து, அவசியம் நேரும் போது தங்களுக்கு வழி காட்டுபவர்களைத் தேர்வு செய்கிறார்கள். சோஷலிஸத்திலோ மக்கள் தங்களில் பெரும்பாலோர் யாருக்குக் கீழ் அடிமைகளாக இருக்க விரும்புகிறார்களோ அவர்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள். இதற்குக் காரணம், சோஷலிஸத்தில் உற்பத்திக்கான உபாயங்கள் சர்க்காரின் உடைமையாகவும், சர்க்காரின் கட்டுப்பாட்டிலும் உள்ளன. உபாயங்கள் மட்டுமின்றி இந்த உபாயங்களின் விளைவான உற்பத்தியும் சர்க்காரின் உடைமையாகவும், அதன் கட்டுப்பாட்டிலுமே இருக்கிறது. உபாயத்துக்கும் விளைவுக்குமிடையே உற்பத்தி செய்கிறவர்கள் யார்? அடிமைகள் தான். உற்பத்தி சாதனமும், உற்பத்தி விளைவும் முழுவதும் பிறர் கையிலேயே (சர்க்கார் கையிலேயே) இருக்க, தொழிலாளர்கள் உழைக்க மட்டுமே செய்கிறார்கள். இத்தகைய சோஷலிஸத்தை அப்பட்டமாகப் பின்பற்றாமல், தனியார் தொழிலையும் சர்க்கார் அநுமதித்துத் தன் கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டிருக்கும் போதும் சர்க்கார்தான் முதலாளியாக இருக்கிறது. மக்கள் அடிமைகளாகவே இருக்கிறார்கள். ஏனெனில், இந்தக் கலப்புப் பொருளாதாரத்திலும் மக்களுக்குச் சுதந்திரத் தொழிலுரிமை இல்லை. 'ஜனநாயக சோஷலிஸம்' எனப்படும் இந்த அமைப்பிலும் பொதுத் தேர்தல்கள் நடைபெறும். ஆனால் மக்களின் யஜமானர்களைத் தேர்ந்தெடுப்பதற்குத்தானே ஒழிய மக்களுக்காக உழைப்பவர்களை நியமிப்பதற்காக அல்ல.

இவ்வாறு மக்கள் தங்கள் சுதந்திரத்தை இழந்து வருவதைத் தடுப்பதற்குத்தான் சுதந்திரக் கட்சி தன்னை அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறது. காந்திஜியினால் ஆட்சியில் அமர்த்தப்பட்ட ஒரு கூட்டம் இன்று மக்களின் சுதந்திரத்தைப் பாதிக்கும் போக்கிலேயே செல்கிறது. அதனுடைய வசீகரண சக்திக்கு ஆட்பட்டுள்ள மக்களைத் தட்டி எழுப்பி, ஆபத்தை உணர்த்தி, அந்த ஆபத்தை விலக்கும் முறையில் அவர்களைச் செயல் புரியத் தூண்டுவதே நமது பணி. கடந்த நாலரை ஆண்டுகளாக இந்தப் பணியைச் செய்து வருகிறோம். நாம் அதிகமாக எதுவும்சாதித்து விடவில்லை என்று சிலர் சொல்லக் கூடும். எப்படி அதிகமாகச் சாதிக்க முடியும்? நாம் யாரை எதிர்க்கிறோமோ அவர்கள் சர்க்கார் சர்வாதினக் கொள்கையின் மூலம் எல்லா அதிகாரங்களையும் கைப் பற்றி, நாட்டின் பொருளாதாரத்தையே தங்கள் கையில் வைத்திருக்கும் போது நாம் அதிகமாகச் சாதிப்பது மிகவும் கடினமாகும். அறிவு, தீரம், தியாகம் இவற்றைக் கொண்டேதான் புதியதொரு கட்சி ஒவ்வொரு செங்கல்லாக வைத்துக் கட்டடம் எழுப்ப வேண்டும். அறிவாளிகள்தான் சோஷலிஸத்தின் மோசடியை உணர முடியும். ஆனால் அவர்கள் காரியத்தில் இறங்காமல் அசிரத்தையாகவே இருக்க விரும்புவார்கள். காங்கிரஸ் கட்சி பொது மக்களை மயக்கி இழுத்துக் கொள்வது போன்ற காரியமல்ல நம்முடையது. ''பொதுமக்கள் உங்கள் கட்சிக்குப் பேராதரவு காட்டவில்லை; விஷயம் தெரிந்தவர்கள்தான் இருக்கிறார்கள்'' என்கிறார்கள் சிலர். எதிரிகள் மட்டுமின்றி, நம்மிடம் நல்லெண்ணம் இருந்தும் பயத்தால் விலகி நிற்பவர்களும் இப்படிக் கூறுகிறார்கள். அப்படித்தான் இருக்கும். அறிவாளிகளும், தீரமுள்ளவர்களும், ஆத்மத் தியாகம் செய்யக் கூடியவர்களும், அஞ்சாதவர்களும், சிக்கல்களைப் புரிந்து கொள்ளக் கூடிய திறனுள்ளவர்களும்தான் எதிர்ப்புக் கட்சியை அமைக்க முடியும். வரம்பற்ற அதிகாரமுள்ள ஒரு கட்சி—சில தலைவர்களைக் காட்டி மக்களை மாய வசீகரணம் செய்து வைத்துள்ள ஒரு கட்சி—ஆட்சியில் இருக்கும்போது அதற்கு எதிர்ப்பு உருவாகும் ஆரம்ப தசையில் விஷயம் தெரிந்தவர்கள்தான் முக்கியம் பெற்றிருப்பார்கள்.

ஆளும் கட்சிக் கொள்கைகளின் நாசகரமான போக்கு வரிகளாகவும், விலைவாசிகளாகவும், மற்ற பல தோல்விகளாகவும் வெளிப்பட்டு வருகிறது. இது நமக்கு ஓரளவு உதவி புரிகிறது. என்றாலும் ஆளும் கட்சி தனது சாமர்த்தியத்தால் தோல்விகளுக்கும் தவறுகளுக்கும் பொய்க் காரணங்களும் விளக்கங்களும் தருகிறது. சூதுவாது தெரியாத மக்கள் அவற்றை நம்பி விடுகிறார்கள். எனவே நம் கட்சியின் வேலை மிகவும் கடினமானது; ஆனால் அவசியமானது; நாட்டு நலனுக்கு இன்றியமையாதது. மதத்தில் பக்தி என்பதற்கு எவ்வளவு உயர்ந்த பொருள் உள்ளதோ அவ்வளவு உயர்ந்த பக்தியுடனும், சிரத்தையுடனும், உழைப்புடனும், பிரார்த்தனையுடனும் நடத்த வேண்டிய பணி நம்முடையது.

இதையெல்லாம் எண்ணிப் பார்க்கும் போது நாம் நிறையச் சாதித்திருக்கிறோம் என்றே சொல்லலாம். ஆளும் கட்சிக்காரர்களிடம் ஓர் அவசியமான அச்ச உணர்வை நாம் உண்டாக்கி யிருக்கிறோம். பல தேர்தல்களில் அவர்களுக்குத் தோல்வி தந்திருக்கிறோம். மேலும் பல தரப் போகிறோம். ஆனால் இந்த வெற்றிகளை நாமே அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்க வேண்டாம்.

திருஷ்டிப் பட்டுவிடும்! வெற்றியைப் பற்றிப் பெருமையடித்துக் கொள்ள வேண்டாம்; தைரியம் மட்டும் பெறுவோமாக!

செல்வங்களை உற்பத்தி செய்யும் பொறுப்பைச் சர்க்காரிடம் ஒப்புவிப்பது நல்லதல்ல; உழைப்பிலிருந்து லாபம் பெற முடியும் என்று நம்பும் தனி மனிதர்கள்தான் தளரா முயற்சியோடு உற்பத்தியைப் பெருக்கு வார்கள்; தனி மனிதர்கள்தான் தங்கள் உழைப்பின் பலன் வீணாகி விடக் கூடாது என் பதில் அக்கறை காட்டி நஷ்டங்களைத் தவிர்ப் பார்கள் — என்பதை யெல்லாம் பொதுமக்கள் உணரும்படி நாம் செய்ய வேண்டும். 'தேச சுபிட்சம் என்பது செக்ரிடேரியட்டிலோ, திட்டக் கமிஷனின் அலுவலகத்திலோ இல்லை; வயல்வெளிகளிலும், ஆலைகளிலும்தான் உள் ளது: இவற்றைச் சொந்த அக்கறையுள்ள தனிமனிதர்கள் நிர்வகிக்கும் போதுதான் சுபிட்சம் காண முடியும்' என்பதை ஆளும் கூட்டத்திலுள்ள அறியாதவர்களுக்கும், எல்லா மக்களுக்கும் உணர்த்த வேண்டும். ஒரு சில தனிமனிதர்களிடம் பொருளா தார சக்திகள் குவிவது அபாயம்தான். அதே போல் காங்கிரஸ் கட்சியிடமும் அதற் குத் தாராளமாகப் பொருள் உதவி புரிகிற வர்களிடமும் மட்டுமே இந்தச் சக்திகள் குவி வதும் அபாயகரமானது என்பதை நாம் மக்களுக்கு உணர்த்த வேண்டும். ஒரே கட்சி யிடம் பொருளாதார சக்திகளும் அரசியல் அதிகாரங்களும் திரண்டிருப்பதால் உண்மை யான ஜனநாயகம் அழிந்துபோய் மேற் பார்வைக்கு மட்டுமே அதன் உருவம் நிற் கும் என்பதைப் பொதுஜனங்களுக்கு நாம் புரிய வைக்க வேண்டும்.

இப்போது நாம் செய்ய வேண்டியது எதிர்க் கட்சிகள் இணைந்த ஓர் ஐக்கிய முன்ன ணியை நிறுவிக் காங்கிரஸைத் தேர்தலில் தோல்வியுறச் செய்து அதன் மூலம் அக்கட்சி யின் அநீதமான அதிகாரத்தைக் குறைப்பது தான். உடனடியாக மற்ற கட்சிகளுடன் நாம் குறிப்பிட்ட ஓர் அம்சத்தில் இணைய வேண்டும் என்று யோசனை கூறுகிறேன். அதாவது: சர்க்கார் கட்டுப்பாட்டின் கீழ் பொருளா தாரம் இருக்கும் வரையில் அத்தகைய ஆட்சி யின் அங்கமாகிய பெர்மிட் — லைசென்ஸ் — கோட்டாக்களை யூனியனிலும், ராஜ்யங்களி லும் வழங்குவதற்கு ஓர் அரசியல் கட்சிச் சார்பில்லாத சுதந்திரமான போர்டு அமைக்க வேண்டும். இதை எல்லா எதிர்க் கட்சிகளும் சேர்ந்து வலியுறுத்த வேண்டும். ஸுப்ரீம் கோர்ட்டும் பப்ளிக் சர்விஸ் கமிஷனும், ஆடிட்டர் ஜெனராலும் பெற்றிருக்கும் சுதந் திரத்தை இந்த போர்டு பெற்றிருக்க வேண் டும். அரசியல்வாதிகள் இதன்மீது தங்கள் செல்வாக்கைப் பிரயோகித்தால் அது கடுமை யாகத் தண்டிக்கப்பட வேண்டும். அரசியல் சாஸனத்தின் மூன்றும் பிரிவு கூறும் மக்கள் சுதந்திர விதிகளை மாற்றி ஏக போக்கியம் உண்டாக்கும் தற்கால ஆட்சி முறையில் நேர்மையும் நீதியும் காண வேண்டுமானால் இத்தகைய போர்டு அத்தியாவசியமாகும். இதனால் அரசியல் லஞ்ச ஊழலைப் பெரும்பா லும் குறைக்கலாம். இந்த யோசனைக்குக் காங்கிரஸ் கட்சி இணங்காது என்பது நிச்சயம். அதை வைத்துக் கொண்டே, மற்ற கட்சிகள் காங்கிரஸின் ஊழலை வாக்காளருக்கு நிரூபித் துக் காட்டலாம். இவ்விஷயம் அரசியல் துறை, பொருளாதாரத் துறை இரண்டிலுமே மகத் தான முக்கியத்துவம் பொருந்தியதாகும். இதனை வற்புறுத்தி நாம் இணங்கச் செய் தால் அது நமக்கும் வெற்றி; மக்களுக்கும் வெற்றி. ஆளும் கட்சி நியாயமாக ஏற்க முடியாத கோரிக்கையல்ல அது.

சுதந்திரத்துக்கு நிரந்தரமான விரோதியாகி விட்டது காங்கிரஸ். சுதந்திர உணர்வைப் பரப்ப வேண்டும் என்ற உண்மையான ஆர்வ முள்ள அஞ்சா நெஞ்சு படைத்த ஆண், பெண் தொண்டர் படை சுதந்திரக் கட்சிக்கு வேண்டும். சுதந்திரக் கட்சிக்குப் பிரகாச மான எதிர்காலம் உள்ளது என்றே உலகத்து அறிவாளிகள் எல்லோரும் எண்ணுகிறார்கள். விரைவிலேயே நாம் மேன்மேலும் சக்தி பெறுவோமாக!

## ஸ்ரீ ஜகதீசன் மறைவு



சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி ஸ்ரீ ஜி. ஆர். ஜக தீசன் அவர்களின் மறைவுச் செய்தியைக் கேள்விப் பட்டவுடன் சட்டத் துறையில் மட்டுமின்றி சமய உணர்வுள்ள எல்லோருமே துயரம் அடைந்தனர். காரணம் ஸ்ரீ ஜகதீசன் அவர்கள் நிரந்தரமான நீதிபதி யாகிய ஆண்டவனை எப்போதும் மனத்தில் வைத்தே நிகழ்காலச் சட்டங்களை அணுகித் தீர்ப்புக் கூறினார். நாலாண்டுகளே அவர் நீதிபதியாக இருந்த போதிலும் தமது சுதந்திர உணர்வாலும், நேர்மை யான நடத்தையாலும் சென்னை உயர்நீதி மன்றத் தின் பெருமை பொருந்திய நீதிபதிகளிடையே இடம் பெற்றுவிட்டார் என்று அநுதாபக் கூட்டத்தில் பிரதம நீதிபதி ஸ்ரீ ராமச்சந்திரய்யர் கூறியதே ஸ்ரீ ஜகதீசனது சிறப்புப் பணிக்குச் சான்றாகும்.



ஆர். கே. நாராயணன்



டி. என். ராமச்சந்திரன்



காகா கலேல்கர்

இவ்வாண்டு குடியரசு தினத்தில் தேசிய விருதுபெற்ற பெருமக்களில் நமக்கு நன்கு பரிச்சயமாகியுள்ள சிலரின் புகைப்படங்களை இங்கு மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம். பத்மவிபூஷண் பட்டம் பெற்றுள்ள ஸ்ரீ காகா சாஹேப் கலேல்கர் அவர்கள் ஹிந்தி இலக்கியத்தில் பெற்றுள்ள புகழுக்கீடாக ஆங்கில இலக்கியத்தில் பெயரெடுத்தவர். பத்மபூஷணராகியுள்ள ஸ்ரீ ஆர்.கே. நாராயணன். புதைபொருள் ஆராய்ச்சியில் ஜோதிபெற்றுள்ள ஸ்ரீ டி. என். ராமச்சந்திரன் பத்மபூஷண் விருது பெற்றிருக்கிறார். நீண்டகால சமூக சேவகியான ஸ்ரீமதி அம்புஜம்மாளும், விளையாட்டுக்கலையில் புகழ் சூட்டியுள்ள கிரிக்கெட் ஸ்ரீ எம். ஜே. கோபாலன், ஹாக்கி ஸ்ரீ சரண்ஜித் சிங் ஆகியஇருவரும் 'பத்மஸ்ரீ' விருது பெற்றிருக்கிறார்கள். இவர்களுக்கும், விருது பெற்றுள்ள மற்ற யாவருக்கும் நம் வாழ்த்துக்கள்.

அம்புஜம்மாள்



எம். ஜே. கோபாலன்



சரண்ஜித் சிங்



# சஞ்சீவரெட்டி விவகாரம்

ஆந்திரத்திலிருந்து தொடுக்கப்பட்ட வழக்கொன்றில் சுப்ரீம் கோர்ட் அளித்திருக்கும் தீர்ப்பை வாசகர்கள் கூர்ந்து கவனித்திருப்பார்கள். ஆந்திர முதலமைச்சர் சொந்தக்காரணங்களை முன்னிட்டு சில பஸ்காரர்கள் மீது பழிவாங்க முனைந்திருக்கிறார் என்பது குற்றச்சாட்டு. பிரத்தியேகக் காரணங்களுக்காகக் கர்னூல் மாவட்டத்தின் மேற்குப் பகுதியிலுள்ள பஸ் ரூட்டுகளைத் தேசியமயமாக்கத் திட்டமிட்டிருக்கிறார் ஆந்திர முதன் மந்திரி திரு சஞ்சீவ ரெட்டி. இதனை எதிர்த்து அப்பகுதி பஸ் முதலாளிகள் செய்த அப்பீலை சுப்ரீம் கோர்ட் ஏற்று முதலமைச்சர் பாரபட்சமாக நடக்க முற்பட்டிருக்கிறார் என்பதை நம்பாமலிருப்பதற்கில்லை எனத் தீர்ப்பளித்திருக்கிறது.

இந்தத் தீர்ப்பைப் படிக்கும் பொதுமக்கள் புவனேசுவர மகாநாடு தந்திருக்கும் ஜனநாயக சோஷலிஸ தீர்மானத்தின் உள் நோக்கங்களை மிகச் சுலபமாகப் புரிந்து கொள்ளலாம். கட்சியையும் கட்சித் தலைவர்களையும் வளர்க்கவே சோஷலிஸம் என்ற பிரசார மந்திரம் பயன்படுத்தப்படுகிறது என்று சுதந்திரக் கட்சி கூறும் கூற்றுக்கு வேறு அத்தாட்சியே தேவையில்லை.

இதில் ஒரு மகிழ்ச்சி என்னவெனில் திரு சஞ்சீவ ரெட்டி அவர்கள், பஞ்சாப் முதன் மந்திரி கெய்ரோனைப் போலவோ, கேரள மந்திரி சாக்கோவைப் போலவோ பிடித்துத் தள்ளினாலும் போகமாட்டேன் என்று அடம் செய்யாமல் தீர்ப்பு வெளியான மறுதினமே தமது ராஜிநாமாவை அனுப்பியிருப்பதுதான்.

தலைமை நீதிமன்றம் ஆட்சித் தலைவரின் விஷயமாக ஒரு குற்றத்தை ஊர்ஜிதம் செய்யும் வகையில் தீர்ப்புக் கூறியபின், அதற்கு மறு பேச்சுப் பேசாமல் பணிந்து பதவியைத் துறப்பதுதான் யுக்தமாகும் என்று அவர் கூறியிருப்பதைப் பாராட்டுகிறோம்.




44

முதல் ஆழ்வார்கள் ஏற்றிய ஞான தீபத்துடன் தொடங்கிய இந்தக் கட்டுரைத் தொடரைப் பேயாழ்வார் ஏற்றி வைக்கும் இன்னொரு தீபப் பாடலுடன் முடிப்போமாக.

**உய்த்துணர்வு என்னும்**
**ஒளிகொள் விளக்கேற்றி**
**வைத்துஅவனை நாடி**
**வலைப்படுத்தேன் —**

*[ உணர்வு — ஞானம். உணர்வு என்னும் ஒளிகொள் விளக்கு ஏற்றிவைத்து — ஞானம் என்கிற பிரகாசமான விளக்கை உள்ளத்திலே ஏற்றி வைத்து. உய்த்து அவனை நாடி வலைப் படுத்தேன் — பக்தியும் ஆர்வமும் செலுத்திக் தேடி இறைவனை வலையில் பிடிப்பதுபோல் என் உள்ளத்தில் பிடித்துக் கொண்டு விட்டேன். ]*

ஞானம் என்பது வைஷ்ணவ பரம்பரையில் முற்றிய பக்தியாகவே கொள்கிறார்கள்.

**—மெத்தனவே**
**நின்றான் இருந்தான்**
**கிடந்தான்என் நெஞ்சத்துப்**
**பொன்றாமை மாயன்**
**புகுந்து**

*[மெத்தெனவே — சிரமம் இல்லாமல். மாயன் - திருமால். பொன்றாமை - பொன்றா மல், நீங்காமல். புகுந்து-உட்புகுந்து. என் நெஞ்சத்து நின்றான் இருந்தான் கிடந்தான் - என் உள்ளத்திலே வந்து நிற்பதும் இருப்பதும் பள்ளி கொள்வதும் ஆனான்.]*

திருமால் நிற்பதும் இருப்பதும் கிடப்பதுமாகப் பல க்ஷேத்திரங்களில் கோலம் காட்டுகிறான். அந்தக் கோலங் கள் அனைத்தையும் என்னுடைய பக்தி யின் பலத்தைக் கொண்டு என் உள்ளத் திலே நிர்மாணித்து விட்டேன் என்று மகிழ்ச்சி பரவசமாகப் பாடுகிறார் ஆழ் வார்! இருள் மண்டிய இதயத்திலே உணர்வு என்னும் விளக்கை ஏற்றி வைத்து இறைவனை நாடினேமானால் அவன் அந்த உள்ளத்தில் வந்து கோயில் கொள்ளும்படி செய்யக்கூடும் என்பது விஷயம்.

**உய்த்துணர்வு என்னும்**
**ஒளிகொள் விளக்கேற்றி**
**வைத்தவனை நாடி**
**வலைப்படுத்தேன் - மெத்தெனவே**
**நின்றான் இருந்தான்**
**கிடந்தான்என் நெஞ்சத்துப்**
**பொன்றாமை மாயன்**
**புகுந்து.**

ஆராய்ச்சிச் சிக்கல்களை, அந்த முயற்சி அசாத்தியம் என்று தள்ளி விட்டு, பக்தியே ஞானத்தின் சிகரம் என்று ஐயமறக் கடைப்பிடித்து, பக வானை உள்ளத்தில் நிறுத்தி ஆராதிப் பதே வைஷ்ணவ பரம்பரை இரகசியம். வைஷ்ணவ பரம்பரை என்று சொன்ன தினால் சைவ சமயம் வேறு என்ப தல்ல. கடினமான சுத்த ஞான மார்க்கத்தில் காலம் கழிக்காமல் பக்தி மார்க்கத்தைக் கடைப்பிடிப்பதைச் சைவ சமயமும் போதிக்கிறது.

**கற்றாரை யான்வேண்டேன்**
**கற்பனவும் இனிஅமையும்**
**குற்றாலத் தமர்ந்துறையும்**
**கூத்தாஉன் குரைகழற்கே**
**கற்றாவின் மனம்போலக்**
**கசிந்துருக வேண்டுவனே**

*[கற்றா — கன்று + ஆ. கன்றையுடைய தாய்ப் பசு.]*

என்றார் மாணிக்கவாசகர்.

கன்றின்மீது தாய்ப் பசு வைத்திருக் கும் அன்பைப்போல் பகவானுக்கு நாம் உருக வேண்டும். இதுவே சைவமும் வைஷ்ணவமும்! (முற்றும்)



# ஸ்ரீ ஏ. வி. ராமன் நினைவு

சென்னை அரசாங்கத்தின் சார்பில் முதன் மந்திரி திரு பக்தவத்சலம் அவர்கள் ஒரு சிறந்த நற்பணி புரிய ஒப்புக் கொண்டமைக்கு அவரைப் பாராட்டுகிறோம். காலஞ்சென்ற ஸ்ரீ ஏ. வி. ராமன் அவர்களின் ஆறுவது சிராத்த தினத்தன்று (24—1—64) அவரது புதல்வர் ஸ்ரீ வி. பி. ராமன் அவர்கள் தமது தந்தையார் அவர்கள் அருமையாகச் சேகரித்த ஆங்கிலம், தமிழ் அகராதியின் (35 பாகங்கள்) கையெழுத்துப் பிரதியை, ஸ்ரீ பக்தவத்சலம் அவர்களிடம் ஒப்படைத்தார். ஸ்ரீ பக்தவத்சலம் அவர்கள் இந்தத் தமிழ் அகராதியைச் சென்னை சர்க்கார் சார்பில் வெளியிட முடிவு செய்திருப்பதாகக் கூறியதைக் கேட்டு ஸ்ரீ ஏ. வி. ராமன் அவர்களையும், அவர் இப்பணியில் எடுத்துக் கொண்ட ஆர்வத்தையும், முயற்சியையும் நேரில் கண்ட நூற்றுக் கணக்கான அன்பர்கள் பெரு மகிழ்ச்சியடைந்திருக்கின்றனர். ஒரு பெரிய ஸ்தாபனம், பல புலவர்களும், மேதைகளும் சேர்ந்து செய்ய வேண்டிய பெரும் பணியை ஸ்ரீ ஏ. வி. ராமன் அவர்கள் ஒருவரே தமக்குத் தமிழ் அன்னையின் மீதிருந்த அளவு கடந்தபற்றின் காரணமாக மேற்கொண்டார். ஸ்ரீ ஏ. வி. ராமன் ஆங்கிலப் புலமை பெற்றவர்; இங்கிலாந்தில் வாழ்ந்து, ஆங்கிலேயர்கள் தங்கள் மொழிக்கு எப்படி ஆக்கம் தேடுகிறார்கள் என்று கண்டவர். ஆங்கிலத்தை விட மிக மிகப் பழைமையான தமிழ், ஆங்கிலத்தை விடப் பலவீனமானதாக இருக்க முடியாது என்று கண்டார். ஆங்கிலத்தில் வெளியிடக் கூடிய பல கருத்துக்களுக்குத் தமிழில் சொற்கள் கிடையாது என்பதை ஒப்புக் கொள்ள இயலவில்லை. ஓர் ஆராய்ச்சி புரியும் மாணவனின் ஆர்வத்தோடு, கம்ப ராமாயணம், சிலப்பதிகாரம், சங்க நூல்கள் முதலியவற்றை முறையே பயின்றார். அப்போதுதான் பலப்பல அரிய சொற்கள் தமிழில் இருப்பதைக் கண்டார். அவை வழக்கு ஒழிந்திருப்பதையும் கண்டார். அவற்றை வழக்குக்குக் கொண்டு வந்தால் தமிழ் புத்தொளி பெற்று விளங்கும் என்று நம்பினார். அந்த நம்பிக்கையின் விளைவாக அகராதி ஒன்றினைத் தயாரிக்கவும் ஆரம்பித்தார்.

இப்படிப் பழந் தமிழ் நூல்களில் சொற்களைத் தேடிய ஸ்ரீ ஏ. வி. ராமன் அவர்கள் இன்று நாட்டில் மக்கள் நாவில் வழங்கும் சொற்களையும் சொற்றொடர்களையும், பழமொழிகளையும் கூர்ந்து கேட்டு அனுபவிக்கும் உள்ளப் பாங்கும் பெற்றிருந்தார். அதன் காரணமாகவே பல்லாயிரக் கணக்கில் பழமொழிகளைத் தொகுத்தார். அவற்றில் சிலவற்றைக் கல்கி நேயர்களுக்கும் ஏற்கெனவே அறிமுகப்படுத்தி வைத்திருக்கிறோம். இப்பொழுது அவற்றையும் புத்தக வடிவில் வெளியிடப் போவதாக ஸ்ரீ வி. பி. ராமன் அவர்கள் ஒரு நற்செய்தியைத் தமிழ் அன்பர்களுக்கு அளித்தார். அன்றைய நினைவுக் கூட்டத்தில், "காலஞ்சென்ற ஏ. வி. ராமன் சானிட்டரி என்ஜினீயராக மட்டும் இருக்கவில்லை, தமக்குக் கீழ் வேலை செய்யும் ஊழியர்களின் ஒழுக்கத்தையும் காப்பவராக விளங்கினார்" என்றார் ராஜாஜி.

# பட்டினத்துப் பேச்சு

—காசி—

''மேன்மை தங்கிய யமதர்ம ராஜா அவர்களிடமிருந்து நோட்டீஸ் வந்தாலன்றி எந்த வியாதியஸ்தரும் ஜெனரல் ஆஸ்பத்திரிக்குப் போவதைப் பற்றி எண்ணுவதில்லை. ஏனென்றால் சிபாரிசு இருந்தாலொழியச் சாதாரண ஜனங்களுக்கு அங்கே இடம் கிடைப்பதில்லை. உயிர் போகிறது என்றாலும், வைத்திய அதிகாரி 'நாளை வா' என்று சொல்லி அனுப்பி விடுகிறார்கள்'' என்று கௌன்ஸில் சபையில் ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய ஐயர் கூறினார்.



இதிலிருந்து வைத்தியர்களெல்லாம் கம்பராமாயணத்தைப்படிக்கிறார்கள், – அல்லது அக்காலட்சேபங்களுக்குச் சென்றுவருகிறார்கள் என்பது நிச்சயமாகிறது. ஸ்ரீ ராமன் இராவணனைப் பார்த்து 'இன்று போய் நாளை வா!' என்று கூறியது அவர்கள் காதுகளில் ஸ்டெதாஸ்கோப்பு வழியாக ஒலித்துக் கொண்டே யிருக்க வேண்டும்.

ஃ ஃ ஃ

இந்த நபர் மதுபானம் செய்யாவிட்டால் இறந்தே போய்விடுவான் என்ற முறையில் வைத்தியர்கள் சர்டிபிகேட் கொடுக்கிறார்கள். அப்படிச் சிலர் குடிக்காமல் இறந்து போவதாயிருந்தால் போகட்டும்.

—கௌன்சிலில் ஸ்ரீ எம். ஜி. ராமச்சந்திரன்

ஃ ஃ ஃ

அதே அங்கத்தினர் 'ஸினிமாப் படப் பிடிப்பைத் தேசிய மயமாக்க வேண்டும்' என்று ஓர் ஆபத்தான யோசனையையும் கூறினார். தேசிய மயமாக்குவதைப் பற்றி அவர் அரசாங்கத்துக்கு யோசனை கூறுவது 'கொல்லன் தெருவில் ஊசி விற்பது' போலிருக்குமல்லவா?

அரசாங்கமே படம் எடுப்பதாயிருந்தால் ஆரம்பத்தை மட்டும் கற்பனை செய்து பார்க்கலாமா? முதலில் நட்சத்திரங்களைப் பொறுக்குவதற்காக ஒரு ஸினிமா ஸ்டார்ஸ் கமிஷன் ஏற்படுத்துவார்கள். அது 1963ம் வருஷம் பிப்ரவரி மாதத்தில் எல்லாப் பத்திரிகைகளிலும் விளம்பரம் செய்யும். செப்டம்பர் மாதத்தில் எழுத்துப் பரீட்சை நடக்கும். 1964ம் வருஷம் மார்ச் மாதத்தில் பரீட்சை முடிவு தெரிய வரும். ஆகஸ்ட் மாதத்தில் ஸ்கிரீன் டெஸ்டுக்குக் கூப்பிடுவார்கள். 1965ம் வருஷத்தில் அதன் முடிவு தெரிய வரும்.....

சாதாரணமாக, சொந்தப் பணம் போட்டுப் படம் பிடிப்பவர்கள் விஷயத்திலேயே எத்தனையோ தாமதமும், அநாவசியச் செலவும் ஏற்பட்டு வருகின்றன: இந்த அம்சத்தைப் பரிகசித்துஒருவர் ''ஒநாயைத் தருவித்தது யார்?'' என்று ஒரு நாவல் எழுதியிருக்கிறார். படக் கதை எப்படி இருக்க வேண்டுமென்று நிர்ணயித்தபோது அதில் இரண்டு ஒநாய்களைப் புகுத்த வேண்டுமென்று தீர்மானித்தனர். இரண்டு வருஷங்கள் கழித்துப் படம் பிடிக்க ஆரம்பித்தபோது கதை உருவம் தலைகீழாக மாறியது. அதில் ஒநாய்களுக்கே இடமில்லை. ஒநாய்களுக்குச் சொந்தக்காரர் ''ஒநாய் குட்டி போட்டிருக்கிறது. அதற்கும் பணம் தரவேண்டும்'' என்று கேட்டபோது தான் ஒநாய்கள் தருவித்து வைத்திருப்பது பட முதலாளிக்குத் தெரிய வந்ததாம்.

அரசாங்கம் அயல் நாடுகளிலிருந்து தருவிக்கும் ஜீப்கள், டிராக்டர்கள் அடங்கிய எத்தனையோ பெட்டிகள் வருஷக் கணக்காக உடைக்கப்படாமல் துறைமுகத்திலேயே கரையான் பிடிக்கும் சம்பவங்களைப் பற்றிக் கேட்டிருக்கிறோம். அவர்கள் ஸினிமாவில் தலையிட்டால் ஒநாய்களுக்குக் கொள்ளுப் பேரன் பேத்தி பிறந்தால்கூட அது அவர்கள் கவனத்துக்கு வராது!

ஃ ஃ ஃ

பம்பாயில் நடைபெற்ற இரண்டாவது கிரிக்கெட் 'டெஸ்ட் மாட்ச்'சில் ஆங்கிலக் கோஷ்டியைச் சேர்ந்த ஸ்டுவர்ட் என்ற ஆட்டக்காரர் ஆடிக் கொண்டிருக்கும் போதே தேக அசௌக்கியமுற்றார். அவருக்குப் பதிலாக 'எதிர்க் கட்சி'யைச் சேர்ந்த நமது கிருபால் சிங் ஆங்கிலக் கோஷ்டியில் ஆடினார்! இதுபோன்று ஆடுவது அதிசயம், கிரிக்கெட் சரித்திரத்தில் இதுதான் முதல் தடவை.

ஆனால் அதை விடப் பெரிய அதிசயத்தை நான் பல வருஷங்களுக்கு முன் பார்த்திருக்கிறேன். ஒரு டென்னிஸ் ஆட்டம். அதில் ஒரு பக்கம் நின்று பந்தை அடிப்பவர் உடனே எதிர்ப் பக்கம் பாய்ந்து சென்று திரும்பத் தாமே அந்தப் பந்தை அடிக்கிறார். 'மிக்கி மௌஸ்', வால்ட் டிஸ்னியின் படமொன்றில் இப்படிச் செய்தது!

ஃ ஃ ஃ

சென்னை அரசாங்கத்துக்கே நூற்றுக்கு நூறு சொந்தமான ஒரு பஸ் திருவல்லிக்கேணியில் 'என்னைக் கிளப்பிவிடு, பார்க்கலாம்!' என்ற விளையாட்டு விளையாடிற்று. அப்போது கண்டக்டர் தங்களை அதைப் பிடித்துத் தள்ளச் செய்தார் என்று இரண்டு சட்டசபை ஸ்திரீ அங்கத்தினர்கள் புகார் செய்தார்கள்.



'''நன்றிகெட்ட ஸ்திரீகள்! அவர்கள் நன்றாகப் பலமாகத் தள்ளவில்லை' என்று நாங்கள் கோபித்துக்கொள்ளாமல் விட்டு விட்டோமே!'' என்று கண்டக்டரும், டிரைவரும் பதிலுக்குப் புகார் செய்யக் கூடும்.

# நடப்பவைதான் நம்புங்கள்

— ஐராவதம் —

"மாதவரம் அரசாங்கப் பால் பண்ணையிலிருந்து வரும் பால் பாட்டிலில் பாலுடன் கூட ஒன்றரை அங்குல நீளமுள்ள ஒரு மீனும் இருந்தது'' — ''ஆந்திர அரசாங்கச் சிவப்பு நாடா காரணமாகஒரு சிறிய பாலம் கட்டும் வேலை ஏழு வருஷங்கள் வரை ஒத்திப் போடப்பட்டது என்று முதன் மந்திரி சஞ்சீவ ரெட்டியே தெரிவித்தார்!'' — இத்தகைய செய்திகளைச் சொன்னால் 'நமது காங்கிரஸ் ஆட்சியில் இதெல்லாம் என்னய்யா பிரமாத அதிசயம்?' என்று எண்ணத் தோன்றும். ''சென்னையில் பள்ளிக்குச் சென்றுகொண்டிருந்த ஒன்பது வயதுப் பையன் ஒருவனைப் பிடித்துக் கொண்டு போய் ரகசியமாய்க் கட்டுக் காவலில் வைத்திருந்தவர்கள், அவன் தகப்பனுக்குப் போன் செய்து ரூ. 26,000 கொடுத்தால் மகனை மீண்டும் காணலாம் என்றார்கள்'' — இப்படிக் கூறினால், 'உலகில் நாலு நல்லவர்கள் இருந்தால் இதயமற்ற கொடியவர்களும் ஒரிருவர் இருக்கத்தான் செய்வார்கள்' என்று கருதத் தோன்றும்.



இதயமற்றவர்கள் ஒருபுறமிருக்கப் பலவீனமான இதயம் கொண்டவர்களின் எதிர்காலம் என்ன? கவலை வேண்டாம் என்றுதான் கூறத் தோன்றுகிறது. இருதயம் பலவீனப்பட்டு எப்போது நின்றுவிடுமோ என்று இறந்து விடுவாரோ என்றிருக்கிற நிலையில்கூட மின்சாரத்தினால் இதயத்தை இயங்க வைக்கிறார்கள் இப்போது. ஆப்பரேஷன் செய்து பாட்டரியை உள்ளுக்குள்ளேயே வைத்து இரண்டு பிளாட்டினம் கம்பிகளால் இருதயத்துடன் இணைக்கிறார்கள். பாட்டரியிலிருந்து சதா மின்அலைகள் பாய்ந்து சென்று இருதயத்தை இயக்கிக்கொண்டே இருக்கும். பாட்டரியின் சக்தி மூன்று வருடங்கள் நீடிக்கும். பிறகு மீண்டும் ஆப்பரேஷன் செய்து அதனைப் புதுப்பிக்க வேண்டும். பாட்டரி ஒன்று உடலில் இருப்பதே தெரியாமல் எத்தனையோ உறுப்புக்களில் ஒன்று போல் மாறி விடுகிறதாம். அதிகமான உடல் உழைப்புத் தேவைப்படாத அன்றாட அலுவல்களை நிம்மதியாகக் கவனித்து வரலாமாம். இவ்வாறு பாட்டரியால் இயக்குவிக்கப்படும் இருதயம் படைத்த மாக்ஸ் லாங்கே என்ற இருபத்தோரு வயது இளைஞர் ஒருவர் சமீபத்தில் ஜூனிச்சில் திருமணம் கூடப் புரிந்து கொண்டார்!



ஃ ஃ ஃ

❁ ரத்த தானம், கண் தானம், விரல் தானம் என்றெல்லாம் இருப்பது போல் இப்போது இருதய தானம் கூடச் செய்யலாம் என்கிற நிலை ஏற்பட்டிருக்கிறது. அமெரிக்காவில் பல வருஷங்களுக்கு மேலாக இருதய நோயினால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த ஒருவர் சாகும் தறுவாயில் இருந்தார். அப்போது ஏற்கனவே இறந்துவிட்ட ஒருவரது இருதயத்தை எடுத்துப் பழுதான இருதயத்துக்குப் பதிலாக வைத்துத் தைத்தார்கள். இவ்வாறு உடல் மாறிய இருதயம் ஒரு மணி நேரத்துக்கு இயங்கியதாம்! சஸ்திர சிகிச்சைத் துறையில் இது மிகப் பெரிய சாதனையாகும். இதற்கு முன்னால் இத்தகையதொரு சிகிச்சை முறை கையாளப்பட்டதே கிடையாது. மூன்று மணிநேரம் ஆப்பரேஷன் நடந்தது. தானம் கொடுக்கப்பட்ட இருதயம் நோயாளியின் பெரிய உடலுக்கு ஏற்றாற் போல் அமையாமல் சிறியதாக இருந்துவிட்டதாம். சரியான அளவுள்ள இருதயம் அந்தத் தருணத்தில் கிடைத்திருந்தால் நூற்றுக்குத் தொண்ணூறு சத விகிதம் அந்த மனிதர் புனர்ஜன்மம் எடுத்திருக்கக்கூடும்.

ஃ ஃ ஃ

❁ அமெரிக்க ஆரணங்குகள் தங்களைக் 'காதல் வீரர்'களிடமிருந்து காப்பாற்றிக் கொள்ளப் பேனா போன்ற தோற்றமுடைய ஒரு நவீனத் துப்பாக்கியைக் கைப்பையில் போட்டு வைத்துக் கொள்கிறார்கள். ஐந்தங்குல நீளமுள்ள இந்தத் துப்பாக்கியை வெடித்தால் கண்ணீர்ப் புகை 'குபுக்'கென்று வெளிவந்து எதிராளியைக் கண்ணீர் வெள்ளத்தில் ஆழ்த்தி விடுகிறது. அந்தப் பெண் தப்பி ஓடுகின்ற அழகைக்கூட அவனால் பார்க்க முடியாது!

ஃ ஃ ஃ

❁ பாட்டியாலாவைச் சேர்ந்த நிடாம்பூர்க் கிராமப் பஞ்சாயத்துத் தலைவர் பதவிக்கு இரண்டு கோஷ்டியினர் தங்களுக்குள் யாரைப் பொறுக்கி எடுப்பது என்பதைப் பற்றிக் கடைசி நிமிஷம்வரை தகராறு செய்து கொண்டிருந்தனர். நியமனப் பத்திரம் தாக்கல் செய்வதற்கு ஐந்து நிமிஷங்கள் இருக்கும் போது கிராமவாசிகளில் ஒருவர் ஓடிப்போய்த் தாது மனுவைத் தாக்கல் செய்து தலைவராகி விட்டார்! எப்படி அவர் சாமர்த்தியம்!



சென்னை ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்ட்ரீஸ் சங்க பொதுக் காரியதரிசி ஸ்ரீ வி. வி. நாதன் அவர்கள் குமாரி சௌபாக்யவதி **அன்னபூரணி** (ஜான்சி)க்கும் திருச்சி ஹெவி எலக்ட்ரிகல்ஸ் (இந்தியா) லிட். ஸ்தாபனத்தைச் சார்ந்த சிரஞ்சீவி **என். சங்கரன்.,** M. Tech. அவர்களுக்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க, மணமக்கள்!

# இமாலயத் தவறு

**ப**ல வருஷங்களுக்கு முன், பலத்த எதிர்ப்புக்களுக் கிடையே, சாங்கோபாங்கமாக விவாதிக்கப்பட்டும், மறியல் போன்ற தீவிர இயக்கங்களுக்கும் பிறகு தேசப் பிதா மகாத்மா காந்தியடிகளின் ஆசியுடன் பூரண மதுவிலக்குக் கொள்கை உருவாயிற்று. நாட்டின் பல மாகாணங்களில் காங்கிரஸ் ஆட்சியின் திட்டங்களில் ஒரு பெரும் அம்சமாக அன்று இது மக்களால் அங்கீகரிக்கப்பட்டது. மக்களின் ஆதரவுடன் சட்ட பூர்வமாக அமுலுக்குக் கொண்டு வரப்பட்டது. இந்திய அரசியல் சாஸனத்தில் ஒரு நிரந்தர இடமும் பெற்றது. சரித்திரப் பிரசித்தியடைந்து நாட்டின் விடுதலைப் போரின் சாதனைகளுள் ஒன்றாகவும் பாவிக்கப்பட்டு வந்திருக்கிறது.

பல இடங்களில் திருட்டுச் சாராயம் காய்ச்சப்படுவதாலும் அதையடுத்து லஞ்சம்முதலிய குற்ற வழக்குகள் பெருகி வருவதாலும் பலருக்குக் கவலையுண்டாகி இந்தக் கொள்கையை அடுத்து மீண்டும் சிந்தனை ஏற்பட்டிருக்கிறது.

மதுவிலக்கு வேண்டாம் என்று இன்று எவராவது கூறுவார்களேயானால் அவர்கள் மீண்டும் ஜனங்கள் பெரிய அளவில் குடிப்பழக்கத்தில் விழுவதையும், அதனால் சர்க்கார் பயன் பெறும் ஒரு ஸ்திரமான சூழ்நிலையை ஏற்படுத்தியதுமான ஒரு பெரும் குற்றத்துக்கு ஆளாவார்கள்.

மதுவிலக்கைத் தளர்த்தி விட்டு அரசாங்க அங்கீகாரத்தில் சாராய விநியோகம் நடக்கும் போதும், திருட்டுக் கள் இறக்கப்படும், சாராயம் காய்ச்சி விநியோகிக்கப்படும். குற்றத்தின் கடுமை அதிகரிக்கும். சட்டத்தைக் காப்பாற்றுவதில் தொல்லைகள் அதிகரிக்கும். அப்பொழுதும் நிர்வாகத் தோல்வியைக் கேவலமான அளவில் காண்போம்.

சட்டத்தை மீறுபவர்களை எதிர்த்து நடவடிக்கை எடுக்க இயலவில்லை என்பதற்காகச் சட்டத்தையே கைவிடும் மரபை ஏற்படுத்தினால், இது வேறு பல படுகுழிகளில் நம்மைக் கொண்டு போய்த் தள்ளிவிடும். பொதுவாகவே சட்டத்தை மீறுபவர்களுக்கு இது ஆக்கத்தையும் ஊக்கத்தையும் அளிக்கும். எவ்வளவோ சட்ட விரோதமான குற்றங்கள் நடைபெறுகின்றன. அதற்காகப் பயந்து சட்டங்களையே ரத்து செய்து விட்டோமா? அதிர்ஷ்டவசமாக இன்னும் ஆட்சி பீடத்தில் வழிகாட்டுபவர்கள் இந்தத் துர்ப்போதனைக்குச் செவி சாய்க்கவில்லை.



மதுவிலக்கை ரத்து செய்வதற்கோ தளர்த்துவதற்கோ எடுத்துக் காட்டப்படும் சில காரணங்களைச் சீர்தூக்கிப் பார்க்கலாம்.

மதுவிலக்கினால் அரசாங்க வருவாய் குறைகிறதென்று சொல்லப்படுகிறது.

மதுவிலக்கு அமுலில் உள்ள பிரதேசங்களில் அது அமுலுக்கு வந்த காலத்தில் அதனால் ஏற்படக்கூடிய வரி நஷ்டத்துக்கு ஈடாக மாற்று வரியாக விற்பனை வரி போடப்பட்டு, இன்று அது சர்க்காரின் தங்கக் கரங்கமாக நிலவி வருகிறது.

மதுவிலக்கை ரத்து செய்யவேண்டும் என்று பேசப்படும்பொழுது, அதற்காகப் போட்ட மாற்று வரியைப் பற்றியும் ஒரு முடிவுக்கு வந்தாகவேண்டும். மதுவிலக்கை ரத்து செய்வதென்றால், அதன் மாற்று வரியான விற்பனை வரியை நீக்கவேண்டும். மதுவிலக்கை மட்டும் ரத்து செய்துவிட்டு அதற்காகப் போடப்பட்ட மாற்று வரியை மாத்திரம் வைத்துக்கொள்வது எவ்வாறு அரசியல் நீதி அல்லது முறையாகும்? நீதி பிழன்று நிதி சேர்ப்பதா?

பொருளாதார ரீதியில் பார்க்கும்போதும் மதுவிலக்கை ரத்து செய்வதோ தளர்த்துவதோ விபரீதத்தில் முடியும் என உணரலாம். இன்று பல்லாயிரங் கோடி ரூபாய்க் கணக்கில் திட்டங்களின் பெயரால் உள்நாட்டிலிருந்தும் வெளிநாட்டிலிருந்தும் கடன் மூலமாகவும் பண நோட்டு அச்சடிப்பதை அதிகப்படுத்தியும் பெரிய அளவில் திரட்டிச் செலவழிக்கிறோம். இச்செலவு நிரந்தர உற்பத்தி சாலைகளை நிறுவ மூலதனமாகப் பயன்பட வேண்டுமேயல்லாது அன்றாடச் செலவில் அழிந்து விடக் கூடாது. உழைப்பாளிகள் கையில் ஊதியமாகப் போகும் இந்தச் 'செயற்கைப் பணம்' (கடன் வாங்குதல் மூலமும் நோட்டு அச்சடிப்பு மூலமும் சிருஷ்டிக்கப்பட்ட பணம்) குடி சாராயம் போன்ற வீண் செலவில் அழிந்தால் பொருளாதாரம் நிலை குலைந்து விடும். தொழில் அல்லது வியாபாரம் செய்யத் தனிப்பட்ட மனிதன் கடனெழுப்பி அதை வீண் செலவில் விநியோகம் செய்தால் அவனுக்கு ஏற்படும் கதி போலவே நாட்டுக்கும் அதன் செல்வம் வீண் செலவில் அழிந்தாலும் ஏற்படும். மதுவிலக்கை ரத்து செய்வது இமாலயத் தவறு.

சென்னை
21—1—64 வி. ஆர். நரசிம்மன்

'கல்கி' 19—1—64ந் தேதி இதழில் 'அநுசுயா' எழுதியிருக்கும் 'பெண் வக்கீல்கள்' என்ற கட்டுரையில் ஒரு சிறிய பிழை ஏற்பட்டிருக்கிறது. ஓரிடத்தில் 'இதற்கு விதிவிலக்காகத் திருவனந்தபுரம் நீதிபதி ஸ்ரீமதி அன்னா மாஸ்கான்ஹாஸ் இருக்கிறார்' என்று கண்டிருக்கிறது. இது சரியல்ல. கேரளா ஹைகோர்ட்டில், இது எர்ணாகுளத்திலிருக்கிறது. உயர்தர நீதிபதி ஸ்தானத்தை வகிக்கும் பெண்மணி ஸ்ரீமதி அன்னாசேண்டி ஆவார். இவர் கேரள ராஜ்யத்தில் நீதி இலாகாவில் சேர்ந்து படிப்படியாக உயர்த்தப்பட்டுத் தற்போது நீதிபதியாயிருக்கிறார். இதுபோல் கேரளத்தில் ஸ்திரீகள் சப் ஜட்ஜாகவும் முதல் வகுப்பு மாஜிஸ்டிரேட்டாகவும் பணி புரிகிறார்கள்.

எர்ணாகுளம்
20—1—64 கல்யாணி

# அறிவுக் கனலே, அருட் புனலே!

53

ரா. கணபதி





முன்பின் தெரிந்திராத ஒருவன் அந்த வெயிலில் வேகு வேகு என்று ஸ்வாமிஜியை நோக்கி ஓடி வந்தான். ஒரே ஆனந்த பரவசமாக வந்தான்.

அவனது வலது கையில் ஒரு மூட்டையும் டம்ளரும் இடது கையில் ஒரு மண் கூஜாவும், கை இடுக்கில் ஒரு விரிப்பும் இருந்தன.

ஸ்டேஷனில் சுத்தமான ஓர் இடத்தில் விரிப்பை விரித்தான். மூட்டையைப் பிரித்து அதிலிருந்து நானாவித உணவுப் பண்டங்களைப் பரிமாறினான். மண் பானையிலிருந்து நீர் சரித்து வைத்தான்.

ஸ்வாமிஜியிடம் வந்து, ''பாபாஜி! உண்ண வாருங்கள்!'' என்று அழைத்தான்.

ஸ்வாமிஜிக்கு ஒன்றுமே புரியவில்லை. ''அப்பனே, என்னைத் தவறாக யாரோ என்றெண்ணி உபசரிக்கிறாய் போலிருக்கிறது'' என்றார்.

''அதெல்லாம் இல்லை; நான் கண்ட பாபாஜிதான் நீங்கள்'' என்றான் அவன்.

''நீ கண்டாயா? எங்கே? எப்போது?'' என்று கேட்டார் ஸ்வாமிஜி.

அவன் ஆரம்பித்தான். ''நான் இந்த ஊரில் பக்ஷணக் கடை வைத்திருப்பவன். இன்று மத்தியானம் வழக்கம் போல் சிறிது தூங்கப் படுத்தேன். தூக்கத்தில்... அதை என்ன சொல்வேன், போங்கள்! ஸ்ரீ ராம்ஜி ....ஆமாம்....ராம்ஜியேதான்... இந்த ஏழைக்குத் தரிசனம் தந்தார்! உங்களை எனக்குக் காட்டி, நீங்கள் நேற்றிலிருந்து பட்டினியாக இருப்பது தம்மை வருத்துகிறது என்று கூறினார். 'புதிதாகப் பணியாரங்கள் பண்ணி எடுத்துக் கொண்டு இப்போதே நீ ரயில் நிலையத்திலிருக்கும் அவரிடம் ஓடு' என்று ஆக்ஞாபித்தார். நான் சடேரென்று எழுந்தேன். ஏதோ வெறும் கனவுதான் என்று நினைத்து மீண்டும் உறங்க முயன்றேன். என்ன அதிருஷ்டம் பாருங்கள்! மறுபடியும் ரகுவீர் தோன்றினார். உங்களுக்கு உணவு படைக்குமாறு கட்டளை இட்டார். இதோ புதிதாகப் பூரியும் மிட்டாய்களும் செய்து கொண்டு வந்திருக்கிறேன், பாபாஜி! ''எழுந்திருந்து வாருங்கள்'' என்று முடித்தான்.

ஸ்வாமிஜியின் கண்கள் மாலை மாலையாக நீரைப் பொழிந்தன. ''கருணைக் கடலே, ராகவா! இத்தனை பரிவா உனக்கு?'' என்று விம்மினார்.

மிட்டாய்வாலாவுக்கு மனதார நன்றி கூறி உண்ண எழுந்தார் ஸ்வாமிஜி.

''பாபாஜி, எனக்கு நன்றி கூறுகிறீர்கள்! இதெல்லாம் ஸ்ரீராம்ஜியின் சித்தம்!'' என்றான் மிட்டாய்வாலா. ராமசந்திரப் பிரபு ஒருவன் கனவில் தோன்றி அன்பாணை இடவேண்டுமானால் அவன் எவ்வளவு பெரியவனாக இருக்கவேண்டும்?

இந்தக் காட்சியைக் கண்ட வணிகர் அதிசயமும், பச்சாத்தாபமும், அவமானமும் மேலிட ஸ்வாமிஜியின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

''மன்னிப்பா? உங்களை நான் எப்படி மன்னிப்பது?'' என்றார் ஸ்வாமிஜி. ''நீங்கள் குற்றம் செய்ததாக நினைத்தால்தானே உங்களை நான் மன்னிக்க வேண்டும்?'' என்றார் கனிவுச் சிரிப்புடன்.

அடைந்தவர்க்(கு) அருளான் ஆயின்
அறம் என்னும்? ஆண்மை என்னும்?

என்று உரைத்த ராகவன் தன் அறத்தையும் ஆண்மையையும் இன்றும் காக்கத் தயாராக இருக்கிறான். ஆனால் அவனை அடையத்தான் நாம் தயாராக இல்லை.

மலையில் தவழும் பாகீரதி சமவெளியைத் தீண்டும் புண்ணிய ஸ்தலமாகிய ஹரித்வாரத்துக்குக் கிளம்ப உத்தேசித்தார் ஸ்வாமிஜி. வழியில் ஹாத்ரஸ் என்ற ஊரில் ரயில் நிலைய வெளியில் அமர்ந்து தியானம் புரியலானார்.

ஹாத்ரஸில் ஸ்டேஷன் மாஸ்டராக இருந்த சரத் சந்திர குப்தா ஒரு வங்காளி. ஸ்டேஷன் மாஸ்டர் என்ற முறையில் பல யாத்திரிகர்களைக் கண்டவர் அவர். என்றாலும் இவரைப் போல எவரையும் அவர் கண்டதில்லை. ஸ்வாமிஜியின் அறிவுக் கனலான கண்களை அவரது கண்கள் சந்தித்தவுடனேயே அந்தக் கனலில் புடமாக வேண்டுமென்று அவரது தங்கமான உள்ளத்துக்குத் தாகமெடுத்தது. ''பார்த்தமாத்திரத்திலேயே அந்தக் கொள்ளிக் கண்களை நான் பின்தொடரலானேன்'' என்று பிற்பாடு சரத் சந்திர குப்தா வேடிக்கையாகக் கூறுவதுண்டு.

சுவாமிஜியும் சரத்தும் பரஸ்பரம் 'அறிமுகம்' செய்து கொண்டார்கள். அறிமுகம் என்று சொல்வது சரியல்ல. ஏதோ நெடும் பண்டைக்கால நட்பைப் புதுப்பித்துக் கொண்டாற்போலவே அவ்விருவரும் உணர்ந்தார்கள்.

''ஸ்வாமிஜி, தாங்கள் பசியாயிருக்கிறீர்களா?'' என்று பரிவோடு கேட்டார் சரத். ''ஆம்'' என்றார் ஸ்வாமிஜி. ''அப்படியானால் என் இல்லத்துக்கு வாருங்கள்'' என்று அழைப்பு விடுத்தார் சரத்.

''வந்தால் என்ன கொடுப்பாய்?'' என்று குழந்தை போல் வினவினார் ஸ்வாமிஜி.

''என் இதயத்தைக் கொண்டே இன் சுவைப் பணியாரம் செய்தளிப்பேன் அன்பே'' என்று தொடங்கும் பெர்ஷியப் பாடலொன்றைப் பாடினார் சரத்.

இருவரும் சரத்சந்திரரின் வீட்டை அடைந்தார்கள். அங்கு சென்றதும் ஸ்வாமிஜி ஒரு வங்காளிப் பாட்டை முணுமுணுத்தார் - ''திருநீறணிந்த திருமுகத்தோடு என் தோழன் வரவேணும்'' என்று.

சரத் சந்திரர் தமது அலுவல் உடுப்புக் களைக் களைந்து வேற்றுடை அணிந்து, சரத் சந்திர முகத்தில் விபூதி பூசிக் கொண்டு வந்தார். இருவரும் ஆனந்தமாக உண்டனர்.

ஸ்வாமிஜி ஹாத்ரஸில் தங்கியிருக்கும்போது உள்ளூரில் இருந்த வங்காளிகள் யாவரும் தமது பிராந்தியத்தைச் சேர்ந்த யௌவனத் துறவியை வந்து தரிசித்தபடி இருந்தனர். சமய விஷயங்களைப் பற்றி அவர்களிடம் பேசுவார் ஸ்வாமிஜி. மாலை வேளைகள் மதுர சங்கீதத்திலே கரையும்.

''ஏன், சிந்தாகுலமாகக் காணப்படுகிறீர்கள்?'' என்று ஒரு நாள் ஸ்வாமிஜியைக் கேட்டார் சரத்.

''குழந்தாய், மகத்தான பணியொன்றை நான் நிறைவேற்ற வேண்டியிருக்கிறது. பணியின் பெருமையையும் என் ஆற்றலின் சிறுமையையும் எண்ணினால் மனம் நொய்ந்து போகிறது. பெரிய காரியம் ஒன்றைச் சாதிக்கும்படி என் குரு எனக்கு ஆக்ஞை இட்டிருக்கிறார். அது நமது தாய் நாடு முழுவதற்கும் புத்துயிரளிக்கும் பெரும் பணியாகும். நாட்டில் ஆத்மிகம் என்பது அடி மட்டத்துக்கு வடிந்துவிட்டது. பஞ்சமும் பிணியும் தலை விரித்தாடுகின்றன. இந்தியா உத்வேகம் பெற வேண்டும். தனது ஆத்மிகத்தால் அகில உலகத்தையும் வென்றுகொள்ள வேண்டும்'' என்று உணர்ச்சி பொங்கக் கூறினார் ஸ்வாமிஜி.

அவரது ஆர்வம் சரத் சந்திரரை அப்படியே கட்டிப் போட்டு விட்டது. அவரிட்ட பணிக்குத் தம்மை இதயபூர்வமாக அளித்துக் கொள்ள முற்பட்டார் அவர். அந்தரங்க சுத்தத்துடன் ''ஸ்வாமிஜி, அடியேன் இதோ இருக்



''ரொம்பத் தொல்லையுங்க! என் வீட்டுச் சொந்தக்காரர் மாதம் முதல் தேதியன்று வாடகையைக் கேட்க வந்துவிடறாருங்க!''

''நீங்க அதிர்ஷ்டசாலி! உங்களுக்கு நல்ல வீட்டுக்காரராக வந்திருக்கிறார். என் வீட்டுச் சொந்தக்காரர் வாடகையைக் கேட்க, தினம் தினம் வந்து தொல்லை கொடுக்கிறாரே!''

---

கிறேன். தங்களின் பணிக்கு நான் என்ன செய்ய வேண்டுமென விரும்புகிறீர்கள்?'' எனக் கேட்டார்.

''கையில் கப்பரையும், கமண்டலுவும் எடுத்துக் கொண்டு வீடு வீடாகப் பிச்சை கேட்க உன்னால் முடியுமா?'' என்றார் ஸ்வாமிஜி.

''இதோ புறப்பட்டேன்!'' என்றார் சரத்.

கையில் கப்பரையை எடுத்துக் கொண்டு, தாம் எந்த ரயில் நிலையத்தில் ஸ்டேஷன் மாஸ்டராக இருந்தாரோ அதே நிலையத்தில் உள்ள போர்ட்டர்களிடம் பிச்சை கேட்டார்.

சந்நியாச யோகத்தில் இயற்கையாகவே நிலைத்த ஜீவன்கள் இந்தப் புவியில் வசிக்கத்தான் செய்கிறார்கள். அவர்களால்தான் இன்னமும் இந்தப் புவி வாழ்கிறது.

''நான் இந்த ஹாத்ரஸில் நீண்ட நாள் தங்கி விட்டேன். யதிகள் எங்கும் அதிக காலம் தங்கக் கூடாதென நியதி. மேலும் எனக்கு உங்களிடமெல்லாம் வேறு பந்தம் வளர்ந்து வருகிறது. நான் போக வேண்டும். தடை செய்யாதீர்கள்'' என்று ஒரு நாள் கேட்டுக்கொண்டார் ஸ்வாமிஜி.

மற்ற ஹாத்ரஸ் பக்தர்கள் ஸ்வாமிஜி போக சம்மதிக்காதபோது தமது இதயத்தையே அவருக்குப் படைத்த சரத் சந்திரர் மட்டும் ''பேஷாகப் போங்கள்'' என்றார். தொடர்ந்து, ''நானும் உடன் வருகிறேன் தெரியுமல்லவா?'' என்றார்.

ராமனுக்கு லக்குமணன் போன்ற அவர் ஸ்வாமிஜியிடமே சந்நியாச தீக்ஷையும் பெற்றார்.

ஸ்வாமிஜியும் சரத்தும் ஹ்ருஷீகேசத்துக்குப் புறப்பட்டார்கள். இந்திரியங்களை அடக்கி ஆளும் பகவான் ஹ்ருஷீகேசன். அவனது பெயர் தாங்கிய க்ஷேத்திரம் ஹிமாலயச் சாரலில் உள்ளது. இன்றைக்கும் எளிதில் சென்றடைய முடியாதது அது. எண்பதாண்டுகளுக்கு முன்னால் என்றால் கேட்பானேன்?

சரத் சந்திர குப்தா சௌக்கியமாக வாழ்ந்து பழகியவர். மலைப் பயணத்தின் கடுமையை அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அவருக்குக் குருவாக இருந்து உபதேசம் செய்த அதே ஸ்வாமிஜி, இப்போது தோழனாகவும், தாசனாகவும் இருந்து அவரது உள்ளத்தைத் தொட்டுவிட்டார்.

ஆழம் தெரிந்திராத காட்டாறுகள் குறுக்கிடும்போது ஸ்வாமிஜி முன்னால் சென்று சரத்தைப் பின்தொடரச் செய்வாராம்—ஆபத்து நேரிட்டால் தமக்கே அது நேரிடட்டும் என்று. சரத்துக்குக் காய்ச்சல் கண்டுவிட்டது. அப்போது அவரது உடைமைகளையெல்லாம் ஸ்வாமிஜியே சுமந்துகொண்டு சென்றார் — பாதரட்சை உள்பட. பிறிதொரு போது ''ஸ்வாமி, தாங்கள் என்னைக் கைவிடப் போகிறீர்களா?'' என்று சரத் ஸ்வாமிஜியைக் கேட்டார். அப்போது ஸ்வாமிஜி, ''முட்டாள், உன்னுடைய செருப்பைக்கூட நான் தூக்கியிருக்கிறேன் என்பதை மறந்து போனாயா?'' என்று நினைவுபடுத்தினார்.

இருவரும் ஹ்ருஷீகேசம் அடைந்தனர். சித்திர விசித்திரமாகத் திகழும் தலம் அது. ஏதோ ஓர் ஊரே உலகையெல்லாம் துறந்துவிட்டு, ஹிமோத்கிரியின் பாதத்தில் வந்து சாந்தியுடன் துறவியாக அமர்ந்திருப்பது போன்ற பதி அது. மலைகள் தன்னைச் சூழ்ந்திருக்க யார் கண்ணுக்கும் காணாமல் சந்நியாசம் அநுஷ்டித்துக் கொண்டிருந்தது ஹ்ருஷீ





சிரஞ்சீவி சுப்பிரமணியன்-சௌ. கண்ணகி — சிரஞ்சீவி சீனிவாசன்-சௌ. ராஜேஸ்வரி

பவானி பிரபல நூல் வியாபாரியும் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினருமான ஸ்ரீ எஸ். என். அர்த்தநாரிசாமி செட்டியார் அவர்கள் மூத்த குமாரன் சிரஞ்சீவி **சுப்பிரமணியனுக்கும்** சௌபாக்கியவதி **கண்ணகிக்கும்** இரண்டாவது குமாரன் சிரஞ்சீவி **சீனிவாசனுக்கும்** சௌபாக்கியவதி **ராஜேஸ்வரிக்கும்** சமீபத்தில் திருமணங்கள் வெகு சிறப்பாக நடைபெற்றன. மேற்படி திருமணங்களுக்கு தமிழ்நாடு கவர்னர் ஸ்ரீ விஷ்ணுராம் மேதி, அகில இந்திய காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ கே. காமராஜ், மத்திய அரசு மந்திரி ஸ்ரீ சி. சுப்பிரமணியம், தமிழ்நாடு முதலமைச்சர் ஸ்ரீ எம். பக்தவத்சலம் மற்றும் தமிழ்நாடு மந்திரிகளிடமிருந்தும், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ ஆர். கிருஷ்ணசாமி நாயுடு, சைவ சமயத்துறை பேரறிஞர் திருமுருக கிருபானந்த வாரியார் அவர்களிடமிருந்தும் மற்றும் பல பிரமுகர்களிடமிருந்தும் ஆசிச் செய்திகளும் வாழ்த்துரைகளும் வந்திருந்தன. தவிரவும் தமிழ்நாடு, மைசூர் ராஜ்யங்களிலிருந்து மில் அதிபர்களும் ஏராளமான நூல் வியாபாரிகளும் நண்பர்களும் வந்திருந்தனர்.

கேசம். அந்த க்ஷேத்திரத்தில் எங்கு பார்த்தாலும் காணப்படும் கூரை வேய்ந்த பர்ணசாலைகள் தூக்கி முடிந்த சடையோடு கூடிய சந்நியாசிகளைத் தான் நினைவூட்டும்.

புண்ணியப்பதியில் சரத் மீண்டும் ஜுரத்தில் விழுந்தார். கேதாரநாதத்துப் பரமேசனையும், பதரிநாதத்து ரமேசனையும் தரிசித்து வர எண்ணியிருந்த ஸ்வாமிஜி தம் திட்டத்தைக் கைவிடும்படியாயிற்று. சீடரை அழைத்துக் கொண்டு மீண்டும் ஹாத்ரஸ் வந்தார். வந்ததும் ஸ்வாமிஜிக்கும் ஜுரம் கண்டு விட்டது. ஹ்ருஷீகேசத்தில் பிடித்துக் கொண்ட மலேரியா இங்கு க்ஷய ரூபத்தைக் காட்டிவிட்டது. இவ்விஷயத்தை அறிந்த வர நகரத்து மடத்தினர் அவரை உடனே அங்கு வந்துவிடும்படி எழுதினர். ஜுரம் சற்றுத் தணிந்த போதிலும் மிகவும் பலவீனமாக இருந்த ஸ்வாமிஜி வர நகரத்துக்குப் புறப்பட்டார்.

சரத் சந்திரரிடம் விடை பெறுவது லேசில் முடிகிற காரியமாயில்லை.

கன்றையடைகிற தாய் போலப் பல மாதங்களுக்குப் பிறகு சரத் சந்திரர் வர நகரத்து மடத்தை அடைந்தார். அவரை இரண்டு கைகளாலும் வரவேற்றனர் அங்கிருந்த சந்நியாசிகள். சரத் சந்திரகுப்தா என்ற ஸ்டேஷன் மாஸ்டர் சதாநந்தர் என்ற சாதுவானார்.

1888ம் ஆண்டு இறுதியில் ஸ்வாமிஜி வரநகரம் திரும்பினார்.

அங்கிருந்தோருக்கு மக்கள் சேவை பற்றி வலியுறுத்தலானார் ஸ்வாமிஜி. தாம் கண்டதையும், கேட்டதையும் அவர்கள் யாவருக்கும் பொதுவான அநுபவமாக்கினார். வேரில் பாய்ச்சிய நீர் தரு முழுதிற்கும் செல்வது போல் ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தின் வேராக யிருந்து, சங்கத்தினர் யாவருக்கும் தம் அறிவைத் தந்து வந்தார் ஸ்வாமிஜி.

உண்மையான ஹிந்து மதத்தைக் காப்பாற்ற வேண்டுமானால் அப்படிக் காக்க விரும்புபவர்கள் மூட நம்பிக்கைகளைத் தாக்குவதில் அந்நியர்களைவிடத் தீவிரமாக இருக்க வேண்டும்; அவற்றைக் களைந்தபின் ஹிந்து மதத்திலுள்ள உத்தமமான உண்மைகளைப் பாரெங்கும் பரப்ப வேண்டும் என்பதையே இச் சமயத்தில் முக்கியமாக எடுத்துக் கூறி வந்தார் ஸ்வாமிஜி.

சுருதியாகிய வேத வேதாந்தங்களையும், ஸ்மிருதியாகிய தர்ம சாஸ்திரங்களையும் குருபாயிக்களுக்குக் கற்பிக்க விரும்பினார் ஸ்வாமிஜி. ஸ்வாமிஜி பாரதத்துக்கும், முக்கியமாக வங்காளத்துக்கும், ஆற்றிய அருந் தொண்டுகளில் ஒன்று வேதமோதுதலை அவர் விருத்தியுறச் செய்ததுதான். தாந்திரிக ஆராதனைகளும், அதன்பின் கௌரங்க தேவரின் பக்தி மார்க்கமும் வங்கத்தில் வேத அத்தியயனத்தை மறையச் செய்து விட்டன என்றே கூறலாம். வங்காளத்தில் மீண்டும் வேதநெறி தழைத்தோங்கப் பாடுபட்டவர் ஸ்வாமிஜி.

வேதத்தைக் காத்துத் தருவதற்குத் தானே ஈசன் அவதாரங்கள் எடுத்ததும்?

வேத அத்தியயனம் ஒரு குறிப்பிட்ட சாராருக்குத்தான் உரியது என்ற தர்ம சாஸ்திர விதியை ஸ்வாமிஜி ஒப்புக் கொண்டதில்லை. ஆத்மவிசாரம் செய்து பிரம்மாநுபவம் பெறுவதற்கு யாவரும் உரிமை பெற்றிருக்கும்போது, அதற்கு உபாயம் மட்டுமேயான வேதத்தில் எல்லாருக்கும் அதிகாரம் இல்லை என்பது சரியாகாது என்பதே ஸ்வாமிஜியின் கருத்து.

என்றாலும் அவர் பாரதத்தின் சமூகப் பகுப்பு விதியை ஆட்சேபித்ததில்லை. ஆனால் அதன் அநுஷ்டானத்தில் உயர்வு—தாழ்வு எண்ணங்கள் ஏற்படுவதாகக் கூறிக் கண்டனம் செய்தார் அவர். தாங்கள் தாழ்ந்தவர்கள் என்று ஒரு பிரிவினர் கருதும்படி செய்து விட்டு, அதன்பின் அவர்கள் பிற சமயங்களையும் தழுவக் கூடாது என்று எதிர்பார்ப்பது எப்படிப் பொருந்தும்? இதனால் தான் கிறிஸ்துவ மிஷனரிகள் தீவிரமாகச் செயல்பட்டு வந்த காலத்தில் ஹிந்து மதத்தை சம்ரக்ஷிக்க வேண்டியிருந்த ஸ்வாமிஜி நடைமுறை ஆசாரங்கள் பலவற்றைத் தாக்க நேர்ந்தது. எந்த மதமுமில்லாமல் மேல் நாட்டு லௌகிக இன்பங்களையே பெரிதென மதித்த இந்தியர்களுக்கு மத உணர்வு ஊட்டுவது; இந்து மதத்தை விட்டுப் பிறமதம் தழுவ எண்ணியவர்கள் அவ்வாறு செய்யாதபடி காப்பது; ஹிந்துக்களாகவே இருந்தவர்களைக் காலத்துக்கொவ்வாத சில சில ஆசாரங்களைக் கைவிடுமாறு செய்வது — இந்த முப்பெரும் பணிகள் ஸ்வாமிஜியின் தோளில் சார்ந்திருந்தன. எனவே ஒரு புறம் ஓர் இலட்சியத்துக்காக ஹிந்து மதத்தின் பெருமைகளை முழங்கிய அவரே, இன்னொரு புறம், இன்னோர் லட்சியத்துக்காக அம்மதக் கோட்பாடுகள் சிலவற்றைத் தாக்கவும் வேண்டியிருந்தது.

வேத சாஸ்திரங்களை வரநகரத்து ராமகிருஷ்ண சங்கத்தினர் படிக்கப்



''அதோ இருக்கும் அந்தக் கிழவன் எப்பொழுதும் கோடிக்கணக்கிலேயே பேசுகிறானே, ஏன்?''

''பெரிய லட்சாதிபதியா இருப்பான்!''

''இல்லையப்பா! பெரிய அணு ஆராய்ச்சியாளன் அவன்!''

---

பேருதவி புரிந்தவர் வாரணாசிப் பண்டிதராகிய பாபு பிரமததாஸ் மித்ரா. இவருக்கு எழுதியே அநேக நூல்களை இலவசமாகப் பெற்றார் ஸ்வாமிஜி. பணம் கொடுத்துப் புத்தகம் வாங்க அப்போது அவர்களுக்கு 'ஐவேஜி' ஏது?

முன்பு இதர சமய நூல்களைப் படித்ததாலேயே நரேனுக்குப் பெரும்பாலும் சந்தேகங்கள் தோன்றின. இப்போதோ ஹிந்துமத நூல்களைப் படித்ததாலேயே ஸ்வாமிஜிக்குப் பல சந்தேகங்கள் எழுந்தன. வேத—உபநிஷதங்களைத் தந்த ரிஷிகள் சத்தியமூர்த்தியர்; அவர்கள் பெற்ற தரிசனங்களும், அநுபவங்களும் அவர்கள் எண்ணும் எண்ணங்களும், மொழிகின்ற சொற்களும் சர்வ சத்தியமானவை என்று நம்பினார் ஸ்வாமிஜி. இந்தச் சத்தியத்துவத்தை நீதி நூல்கள், புராணங்கள் ஆகியனவற்றைச் செய்த எல்லாருக்குமே அளிக்க அவர் தயாராக இல்லை. சாஸ்திரங்களில் எதனைக் கொள்வது, எதனைத் தள்ளுவது என்று தெரியாமல் தத்தளித்தார். இந்தத் தத்தளிப்பை அவர் பிரமததாஸருக்கு எவ்வளவு உருக்கமாகத் தெரிவிக்கிறார் பாருங்கள்: ''ஆண்டவனின் கருணையில் நான் இதுவரையில் நம்பிக்கை இழக்கவில்லை; இனியும் இழக்க மாட்டேன். வேதங்களில் எனக்குள்ள நம்பிக்கை அசைக்க முடியாததாகும். ஆனாலும் இறைவன் திருவுள்ளம் காரணமாகக் கடந்த ஆறேழு ஆண்டுகளாக என் வாழ்க்கை எல்லாவிதப் போராட்டங்களாலும், தடைகளாலும், எதிர்ப்புக்களாலுமே நிரம்பியிருக்கிறது. ஆதரிசமான சாஸ்திரம் எதுவோ — அதனை அடைய நான் உறுதி பெற்றிருக்கிறேன்; ஆதரிசமான மனிதர் யாரோ அவரை நான் கண்டிருக்கிறேன்; இருந்தாலும் எந்த ஒரு விஷயத்திலும் முடிவு வரை செல்ல முடியாமல் நான் தவறிக்கொண்டேயிருக்கிறேன் — இதுவே எனது பெருத்த துர்ப்பாக்கியமாகும்.''

குழந்தையைப் பெறுமுன் ஒரு தாய் எவ்வளவு பாடுபட வேண்டுமோ அவ்வளவு பாடுகளையும் ஒரு முடிவு காணுவதற்காக மகான்களும் பெற வேண்டும் போலும்!

இறுதியில் எதைக் கொள்ளுவது, எதைத் தள்ளுவது என்று நிச்சய புத்தி பெற்றார் ஸ்வாமிஜி. இப்படிப் பகுப்பது தானே விவேகம்? எனவேதான் அவரை விவேகாநந்தர் என்று வாழ்த்தி வழிபடுகிறோம்.

ஸ்வாமிஜியின் உள்ளத்தில் சண்டமாருதம் அடித்து வந்தது. மக்களெல்லாம் இப்படி மத உணர்வு இழந்து வருகிறார்களே யென்று ஆறாத் துயரம் கொண்டிருந்தார் அவர். இதற்குக் காரணம் மேல் நாட்டினரே அல்லவா என்று எண்ணுவார். எனினும் மேல் நாட்டு வாழ் முறை மீது அவருக்கு ஆத்திரம் உண்டாகாது. ஐரோப்பிய நாகரிகச் சரிதத்தைப் படித்தவரல்லவா? மக்களை முன்னேற்றுவதற்காக அங்கு சீர்திருத்தத்துக்கு மேல் சீர்திருத்தமாக நடந்து வந்ததைப் பெரிதும் போற்றியவர் ஸ்வாமிஜி. ஆத்மார்த்தமாகத் தனது விடுதலையைப் பெறப் பாடுபடும் உணர்வையும், மக்கள் சேவையையும் எப்படியேனும் இசைத்து இந்தியாவுக்கு அளிக்க வேண்டும் என்பதே அவரது சிந்தனையாயிற்று.

இதோடு உலகமெலாம் தழுவும் பேரன்பு காரணமாக மேல் நாட்டினரை எண்ணியும் துயருற்றார் ஸ்வாமிஜி. லௌகிகமான போக போக்கியங்களைத் தேடி அல்லவா மேல் நாட்டினர் ஆத்ம உணர்வை இழந்து வருகின்றனர்? விஞ்ஞான முன்னேற்றமும், இயந்திர சகாப்தமும் மனிதனின் உள்ளடங்கியுள்ள மாண்பையே அல்லவா குலைத்து வருகின்றன? கனன்று கொண்டிருக்கும் எரிமலை ஒன்றின் வாய் மீது மேல்நாட்டினர் விச்ராந்தியாக உட்கார்ந்திருப்பது போல உணர்ந்தார் ஸ்வாமிஜி. மனித ஆத்மாவின் மகிமையைக் கூறி அவனுள்ளிருக்கும் தெய்வ சக்தியைப் புலப்படுத்தும் வேதாந்தம்தான் மேல்நாட்டில் இயந்திரங்களுக்கும், இந்திரியங்களுக்கும் அடிமையாகி வரும் மக்களை மீட்க முடியும்; அப்படி வேதாந்த தீபத்தை அங்கெல்லாம் ஏந்திச் செல்வார் யார் என எண்ணித் துடிப்பார்.

இருபத்தியாறு வயசு இளைஞர் ஒருவர் இப்படித் தமக்கு மட்டுமின்றி, தமது நாட்டைக் கொடுமைப்படுத்தும் அந்நியர் உட்பட—ஏன், உலகம் முழுவதற்காகவும் — கவலைப்பட்டார்! சரித்து

கொண்டிருக்கும் உலகைத் தன்னால் எப்படித் தோள் கொடுத்துத் தூக்கி நிலை நாட்ட முடியும் என எண்ணி எண்ணித் தம் இயலாமைக்காகப் பரிதவித்தார்.

உலகளாவிய அந்த அருள் எண்ணம் பழுக்காமல் போகுமா?

**1889**ம் வருஷ இறுதியில் வரநகர மடத்திலிருந்து புறப்பட்டுவிட்டார் ஸ்வாமிஜி. பீஹாரில் உள்ள வைத்திய நாதம் என்ற புகழ் வாய்ந்த சைவப் பதியை அடைந்தார். அங்கிருந்து காசி செல்ல எண்ணியிருந்தார். காசியிலேயே தம் செயலில்லாது காலம் கழிக்க வேண்டும்; விசுவநாதனும், அன்னை அன்னபூரணியும் தம் எதிர் காலத்தை எப்படி இயக்குகிறார்கள் என்பதை சரணாகதனாக இருந்து பார்க்க வேண்டும் என்று விரும்பினார் ஸ்வாமிஜி. ஆனால் காசிநாதனோ அவர் காசி செல்லு முன்பே வேறு திட்டங்கள் போட்டுவிட்டான். அலஹாபாத்தி லிருந்த யோகாநந்தர் அம்மை வார்த்துப் படுத்துக் கிடப்பதாக வைத்திய நாதத்துக்குச் செய்தி வந்தது. உடனே அலஹாபாத்துக்குப் பயணமானார் ஸ்வாமிஜி. யோகாநந்தருக்கு சுசுருஷைகள் செய்தார்.

ஸ்வாமிஜி அலஹாபாத்திலிருந்த போது, காஜிப்பூரில் வசித்து வந்த பவஹாரி பாபாவைப் பற்றிக் கேள்விப் பட்டார். அவரைக் காண 1890ம் ஆண்டு ஜனவரி மாதத்து மூன்றும் வாரத்தில் காஜிப்பூர் சென்றார்.

யார் இந்தப் பவஹாரி பாபா?

(தொடரும்)
















1, 2. திரு ம. பொ. சிவஞானம் மலேஷியா சென்றதையொட்டிச் சென்னை வுட்லண்ட்ஸ் ஹோட்டலில் நடைபெற்ற வழியனுப்பு உபசாரத்தில் ராஜாஜியும் காமராஜரும் கலந்துகொண்டனர். 3. புரசை சீனிவாச பக்த சபை ஆதரவில் ஸ்ரீ வேங்கடாசார்ய சுவாமிகள் நிகழ்த்திய திருப்பாவை உபன்யாசத்தில் ராஜாஜியும், தீக்ஷிதரும். 4. புரந்தரதாஸர் நினைவுத் தபால் தலையின் விற்பனையைக் கோவையில் போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் ஸ்ரீமதி எம்.எல். வசந்தகுமாரியிடம் தொடங்குகிறார். 5. சென்னை நக்கீரர் கழகத்தின் 23-ம் ஆண்டு நிறைவு விழாவும் தமிழ்த் திருநாளும் சென்னை முதல் அமைச்சர் திரு பக்தவத்ஸலம் தலைமையில் நடந்தன.




**டெலிபோன் மூலம் தந்திச் செய்திகள் துரிதமாக சொல்லப்படுகிறது**

தந்தி துரிதமாகச் செல்ல விலாசதாரரின் டெலிபோன் நெம்பருக்கும் விலாசமிட்டு அனுப்புங்கள்

பானர்ஜி
• டி எப் 31670
புது டில்லி

தந்தி ஆபீசிற்கு தந்தி கிடைத்தவுடன் தந்தியின் செய்தி டெலிபோன் மூலம் அவருக்குத்தெரிவிக்கப்படும். தந்தி சேவகரின் மூலம் பட்டுவாடா செய்ய ஏற்படும் கால தாமதத்தை தவிர்க்கலாம்

இது மலிவானதும்கூட டி எப் 31670 என்பது ஒரு வார்த்தையாகக்கணக்கிடப்படும்

உள்ளூர் டெலிபோன் வசதி சர்வீஸ் உள்ள இடங்களில் இவ்வசதி கிடைக்கும்

தந்திச் செய்தியின் நகல் ஒன்று அதேதினம் முதல் தபால் பட்டுவாடாவில் அனுப்பிவைக்கப்படும்

**உங்கள் தந்தியை டெலிபோன் மூலம் பெறுங்கள்**

தந்தி அனுப்புபவர் உங்கள் டெலிபோன் நெம்பரைக் குறிப்பிடாவிட்டாலும் சில நகரங்களில் உங்கள் தந்தியை டெலிபோன் மூலம் நீங்கள் பெறலாம். இதற்கு தந்தி ஆபீசில் உங்கள் டெலிபோன் நெம்பரை பதிவு செய்து கொள்ளுங்கள்.

**உங்களுக்கு சிறந்த முறையில் சேவை செய்ய எங்களுக்கு உதவுங்கள்**

தபால்-தந்தி இலாகா

DA




## கல்கி ஸ்ரீஹரி மண்டபம்

**வை**த்தியத் தொழிலில் ஈடுபட்டிருப்பதே ஒரு சிறந்த பொதுநலப் பணி. அத்தொழிலில் கிடைக்கும் வருவாயையும் பொதுக் காரியங்களுக்கே உபயோகப்படுத்துவதென்பது மிக அரிய ஒரு செயலாகும்.

இத்தகைய தர்ம சிந்தனை கொண்ட ஒரு பெருந்தகையாளர் கல்கியில் நாட்டு வைத்தியப் பகுதியை அவ்வப்போது எழுதிவரும் டாக்டர் ஸ்ரீஹரி அவர்கள். திருநீர்மலையில் கல்கி ஸ்ரீஹரி கல்யாண மண்டபம் சுமார் 35,000 ரூபாய் செலவில் உருவாகியிருக்கிறது. ஜனவரி 20ந் தேதி யன்று காலை முதலமைச்சர் திரு பக்தவத்சலம் மண்டபத்துக்குப் புனித நீர் புரோக்ஷிக்கப்படுவதை அருகிலிருந்து கண்டு மகிழ்ந்தார்: அன்று மாலையில் நடந்த பொதுக் கூட்டத்துக்குத் தலைவர் ராஜாஜி வருகை தந்து சிறப்பித்தார். திரு வி. கே. நரசிம்மன் அவர்கள் ஏழைகளுக்கு அன்ன தானம் அளிக்கும் பணியை ஆரம்பித்து வைத்தார். திரு ஏ. ஜி. வெங்கடாச்சாரி அவர்கள் ஸ்ரீஹரி அவர்கள் சார்பில் கல்யாண மண்டபத்தின் சாவிகளைத் தர்மகர்த்தா திரு வி. என். வரதப்பன் அவர்களிடம் ஒப்படைத்தார். ஸ்ரீமதி சரோஜனி வரதப்பன் மண்டபத்தைத் திறந்துவைத்தார்.

திருநீர்மலையில் கல்யாணம் நடத்துவதாகப் பிரார்த்தித்துக் கொண்டு வருவோருக்கெல்லாம் சமையல் பாத்திரம், பண்டம் வகையறா உள்பட எல்லா வசதிகளுடனும் கூடிய கல்கி ஸ்ரீஹரி மண்டபம் இனி நல்வரவு கூறும்.





∧ கூடாரத்தில் பள்ளி நடக்கிறது.
< காமராஜர் விநயநகர் பள்ளி மாதிரியைப் பார்வையிடுகிறார்.

# மாணவர் குலம் மகிழ்கிறது!

சிறுவர் சிறுமியருக்குப் பாடபோதனை நடத்தும் விதங்களில் எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. கோதண்டம் போட்டாலொழிய மூளையில் ஏறாது என்கிற காலத்திலிருந்து வெகுதூரம் வந்து இப்போது இயந்திரங்கள் மூலமாகப் பாட போதனை நடத்தும் நிலைக்கு மனித குலம் முன்னேறி இருக்கிறது. என்றாலும் அன்று முதல் இன்று வரை பாட போதனை சம்பந்தப்பட்ட ஒரே ஒரு விஷயம் பற்றி மட்டும் யாருக்குமே அபிப்பிராயபேதம் இருந்ததில்லை. அந்த ஒரு விஷயம் ஆரம்பக் கல்வி, குழந்தைகளுக்கு அவர்களுடைய தாய்மொழியில் அளிக்கப்பட வேண்டும் என்பதுதான்.

இத்தகைய ஓர் அதிமுக்கியமான காரியத்தில் முழுவெற்றி காண்பது என்பது நம் நாட்டில் எவ்வளவு சிரமம் என்பதைச் சற்று யோசித்துப் பார்த்தால் புரியும். பதினான்கு பிரதான மொழிகளும் ஏனைய பல நூறு விதமான சில்லறை பாஷைகளும் பேசப்படும் நம் தேசத்தில், குழந்தைகளின் பெற்றோர்கள் அவர்களுடைய தாய்மொழி வழங்கும் அந்தப் பிரதேசத்திலேயே இருந்துவிட்டால் கவலை இல்லை. பம்பாய்க்கும் தில்லிக்கும் கல்கத்தாவுக்கும் வேலை வாய்ப்பை உத்தேசித்துச் செல்லும் தமிழர்களின் குழந்தைகள் என்ன செய்வார்கள்? தமிழ் மொழியில் அவர்களுக்குப் பாடம் போதிக்கப்படும் என்று எதிர்பார்க்க முடியுமா?

1923ம் வருஷத்திலேயே தில்லியில் வாழ்ந்த தமிழர்கள் இது பற்றிச் சிந்தித்திருக்கிறார்கள். மதராஸி கல்விச் சங்கம் (Madrasi Education Association) என்பதாக ஒன்றினை நிறுவியுமிருக்கிறார்கள். ஒரு மாணவனையும் ஓர் உபாத்தியாயரையும் மட்டுமே வைத்துக்கொண்டு தாய்மொழியில் பாடபோதனையும் ஆரம்பமாகி விருக்கிறது. இதே சங்கத்தின் ஆதரவில் இன்று நாலாயிரத்து எண்ணூறு குழந்தைகளுக்கு நூற்றி அறுபத்தைந்து உபாத்தியாயர்கள் தமிழ் மொழியில் பாடம் கற்பித்து வருகிறார்கள். இந்த நாற்பது வருஷ காலத்தில் டில்லி வாழ் தமிழர்களுக்கு அளப்பரிய சேவை செய்தே வளர்ந்து வந்திருக்கும் மதராஸி கல்விச் சங்கம் இன்று டில்லியின் பல்வேறு பகுதிகளிலும் ஐந்து பள்ளிக்கூடங்களை நடத்தி வருகிறது. அப்படியிருந்தும், தில்லியின் சுற்றுவட்டாரத்தில் உருவாகியிருக்கும் புதிய குடியிருப்புக் காலனிகளில் மேலும் பள்ளிகளை ஆரம்பிக்க வேண்டும் என்று இச் சங்கத்துக்குக் கோரிக்கைகள் வந்த வண்ணமிருக்கின்றன. தாய் மொழியில் கல்வி கற்கும் ஆர்வம் அத்தகையது என்பது ஒருபுறமிருக்க உத்தியோகம் மாற்றலாகி டில்லிக்குப் போய்ச் சேரும் ஒருவரது குழந்தைகளின் கதி என்ன? இத்தனை நாட்களாகத் தமிழில் எல்லாவற்றையும் கற்றுணர்ந்து வந்த அந்த இளம் உள்ளங்கள் திடுமென ஹிந்தியிலோ, ஆங்கிலத்திலோ படித்துத் தேற முடியுமா? இதற்காகவே பள்ளியில் சேர மனுப் போடும் எந்தக் குழந்தைக்கும் 'இடமில்லை' என்று மதராஸி கல்விச் சங்கத்தினர் பதிலளிப்பதே கிடையாது.

இந்தப் பள்ளிகளை நிர்வகிக்க ஆகும் நடைமுறைச் செலவுகளில் 95 சதவீதத்தை தில்லி ராஜ்ய சர்க்காரும் தில்லி நகராட்சியும் ஏற்றுக்கொள்கின்றன. மீதமுள்ள தொகையைப் பள்ளிகளில் படிக்கும் பிள்ளைகளின் பெற்றோர்கள்தான் தாங்களாகவே மனமுவந்து ஈடு செய்ய வேண்டும். இதுவே வருஷத்தில் லட்சத்திப் பத்தாயிரம் ரூபாய்க்கு மேலாகி விடுகிறது. தில்லிவாழ் மக்கள் வியாபாரிகளல்ல, செல்வந்தர்களல்ல. மாதச் சம்பளம் வாங்கும் அரசாங்க உத்தியோகஸ்தர்கள்தான். இவ்வளவு பெரிய செலவினத்தைத் தாங்குவது அவர்களுக்குக் கடினமான காரியம்தான். இதைவிடப் பெரிய கஷ்டம் குழந்தைகளுக்குப் பாடம் போதிக்கத் தகுந்த ஆசிரியர்களைத் தேர்ந்தெடுப்பது. தமிழ் நாட்டிலிருந்து ஆசிரியர்கள் தில்லிக்கு வரத் தயங்குகிறார்கள். சென்ற வருஷம்

இருநூறு விண்ணப்பங்கள் வந்தன. அறுபது பேரைப் பேட்டி கண்டு அவர்களில் பன்னிரண்டு பேர்களைத் தேர்ந்தெடுத்து உத்தியோகத்தில் நியமிப்பதாய்க் கடிதம் கொடுத்தார்கள். இந்தப் பன்னிரண்டு பேர்களில் நாலு பேர்களே வேலையில் சேர்ந்தார்கள்! டில்லியில் நிலவுகின்ற வாழ்க்கைச் செலவுகளுக்கு ஏற்ப ஆசிரியர்களுக்கு நல்ல சம்பளமும் குடியிருப்பு வசதிகளும் செய்து கொடுத்தாலன்றித் தமிழ் நாட்டிலிருந்து உபாத்தியாயர்கள் அங்கு செல்ல மாட்டார்கள். இந்த இக்கட்டான நிலையைச் சமாளிக்கத் தில்லியில் உத்தியோகம் பார்க்கும் தமிழர்களின் மனைவிமார்களில் நல்ல படிப்பும் அறிவு முதிர்ச்சியும் பெற்றிருக்கும் பலர் முன் வந்தார்கள். இன்று மதராஸி கல்விச் சங்கத்தின் சார்பாகக் கல்வி போதிப்போரில் எழுபத்தி நாலு சதவிகிதத்தினர் ஆசிரியைகள்தான்.

தில்லியின் பல்வேறு பகுதிகளிலும் தொலைவில் இருக்கும் குழந்தைகளைச் சங்கத்துக்குச் சொந்தமான இரண்டு பஸ்களிலும் வாடகைக்கு அமர்த்திக்கொண்ட நான்கு பஸ்களிலுமாக ஏற்றிக் கொண்டுவருகிறார்கள். ஆனால் அந்தக் குழந்தைகள் எங்கே கூடுவது?

தாய்மொழியில் கல்வி கற்பிக்கப்படுமானால் கூடாரங்கள் அமைத்து அதில் வகுப்புக்களை நடத்தினாலும் குழந்தைகள் ஆர்வத்துடன் ஜமக்காளத்தில் உட்கார்ந்து படிக்கத் தயாராக இருக்கிறார்கள். இந்த நிலையை நீடிக்க விடுவது சரியாகுமா? டில்லியில் உள்ள சீதோஷ்ண நிலையைக் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள். குளிர்காலத்தில் நீர் உறைகிற கடுங் குளிர். கோடைக் காலத்திலோ உக்கிரமான வெய்யிலுடன் புழுதிக் காற்றும் சேர்ந்து கொள்வது உண்டு. நாட்டின் எதிர்காலச் செல்வங்களை இத்தகைய சோதனைகளுக்கு உள்ளாக்கலாமா? கட்டடங்களும், மேஜை நாற்காலிகளும் ஏற்பாடு செய்து தர வேண்டாமா?

மதராஸி கல்விச் சங்கத்தினரின் மனந்தளரா உழைப்பினாலும் தயாள சிந்தை கொண்ட பல தனவந்தர்களின் ஒத்துழைப்பினாலும் ரீடிங் ரோடு, லோடி எஸ்டேட், கரோல்பாக், விநயநகர் ஆகிய இடங்களில் கட்டிடங்கள் அமைக்கத் தீர்மானித்தார்கள். இவற்றில் ரீடிங் ரோடு, லோடி எஸ்டேட் ஆகிய இடங்களில் பள்ளிக்கூட வேலை ஏற்கெனவே பூர்த்தியாகிவிட்ட போதிலும் பெருகி வரும் மாணவ, மாணவிகளின் தொகைக்கு ஏற்பக் கட்டிடத்தை மேலும் விஸ்தரிக்க வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது.

சில வருஷங்களுக்கு முன்னால் மந்திரி திரு ஆர். வேங்கடராமன் அவர்கள் தில்லிக்குச் சென்றிருந்தபோது இச்சங்கம் செய்து வரும் நல்ல காரியங்களுக்குச் சென்னை அரசாங்கத்தின் உதவியும் அவசியம் கிட்டவேண்டும் என்ற பெருநோக்குடன் ஒரு லட்சம் ரூபாய் கிடைக்க வழி செய்தார். ஏறக்குறைய இதே சமயத்தில் டி. வி. எஸ். தர்மஸ்தாபனத்தினின்றும் ஒரு லட்சம் ரூபாய் கிடைத்தது. நிகழும் சோபகிருது வருஷ ஆரம்பத்தில் அமைச்சர் திரு பக்தவத்சலம் கரோல்பாக் பள்ளிக்கூடத்தின் அஸ்திவாரக் கல்லை நாட்டினர். அதைத் தொடர்ந்து, சென்னை அரசாங்கம் வருஷத்துக்கு ஒரு லட்சம் ரூபாய் தருவதாக வாக்களித்திருப்பதாகத் தெரிகிறது. விநயநகர் பள்ளிக்கூடத்தின் அஸ்திவாரக் கல்லை நாட்டியவர் பாரதப் பிரதமர் ஜவாஹர்லால் நேரு அவர்கள். நேருஜியும் திரு பக்தவத்சலமும் ஆரம்பித்து வைத்த நல்ல காரியங்கள் தடங்கல் ஏதுமின்றி நிறைவேறும் என்பதில் ஐயமில்லை.

இந்த இரு கட்டிடங்களும் பூர்த்தியாவதற்கு மேலும் பொருளுதவி தேவைப்படுகிறது. இதற்காக ஏற்கனவே, மதராஸி கல்விச் சங்கத்துக்காக இரண்டு தடவைகள் உதவிக் கச்சேரிகள் செய்துள்ள ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலட்சுமி அவர்கள் மீண்டும் இம்மாதம் பதினாறும் தேதியன்று லோடி எஸ்டேட் பள்ளியிலேயே உதவிக் கச்சேரி செய்யவிருக்கிறார்கள்.

தமிழகத்தில் பி. யூ. ஸி. எனப்படும் பரீட்சைக்கு இணையான தில்லி ராஜ்யப் பரீட்சையில் இப்பள்ளியைச் சேர்ந்த மாணவ மாணவிகள் தொண்ணூற்றைந்து சதவிகிதம் தேறியிருக்கிறார்கள். அத்துடன் அகில இந்திய 'ஸ்காலர்ஷிப்'கள் பலவற்றைத் தட்டிக்கொண்டு போயிருக்கிறார்கள்.

கொஞ்சமும் சோர்வடையாமல் படித்துத் தேறித் தங்களுக்கும் மதராஸி கல்விச் சங்கத்துக்கும் தமிழகத்துக்கும் பெருமை தேடித் தரும் குழந்தைகளுக்கு எல்லாருமே உதவக் கடமைப்பட்டிருக்கிறோம்.

ஆர். வேங்கடராமன், டாக்டர் சுப்பராயன், வி. ஆர். பட்டாபிராமன், பி. ஆர். ராமகிருஷ்ணன் ஆகியோரைத் தொடர்ந்து இப்போது இச் சங்கத்தின் தலைமைப் பதவியை ஏற்றிருக்கும் டாக்டர் பி. எஸ். லோகநாதன் அவர்களுடைய நிர்வாகத் திறனும் அரிய யோசனைகளும் தில்லிவாழ் தமிழருக்கு இச் சங்கம் ஆற்றும் தொண்டு மேலும் மேலும் சிறக்கப் பெரிதும் உதவும்.



< பாரதப் பிரதமர் நேருஜி அஸ்திவாரமிட்ட விநயநகர் பள்ளிக் கட்டடம் மளமள வென்று உயர்ந்து வருகிறது.

V விநயநகர் பள்ளியின் மாதிரி தோற்றம்.



மேஜர் ராமதுரை, ''ஒன்று — இரண்டு'' என்று ஒவ்வொரு விநாடி அவகாசம் கொடுத்து எண்ண ஆரம்பித்து ''மூன்று!'' என்று எண்ணி முடித்ததும் ஒரு சிறு சவுக்கடி ஆட்டுக்குட்டியின் மீதும் உமாவின் மீதும் சேர்ந்து விழுந்தது.

உமா அப்படியே சுருண்டு சகதியில் விழுந்தாள். தண்ணீரோடு சகதியும் தெறித்து அவளுடைய முகமெங்கும் திட்டுத் திட்டாக அப்பியது. ஆனால் அப்போதும் அவள் ஆட்டுக்குட்டியை விடவில்லை: அதன்மீது சவுக்கடிகள் மேலும் விழாதபடி அதை அணைத்துச் சாய்ந்து குனிந்து கொண்டாள். தன் உயிரைக் கொடுத்தேனும் இன்னொரு உயிரைக் காக்க வேண்டுமென்ற உணர்ச்சி வேகம் அவளுள் பொங்கி நின்றது.

மேஜர் ராமதுரைக்கோ தம்முடைய அதிகாரத்துக்குக் குறுக்கே நிற்கும் ஒரு புரட்சிக்காரியின் சத்தியாக்கிரகம் போல் அது தோன்றியது. சத்தியாக்கிரகத்தைச் சண்டித்தனம்' என்று நினைக்கும் போது அதிகார பலத்தின் அகங்காரமும் ஆத்திரமும் அதிகரிக்குமல்லவா?

''அந்த ஆட்டுக்குட்டியை அடித்துக் கொல்லாமல் விட மாட்டேன்! அத்தனை சவுக்கடிகளையும் நீயே தாங்கிக் கொண்டாலும் சரி!'' என்று அதி உக்கிரமாய்க் கூவிய மேஜர் ராமதுரை, தம் பலத்தையெல்லாம் கையில் திரட்டி அந்தக் கையினால் சவுக்கைச் சுழற்றி ஓங்கினார்.

அந்தச் சவுக்கடி உமாவின் மீது விழுந்திருந்தால் சதையோடு உயிரே பிய்ந்து போயிருக்கும்! ஆனால் அதற்குள், ''நிறுத்துங்கள்!'' என்று கூவியபடி இன்னொரு குரல் பாய்ந்து வந்து குறுக்கே நின்று கொண்டது.



அது பிச்சுமணிதான்!

மேஜர் சுழற்றி வீசிய அதி பயங்கர மான சவுக்கடியோ, குறுக்கே பிச்சுமணி பாய்ந்து நின்றதால் அவனது வலது தோள் மீது பளீரென்று விழுந்து தோள் புறச் சட்டையில் கொஞ்சம் துணியோடு சதையும் பிய்த்துக் கொண்டு சிறிது ரத்தம் தெறிக்கச் செய்தது.

அந்தக் கோரமான காட்சியை உமா தன் வாழ்நாள் முழுவதும் மறக்கவே முடியாது!

ஆனால் பிச்சுமணியோ உமாவுக்காகத் தன் உயிர் போகும் வரை எத்தனை சவுக்கடிகளையும் தாங்கிக் கொள்ளத் தயாராக நிற்பவன் போல் நின்றான். அது மட்டுமல்ல! தன் தோள் மீது விழுந்து ரத்த ஸ்நானம் செய்தபடி தொங்கும் சவுக்கு நுனியைப் பிடித்துக் குபீரென இழுத்தான். அதனால் சவுக்கைப் பிடித்துக் கொண்டிருந்த கிழவர் ராமதுரை குபீரென இழுபட்டு மடாரென்று கீழே விழுந்து உருண்டார்.

பிச்சுமணி அவர் மீதுதான் பாய்ந்தான்!

அப்போது உமாவுக்கு ஏதோ மயக்கத்தால் தலை சுற்றியதாலும் பொழுது நன்றாக இருட்டி விட்டதாலும் அதன் பிறகு என்ன நடந்தது என்பது தெரியவில்லை. தாத்தாவின் ஈவு இரக்கமற்ற அடி உதைகளையெல்லாம் தாங்கிக் கொண்டு பிச்சுமணி அவரை எப்படியோ இழுத்துக் கொண்டு பங்களாவினுள் போய் விட்டான் என்பது மட்டும் புரிந்தது. வேலைக்காரர்களெல்லாம் திரண்டு வந்து விட்டார்கள் என்பதற்கு அறிகுறியாகக் காலடி ஓசைகளும் பல விதமான குரல்களும் கேட்டன.

சகதியில் ஆட்டுக் குட்டியோடு விழுந்து கிடந்த உமாவுக்குப் பெரும் சோர்வும் தளர்ச்சியும் உண்டாயிற்று. முழங்கால்கள் விண் விண்ணென்று தெறித்தன. அடுத்தபடியாக என்ன நடக்குமோ என்று கலங்கினாள். ஆனால் எதுவும் செய்யச் சக்தியின்றி அப்படியே கிடந்தாள். சற்றுத் தொலைவில் இருட்டில் பேச்சுக் குரல்கள் கேட்டன.

பட்லர் இருதயசாமிதான் அந்த மாளிகையின் தோட்டக்காரனோடு மெல்லப் பேசிக் கொண்டிருந்தான்.

"அடேயப்பா! இந்தக் காம்பவுண்டுக்குள் இது





மாதிரிச் சம்பவம் நடந்ததை இதற்கு முன் நான் பார்த்ததும் இல்லை, இனி பார்க்கப் போவதும் இல்லை!'' என்று அதிசயப்புடன் கூறிய பட்லர் இருதய சாமி, ''இதைக் கேட்டு இந்த வட்டாரமே சிரிக்கப் போகிறது, சுப்பையா! ஒரு வேலை பேப்பர்க்காரன் 'ஆட்டுக் குட்டியால் விளைந்த கலகம்' என்று கொட்டை எழுத்துக்களில் போட்டாலும் போடுவான்!'' என்றான்.

''பெரிய ஐயாவும், சின்னய்யாவும் இப்படி மோதிக் கொள்வார்கள் என்று நானும் எதிர்பார்க்கவில்லை! இனி என்ன நடக்கும்?'' என்றான் சுப்பையா.

''கிழவர் பழைய பட்டாளத்தார் அல்லவா? கோபம் வந்து விட்டால் அவருக்குக் கண்மண் தெரியாது. பேரப் பிள்ளை என்றுகூடப் பார்க்க மாட்டார். ஆனால் பிச்சுமணியும் சளைத்தவனல்ல! அவனுக்கும் கோபம் வந்து விட்டால் புலி மாதிரி பாய்வான்!''

''புலி மீது அந்தச் சவுக்கடி விழுந்திருந்தால் புலி சுருண்டு விழுந்திருக்கும்! ஆனால் சின்னய்யா அதை எப்படித் தாங்கிக் கொண்டார்?''

''அந்தப் பெண்ணுக்காகப் பிச்சுமணி இன்னும் எத்தனை சவுக்கடிகளையும் சண்டைகளையும் வேண்டுமானாலும் தாங்கிக் கொள்வான்!''

''ஆமாம், அந்தப் பெண் யார்?''

''பிச்சுமணிக்குத் தெரிந்த பெண்ணாகத்தான் இருப்பாள்! இல்லாவிட்டால் தன் தாத்தாவுக்கு எதிராகத் தன் உயிரே போனாலும் அவன் இப்படிக் கட்சி கட்டிக் கொண்டு வந்து நிற்க மாட்டான்!''

பேச்சுக் குரல்கள் இருளோடு தூரத்தில் போய் மறைந்தன.

நிர்க்கதியான உணர்ச்சியும், பூரணமான தளர்ச்சியும், ஒருவித சோர்வின் மயக்கமும் உமாவை ஆட்கொண்டன. போராட்டம் முடிந்து விட்டது; அதில் ஆட்டுக்குட்டியை அவள் காப்பாற்றி வெற்றி பெற்று விட்டாள். ஆனால் இப்போது அது அவளுக்குப் பெரிதாகப் படவில்லை. தனக்காகக் குறுக்கே வந்து பயங்கரமான சவுக்கடியைத் தன் தோள் மீது தாங்கிக் கொண்டு பிச்சுமணி நின்ற காட்சி ஒன்றுதான் உமாவின் சிந்தனைகளிலெல்லாம் வேரோடி வளர்ந்தோங்கி நின்றது.

அவள் அப்படியே அசைவற்று உட்கார்ந்தபடி தன் முகத்தை இரு கைகளாலும் பொத்திக் கொண்டு அழுதாள்.

## அத்தியாயம் முப்பத்திரண்டு

# அன்பின் தொட்டில்

இருள் கனத்துக் கொண்டு வந்தது. அதற்குப் போட்டியாக வெண்ணிலவு கருமேகக் கூட்டங்களிடமிருந்து வெளிக் கிளம்பித் தண்ணிலவைப் பொழிந்து இருளைக் கரைக்க முயன்றது. வானத்தில் இடி முழக்கங்கள் மறைந்து மழை ஓய்ந்திருந்தது என்றாலும் மறுபடியும் அது எந்த நிமிஷமும் பெய்ய ஆரம்பிக்கும் என்பதின் அறிகுறிகள்மட்டும் ஓயவில்லை.

பிச்சுமணியின் பங்களாத் தோட்டத்தினுள், சகதி மயமான மண் தரையின் மீது உமா இன்னும் உட்கார்ந்தபடியே தன் முகத்தை இரு கைகளாலும் மூடிக் கொண்டு பிச்சுமணியின் நிலையை நினைத்து விம்மி விம்மி அழுதுகொண்டிருந்தாள். எவ்வளவு அழுதாலும் மனம் அமைதி பெறாது என்பது போலவே தோன்றியது. நிதானத்தையும் தன்னடக்கத்தையும் எப்பொழுதாவது அபூர்வமாக இழந்துவிடும் போதெல்லாம் அவள் அப்படித்தான் குழந்தை போல் விம்மி விம்மி அழுது கொண்டிருப்பாள். அதன்மூலம் மறுபடியும் தன்னடக்கமும் அமைதியும் பெறத் தவிப்பாள். இப்போதோ அவளுடைய உள்ளம் உடல் இரண்டுமே தன்னுணர்வு குன்றி விடும் அளவுக்கு மிகவும் சோர்ந்து போய் விட்டன. அவள் தன் பலத்தையும் மீறி அதிகமாகப் போராடிக் களைத்து விட்டாள். பிச்சுமணிக்கும் அவனுடைய தாத்தாவுக்கும் தன்னால் சச்சரவு மூண்டு அது பெரிதாகியிருக்கும் என்று நினைக்கும்போது அவளுடைய அமைதியின்மையும் அழுகையும் அதிகரித்தன. அந்த நினைவிலேயே அழுந்தி அவள் அசைவற்று, மெய்ம்மறந்து அப்படியே உட்கார்ந்திருந்ததால் தன் முகத்திலும் உடம்பிலும் தெறித்திருக்கும் சகதிகளைத் துடைத்துக் கொள்ள வேண்டும் என்கிற எண்ணம்கூட அவளுக்கு எழவில்லை.

இருளின் நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு அவளை நோக்கிக் காலடி ஓசைகள் வேகமாக ஓடி வந்தன.

அவ்வோசைகள்கூட உமாவின் காதுகளில் விழவில்லை.

வலிமையான இரண்டு கரங்கள் திடீரென்று அவளைச் சுற்றி வளைத்து

# அமுல் நெய்

## உத்திரவாதமுள்ள தரமான நெய்




அமுல் வெண்ணெய் தயாரிப்பவர்களிடமிருந்து, இப்பொழுது பிரத்தியேகமான 'அக்மார்க்' குறியுடன் வருகிறது அமுல் நெய். புத்தம்புதிய பால் ஆடை மற்றும் வெண்ணெயிலிருந்து நவீனமான, சுகாதாரமான முறையில் தயாரிக்கப்பட்டது. பிரத்தியேகமான, திருட இயலாத டின்களில் சீல் செய்யப்பட்டது-சுத்தத்திற்கு உத்திரவாதம்.




திருட இயலாத, நீலமும் வெள்ளையுமான டின்களில் 1 கிலோ, 2 மற்றும் 4 கிலோக்கள் டின்களில் விற்கப்படுகிறது.

**நல்ல உணவின் உண்மையான சுவைக்கு**
**அமுல் உபயோகியுங்கள்-அமுல் நெய்**
**புத்தம்புதிய பால் ஆடையின் ருசியுடையது**

கைரா டிஸ்டிரிக்ட கோஆபிரேடிங் மில்க் ப்ரொடியூசர்ஸ் யூனியன் லிட். ஆனந்த்

CBKMP-8-TAM

அவளைத் தூக்கிவிட முயன்றன. அதை உணர்ந்ததும் உமா திகைத்து விருட்டென்று எழுந்தாள். அப்போது அவளுடைய தலையும், கூந்தலும் ஓர் ஆடவனின் விசாலமான தோள் மீது பட்டன. அந்த ஆடவனின் கைப்பிடியும் ஆதரவோடு இறுகியது. உடனே அந்தப் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளவேண்டுமென்ற உள்ளுணர்ச்சி பொங்கியெழவே, உமா, ''ஆ'' என்று கிரீச்சிட்டபடி நகர முயன்றாள்.

''நான்தான்!'' என்ற பிச்சுமணி, ''நீங்கள் பயந்து விட்டீர்களா, மிஸ் உமா ?'' என்று கேட்டான்.

அவன் குரலில் குழையும் குழந்தைத்தனம் உமாவுக்கு அந்தத் துயரத்தினூடேயும் சிரிப்பு மூட்டுவது போல் இருந்தது. அதை அவள் அடக்கிக் கொண்டாள். அதன் பிறகு, ''ஆமாம்! திடீரென்று என்னை எப்படிப் பயமுறுத்தி விட்டாய், பார்!'' என்று சொல்லத்தான் அவளால் முடிந்தது.

''ஆனால் உமா.... உங்களை இப்படியே விட்டு விட்டுப் போய்விட மாட்டேன், எப்படியும் உங்களிடம் திரும்பி வருவேன் என்பது உங்களுக்கு நிச்சயமாகத் தெரியும், இல்லையா?'' என்று பிச்சுமணி கேட்டான்.

அவனுடைய குரலிலும் அந்தக் கேள்வியிலும் அளவுகடந்த தாபமும் பாசத்தின் உரிமையும் உமாவின் உள்ளுணர்ச்சிகளையெல்லாம் உணர்ந்துவிட்டது போன்ற பெருமையும் தொனித்தன. அவை உமாவின் உள்ளத்தைத் தொட்டு அவளைப் பெரிதும் குழப்பின. மெல்லிய நிலா வெளிச்சத்தில் பிச்சுமணியின் முகத்தில் பெருகும் உணர்ச்சிகளையெல்லாம் உமா கவனித்ததும் மனம் நெகிழ்ந்து இடம் கொடுத்து விடக் கூடாது, கண்டிப்பானவளாகவே விளங்க வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது.

உமா தன் சக்தியையெல்லாம் சேகரித்துக் கொண்டு பிச்சுமணியின் பிடியிலிருந்து மெல்லத் தன்னை விடுவித்துக் கொண்டு அவனுடைய கைகளை மிருதுவாக எடுத்து அப்பால் தள்ளினாள்.

''உமா! நீங்கள் தரையிலேயே கிடக்கிறீர்களே, உங்களைத் தூக்கிவிடலாமென்றுதான்......''

''அதற்காக என்னைக் குழந்தை என்று நினைத்து விட்டாயா, பிச்சுமணி ?'' என்று உமா செல்லமாகக் கடிந்து கொண்டாள்.

''பின்னே நீங்கள் குழந்தைமாதிரி விம்மி விம்மி அழுது கொண்டே இருந்தீர்களே?'' என்ற பிச்சுமணி சட்டென்று உணர்ச்சி வசமாகி, ''சொல்லுங்கள், நீங்கள் அழுது கொண்டிருந்தீர்களா, இல்லையா?'' என்று அவனும் அழாத குரலில் விம்மினான்.

''ஆமாம்!'' என்று உமா மெல்லத் தலையை ஆட்டினாள்.

''சொல்லுங்கள், ஏன் அழுதீர்கள்?'' என்று பிச்சுமணி படபடத்தான். உமாவின் அழுகையை நினைத்துக்கொண்டதும் அவனுக்கு ஆத்திரம் பொங்குகிறது என்பது தெளிவாகத் தெரிந்தது. ஆனால் அவன் ஆத்திரமெல்லாம் உமாவின்மீதா, அல்லது தன் மீதா, அல்லது மூன்றாவது நபர் மீதா என்பதை உமாவால் நிர்மானிக்க முடியவில்லை.

அந்தத் தர்மசங்கடமான நிலையில் நிதானமாகவும் உறுதியாகவும் நடந்து கொண்டு நிலைமையைச் சமாளிக்க வேண்டும் என்று மட்டும் அவள் தீர்மானித்துக் கொண்டாள். பிறகு அதன் பிரகாரமே பேசத் தொடங்கினாள்.

''நான் பெண்தானே? எதிர்பாராத நிகழ்ச்சியைக் கண்டதும் ஏதோ கொஞ்சம் அசட்டுத்தனமாக அழுது விட்டேன்!'' என்று சிரிக்க முயன்ற உமா, ''இப்போது எனக்கு எல்லாம் தெளிந்து விட்டது! ஆகவே இதையெல்லாம் நீயும் மறந்து விடு!'' என்றாள்.

''அதெப்படி மறக்க முடியும்? என் ஆயுள் முழுவதும் இனி என்னால் மறக்கவே முடியாது!'' என்றான் பிச்சுமணி.

அந்த வாசகம் உமாவின் உள்ளத்தையே எதிரொலிப்பது போல் இருந்தது. பொங்கி வரும் விம்மலை உமா உள்ளுக்குள்ளேயே அடக்கிக் கொண்டாள்.

''நல்ல வேளை, உமா! நான் மட்டும் குறுக்கே வந்திராவிட்டால் தாத்தா உங்களைச் சவுக்கால் அடித்தே நொறுக்கித் தள்ளியிருப்பார் !''

''பாவம்! அந்தப் பயங்கரமான சவுக்கடியை எனக்காக நீ தாங்கிக் கொண்டாய்!'' என்ற உமாவின் மெல்லிய உடம்பு நடுங்கியது. அந்தப் பயங்கரமான சவுக்கடியின் வலிமையையெல்லாம் தானே அநுபவிப்பது போல் துடித்தாள். பிச்சுமணியின் அன்பை நினைத்து அவள் வியந்து தன் நன்றிப் பெருக்கையெல்லாம் தன் கரு விழிகளில் துளித்து நிற்கும் ஒரு நீர்ப் பெருக்காலேயே உணர்த்தினாள்.

பிறகு அவள் தழுதழுக்கும் குரலில், ''பிச்சுமணி ! உனக்கும் உன் தாத்தாவுக்கும் என்னால்தான் சச்சரவு மூண்டது. அதற்காக என்னை மன்னித்து விடு!'' என்றாள்.

''உங்களை மன்னிப்பதா? எங்கள் வீட்டுத் தோட்டத்தில் உங்களுக்கு இப்படிப்பட்ட துன்பம் நேர்ந்ததற்காக நீங்கள்தான் என்னை மன்னிக்க வேண்டும்!'' என்றான் பிச்சுமணி.

''எனக்கு ஒரு துன்பமும் இல்லை, பிச்சுமணி!'' என்று உமா சிரித்து மழுப்ப முயன்றாள்.

''நான் வருவதற்கு முன்பே தாத்தா உங்களைச் சவுக்கால் அடித்திருக்கிறார். அந்த அடி தாங்காமல்தான் நீங்கள் கீழே விழுந்திருக்கிறீர்கள்!''

''பாவம். அந்த அடியை ஆட்டுக்குட்டி தாங்கிக் கொண்டது! எனக்காக மற்றவர்கள்தான் துன்பப்படுகிறார்கள்'' என்றாள் உமா தழுதழுக்கும் குரலில்.

''இல்லை, உமா! அந்தச் சவுக்கடி உங்கள் மீதும் விழுந்திருக்கிறது! உண்மையாகச் சொல்லுங்கள், சத்தியமாகச் சொல்லுங்கள்!'' என்று பிச்சுமணி கேட்டான்.

அவன் 'சத்தியமாகச் சொல்லுங்கள்' என்று ஆணை வைத்ததும் உமாவால் பொய் சொல்லி அதை மறைக்க முடியவில்லை. 'ஆமாம்' என்பதுபோல் மெல்லத் தலையை ஆட்டினாள்.

''அவர் மட்டும் என் தாத்தாவாக இல்லாமலிருந்து வேறொரு ஆளாக இருந்தால் உங்களைப் பயமுறுத்திச் சவுக்கால் அடித்ததற்குப் பதிலாக அவரை என் கையாலேயே அடித்து அடித்து அந்த இடத்திலேயே கொன்று போட்டிருப்பேன்!'' என்று பிச்சுமணி ஆக்ரோஷமாகச் சீறினான்.

## பறவைகளின் புரட்சி

சாதாரணமாக எழுத்தாளர்கள் நினைத்துப் பார்க்கவே அஞ்சக் கூடிய ஒரு பெரிய தொகையை ஒரு சிறுகதைக்குச் சன்மானமாகக் கேட்டு அதனைப் பெறவும் கூடிய அளவுக்கு ஆற்றல் படைத்தவர் டாப்னி டு மாரியர் என்கிற அம்மையார். அடுத்தாற் போல் என்ன நேரப் போகிறதோ என்று நெஞ்சம் 'திக் திக்' என்று அடித்துக்கொள்ளப் பீதியுடன் வெள்ளித் திரையைப் பார்க்க வைப்பதில் ஆல்பிரெட் ஹிட்ச்காக் கைத் தோல்வியுறச் செய்ய ஆல்பிரெட் ஹிட்ச்காக் ஒருவரால்தான் முடியும்! இந்த இரண்டு பேரும் சேர்ந்து விட்டால் கேட்கவா வேண்டும்! சென்னை ஸாஃபையர் ஸினிமாவில் ஓடுகிற ''பறவைகள்'' என்ற படம் பார்ப்பவர்களுக்கு ரோமாஞ்சனம் உண்டாகச் செய்து பயத்தை அனுபவிப்பதில் உள்ள அலாதியான ஓர் இன்பத்தை மட்டும் கொடுக்கிற திரைப்படமில்லை; ஆழ்ந்த கருத்தும் கொண்டது. பல்லாயிரம் வருஷங்களாக மனித இனம் பறவை இனத்தை எத்தனை விதமான சித்திரவதைகளுக்கு ஆளாக்கி வந்திருக்கிறது! ஐந்து நிமிஷம் சிந்தித்தால் ஐந்நூறு விதக்கொடுமைகளை எண்ணி விடலாம். இத்தனை கொடூரங்களை அனுபவித்து வரும் பறவை இனம் புரட்சி செய்யத் துணிந்தால், எதிர்க்கத் தீர்மானித்தால் என்னவாகும் என்பதைக் கோடி காட்டுகிறது டு மாரியரின் சிறுகதை. கதையைப்பற்றி இதற்கு மேல் ஏதும் சொல்வதை ஹிட்ச்காக் விரும்ப மாட்டார்! இந்தப் படத்தில் காமிராதான் பெரியநட்சத்திரம் எனலாம். காமிரா, ஒலி இந்த இரண்டையும் கையாண்டிருப்பவரின் திறமையை ஆரம்ப முதல் இறுதி வரை காணலாம்.



ஹிட்ச்காக் படம் என்ற உடனேயே அவருக்கும் நமக்கும் இடையில் ஒரு போட்டி ஆரம்பமாகி விடுகிறது. 'எங்கே அவர் நம்மைப் பயமுறுத்தி விடட்டும், பார்க்கலாம்!' என்று சவால் விட்டபடியேதான் தியேட்டரில் சென்று அமர்கிறோம். ஒவ்வொரு முறையும் வெற்றி ஹிட்ச்காக்குக்கே என்றாலும் அவர் டைரக்ட் செய்துள்ள ஐம்பதாவது படமாகிய 'பறவைக'ளில் அவர் வெற்றி பரிபூரணமடைந்திருக்கிறது. வழக்கம் போல் இப் படத்திலும் ஹிட்ச்காக் தாமே ஒரு விநாடி நேரம் தோன்றி மறைகிறார். எந்த இடத்தில் என்று படம்பார்க்கும்போது உங்களால் கண்டு பிடிக்க முடியுமா?

''நல்லவேளை: அவர் உன் தாத்தாவாக இருந்து விட்டார்! இல்லையென்றால் நீ ஓர் ஆளை அடித்துக் கொல்லும் பாவத்துக்கு நான் அல்லவோ காரணமாக இருந்திருக்க நேரிடும்!'' என்று உள்ளூற ஒரு துயரத்துடன் சொன்ன உமா, மெல்லச் சிரித்து அமைதியான முறையிலேயே அதை ஒரு சாதாரண விஷயம் போல் பாவித்துப் பிச்சுமணியைச் சமாதானப்படுத்த முயன்றவளாய், ''உன் தாத்தாவோடு வீணுகச் சண்டை போடாதே!'' என்றுள்.

''நானு சண்டை போட வந்தேன் ? அவர்தான் முரட்டுத்தனமாக......''

''அவர் பட்டாளத்து மேஜர் ! வயதாகி ரிடையரானவர்! அவர் ஏதோ கொஞ்சம் முரட்டுத்தனமாக நடந்து கொண்டாலும் நீதான் பணிந்து அவரோடு சமாதானமாகப் போக வேண்டும் !''

பிச்சுமணி உக்கிரமாகச் சிரித்தான். ''அவர் உங்களைச் சவுக்கால் அடித்துத் தள்ளினுர்! அதைப் பார்த்த பிறகுமா அவரோடு நான் சமாதானமாகப் போக வேண்டும்?'' என்று பிச்சுமணி தன் கண்களில் நீர் துளிக்கக் குமுறினுன்.

அந்த உணர்ச்சி வெள்ளத்தைக் கண்டதும் உமா தன்னை மறந்து அதில் அமுந்தியவளாய், ''பிச்சுமணி.....!'' என்று கூவினுள். உடனேயே அந்தக் குரலின் தாபத்தை உள்ளிழுத்து அடக்கிக் கொண்டு எதையோ அவள் யோசித்து விட்டு, ''பிச்சுமணி! உன் தாத்தாவுக்கு ஏதோ உள்ளூற அளவு மீறிய ஆத்திரம் இருந்திருக்கும்! அதனுல்தான் அந்த ஆத்திரத்தையெல்லாம் ஆட்டுக்குட்டியின் மீதோ என் மீதோ காட்ட முயன்றிருக்கிறுர்!'' என்றுள்.

''அவருக்கென்ன ஆத்திரம்? அவருக்கு இந்த உலகத்தில் என்னைத் தவிர வேறு எதுவுமே இல்லையே?''

''அப்படியானுல் அவர் ஆத்திரப்படும்படி நீதான் ஏதோ செய்திருக்கிறுய்!'' என்று சொன்ன உமா,ஏதோ ஒரு யோசனை நெஞ்சில் தைக்கவே, சட்டென்று உதட்டைப் பற்களால் கடித்துக் கொண்டாள்.

அதை நிலா வெளிச்சத்தில் பிச்சுமணியும் கவனித்து விட்டான்.

''உமா! நான் ஒரு தவறும் செய்ததில்லை, இனி செய்யப் போவதுமில்லை! என்னை இன்னும் முட்டாள் பையன் என்று நினைத்துக் கொண்டிருக்கும் அவர் தான் தவறு செய்கிறுர்!'' என்று குமுறிய பிச்சுமணி, ''நான் முட்டாளா இல்லையா என்பதைத் தீர்மானிக்கப் போவது......'' என்று கூறி உமாவின் முகத்தை உற்று நோக்கினுன். (தொடரும்)

எஸ். ரங்கநாயகி

எழுதும்

# நீரோட்டம்

சமூகத் தொடர்

கதை

அடுத்த இதழில் ஆரம்பமாகிறது



# பாலமுதம்

## கோவி. மணிசேகரன்

**அட்டைப் படக் கதை**



சத்திய நாராயணப் பிரகாசத்துடன் நீலவான் தேசத்துச் சக்கரவர்த்தினியைப் போல் நிறை நிலவு உதயமாகிக் கொண்டிருந்தது.

கடற்கன்னி தன்னுடைய தண்ணிய கரங்களைக் கொட்டி வெண்ணிய நுரை மலர் தூவிக் கண்ணியமான கற்பரசியைப் போல் வரவேற்று மகிழ்ந்தாள். அருள் கரக்கும் அந்த ஆனந்தத்தில்தான் அவளுக்கு எத்தனை எத்தனை துள்ளாட்டம்!

மெரினாக் கடற்கரையில் சூழ்ந்திருந்த மக்களுக்கு இந்த ரசனைப்பாடு இருந்ததோ, என்னவோ? ஆனால் ஒருமருங்கே தனித் தவமியற்றிக் கொண்டிருந்த அமுதாவுக்கு அது பரிபூரணமாக இருந்தது. பெண் குலத்துப் பொன் விளக்கு மட்டுமா அவள்? ரசனை நிரம்பிய ஒரு பிரபல எழுத்தாசிரியையாயிற்றே!

முகத்திலே வஞ்சனையில்லாமல் மெழுகிய மஞ்சளும், நெற்றியிலே வட்டமாக நிலவைப் போல் — ஆனால் களங்கமில்லாமல் வாரி அப்பிக் கொண்டிருந்த செந்நிறக் குங்குமமும் பூர்ணிமைக்கு மேலும் பிரகாசமளிப்பன போலத் துலங்கின. அமுதாவின் உள்ளக் கோயிலில் நிறைவான பக்தி நிரம்பி வழிந்தது. சத்திய நாராயண மூர்த்தியின் மாமந்திரம் அங்கே சத்தியமாக ஒலித்தது.

அடிக்கடி அவள் கடற்கரைக்கு வருவது வழக்கமானாலும், பௌர்ணமியன்று மட்டும் எந்தக் காரணத்தை முன்னிட்டும் தவற மாட்டாள். அவளுக்குள்ள சத்திய நாராயண பக்தி அப்படியானது.

பூரண தரிசனம் முடிந்ததும் மாளிகைக்குத் திரும்ப முனைந்தாள். அவளுக்குள்ளே ஓர் ஆனந்தம் பூவாக மலர்ந்து கற்பனையாக மணத்தது. எழுத்தாக இறங்கிவந்து சொற்களாகப் பரவ வேண்டியதுதான் மிகுதி. நேரே எதிர் வரிசையில் நிறுத்தப் பெற்றிருந்த வாகனத்தை நோக்கி நடந்தாள். அந்தக் கார் ஒரு திங்களுக்கு முன்னர்தான் வாங்கப்பட்டது. அவளுக்கே பிடித்த குங்கும நிறம்! அவ

னுடைய புனைபெயரே குங்குமத்தை அடிப்படையாகக் கொண்ட 'சுமங்கலி'யாயிற்றே! சொந்தத்தில் வெளியிடும் அவனுடைய பிரசுரத்தின் பெயரும் 'குங்குமப் பிரசுரம்'தான்!

''அமுதா......!''

யார் அது? எங்கோ கேட்ட குரல் மாதிரி இருக்கிறதே! அநுபவித்து நொய்ந்த ஒரு பலவீனம்!

திரும்பிப் பார்த்தாள். கண்கள் வியப்பால் விரிந்தன. யார்...... யார்....! பிச்சைக்காரனாக இல்லாவிட்டாலும் அந்த நிலையை ஒத்திருக்கும் இவர்.....

மனத்தில் உருண்டு திரண்ட கற்பனைகளெல்லாம் அந்த ஒரு கணத்தில் கஜினி முகம்மதுவைக் கண்ட சோமநாதபுரத்தைப் போல் வீழ்ச்சி கண்டு சிதிலமாயின!

தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

''யார் நீங்கள்?'' — குரலில் ஒருவித நடுக்கம் — இயற்கையான பாச நடுக்கம்!

''என்னைத் தெரியவில்லையா அமுதா! உன்னிடம்......''

அதற்கு மேல் அமுதாவால் அங்கு நிற்க முடியவில்லை. அவள் எந்த விதமான பதிலையும் எதிர்பாராதவளாய் வேகமாகக் காரில் ஏறிப் பறந்தாள். வெறிக்க வெறிக்கப் பறந்து செல்லும் காரையே பார்த்தவண்ணம் நின்றிருந்தான் அந்த மனிதன் — பாலு— **அமுதாவின் கணவன்.**

**மா**ளிகையை அடைந்த அமுதாவின் மனநிலை அடங்கவேயில்லை. 'மூச்சு புயலாகப் பறித்தது. சில சமயம் அது முட்டி மோதிப் புரட்டவும் செய்தது. அமுதா புரண்டாள்; துடித்தாள்; ஏன்? அழவும் செய்தாள்! ஓராண்டா, ஈராண்டா? ஏழரையாண்டு பிரிவாயிற்றே!

இரவு உணவு கொள்ளவில்லை; பசியற்ற ஒரு தவ நிலை! மனக் கண்கள் பூதாகாரமாகத் திறந்து உறக்கம் கொள்ள விடாமல் பயமுறுத்திக் கொண்டிருந்தன. இன்று நாம் இருக்கும் சொர்க்கமெங்கே? அவர் இருக்கும் நரகமெங்கே?

மெல்லியதாக அரும்பிய கண்முத்துக்களைச் சுண்டி எடுத்தெறிந்தாள். சென்ற கால நினைவுகள் மூளையில் கொட்டமடிக்கத் தொடங்கின.

எல்லாரையும் போலத்தான் அவர்களும் காதலித்தார்கள். ஆனால் எல்லாரையும் போல அவர்கள் கைவிட்டுப் பிரிந்தார்களில்லை. மணந்து அன்போடு இல்லற வாசலைத் திறந்தார்கள். முதன் முதலில் பாலமுதம் பருகிய போது அவர்களுடைய வாழ்வில் பன்னீர் மணம் கம்மென்று பரவத் தொடங்கியது. பாலு ஒரு பள்ளியாசிரியன். அமுதா ஓர் எழுத்தாசிரியை; சிருஷ்டிகர்த்தா! வாழ்வு காவியமாக மலர்ந்து மணம் வீசியதில் என்ன வியப்பு இருக்க முடியும்?

நுங்கம்பாக்கத்திலுள்ள குமரப்ப முதலித் தெருவில்தான் அவர்களுடைய அப்போதைய குடியிருப்பு. சின்னஞ் சிறிய வீடானாலும் அவர்களுக்கென்றே கச்சிதமாய் அமைவு பெற்றிருந்தது அந்த வீடு. அந்தச் சின்னஞ்சிறிய வீட்டிலிருந்துதான் எத்தனை பெரிய கற்பனைகள் புறப்பட்டுக் கொண்டிருக்கின்றன என்று வியக்காதவர்களே இல்லை: அளவில் என்ன இருக்கிறது? ஒரு முழம் மூங்கில் துண்டிலிருந்துதான் ஓராயிரம் ஜீவ சுரங்கள் இசை வெள்ளமாகப் பெருக்கெடுக்கின்றன!

'சுமங்கலி'யின் எழுத்தோவியங்களைத் தமிழகத்தில் சுமக்காத மனங்களே இல்லையென்று சொல்லலாம். அவளுக்காக லட்சோப லட்சம் பெண் வாசகர்கள் காத்துக் கிடந்தனர். ஆண் வாசகர்களும் அவளுடைய எழுத்தில் மயக்கம் கொண்டனர். பெண்களின் பண்பாட்டை மிளிர மிளிர எழுதிக் குவிக்கிறாளே! அவர்களுடைய துரதிர்ஷ்டமான வாழ்க்கை நிலையைப் பிழியப் பிழிய எழுதிச் சோகக் கண்ணீரைக் கொட்ட வைக்கிறாளே! எப்படி எழுதுகிறாள்! காதல் கதைகளா? இவளிடம் பிச்சை வாங்க வேண்டும்! வாழ்க்கையில் தவறிவிட்ட ஒரு பெண்ணின் மன நிலையை அந்த நாவலில் எப்படி மனோதத்துவ முறையில் அழகாகப் புரிய வைக்கிறாள்! அதைப் படிக்கும்போது அந்தப் பெண்ணின் மீது நமக்குப் பரிதாபமேற்பட்டு ஏன், கண்ணீரே சிந்த வைத்து விடுகிறாளே!

இவ்வாறான வியப்பு நிறைந்த கேள்விக் குறிகள் வாசக நெஞ்சங்களில் மட்டும்தானா எழுந்தன? வாழ்க்கைத் துணைவனான பாலுவின் சிந்தனையிலும் வளைந்து நின்றது. ஆனால் மேற்கண்டவர்களின் வளைவுமயிலின் கழுத்தை ஒத்திருந்தது. பாலுவின் கேள்விக்குறி வளைவு மட்டும் ஏன் தேளின் கொடுக்கைப் போல் காண வேண்டும்? எல்லாம் அவனுடைய பள்ளியில் வேலை பார்க்கும் அந்த அசட்டு ஆசிரியனால் வந்த வினைதான். பெயரைப் பார், நீலகண்டன்! காலகண்டனாக முளைத்தான். அவன்தான் ''அனுபவித்தறியாத ஒன்றை யாரும் அப்பட்டமாக எழுதிவிட முடியாது'' என்று ஒரு பிரபல மேலை நாட்டு ஆசிரியர் கூறுவதாகக் கூறினான்.

**மி**ன்சார விளக்கு அறிவின் நுட்பத்தை வெளிச்சம்போட்டுப் பேசிக் கொண்டிருந்தது. அமுதா சிந்தனைப் பிரசவத்தில் இனிதாக மூழ்கியிருந்தாள். அதில் பிறப்பது மாயாத உடம்பாயிற்றே என்ற நினைவு அவளுக்கு எப்போதும் உண்டு.

பாலு ஒரு மூலையில் கால் வருஷத்துப் பரீட்சை விடைத் தாள்களைத் திருத்திக் கொண்டிருந்தான். எனினும், கவனம் முழுதும் மனைவியையே சுற்றிச்சுற்றி வட்டமிட்டன. அமுதா தூய்மையுடையவள்தானா? அவளுடைய கற்புக்கு எத்தனை 'மார்க்குகள்' கொடுக்கலாம்?

''அமுதா.....!''

அமுதா திரும்பினாள்.

''ஏன்?''

''உன்னிடம் கொஞ்சம் பேச வேண்டும்!''

''அதற்கு இதுவா நேரம்?''

''வேறு தனியாக ஒரு நேரம் இருக்கிறதா?''

''என் வேலைகள் அனைத்தையும் முடித்துத் விட்டுத்தானே நான் எழுதிக் கொண்டிருக்கிறேன். வேறு ஏதேனும் தேவையா?''

''என்னைவிட எழுதுவது முக்கியமா?''

சரியான கேள்வி உரித்தான இடத்திலிருந்து புறப்பட்டு விட்டது. அமுதா

அதற்கு மேலும் எழுதிக் கொண்டிருக்க என்ன முட்டாளா?

பாலு கொஞ்சமும் தயங்காமல் கேட்டான்: ''அமுதா! காதலைப் பற்றிக் கதை கதையாக எழுதுகிறாயே! 'அநுபவித்தறியாத ஒன்றை யாரும் அப்பட்டமாக எழுதிவிட முடியாது' என்று ஒரு மேல்நாட்டு எழுத்தாளன் கூறுகிறான். நீயோ பல சமயங்களில் வழுக்கி விழும் பெண்களைப் பற்றியும் எழுதுகிறாய்! ஆகவே நான் குறிப்பிட்ட அந்த மேலை நாட்டு ஆசிரியனைப் பற்றிய உன்னுடைய அபிப்பிராயம் என்ன?''

''அது ஒரு முட்டாள்தனமான முடிவு! சிருஷ்டி ஞானமுள்ள எழுத்தாளர்கள் ஒரு பிறவி அநுபவஸ்தர்கள்! ஜன்ம ஜன்மாந்தர அநுபவங்கள் ஒரே பிறவியில் தெரிய வரும் போதுதான் எழுத்தாளன் அவதரிக்கிறான்! கருவில் திருவுடைய அவர்களுக்கு எல்லா அநுபவங்களும் பிறவிப் பிரசாதம்!''

''எனக்குப் புரியாத சொல்லடுக்குகள். போகட்டும். நீ யாரையாவது காதலித்திருக்கிறாயா?''

''காதலித்து இருக்கிறேன்!''

''யாரை?''

''தங்களை!''

''எனக்கு முன்னோ, பின்னோ — யாரையாவது?''

''அத்தான்! நீங்களா இப்படிக் கேட்கிறீர்கள்? உடலில் முள் தைக்கலாம்; ஆனால் இதயத்தில் முள் பாயக் கூடாது. சந்தேகமும் அப்படியான ஒன்றுதான்.''

அவன் விருட்டென்று எழுந்து உள்ளே சென்றான். அவளுடைய சிந்தனையில் தேங்கிய பால் திரைந்து விட்டது. மௌன வரவேற்பதற்குப் பதில் படுக்கையே வரவேற்றது.

**நா**ட்கள் உருண்டு உருத் தெரியாமல் சிதறி விட்டன. இப்போது அவர்கள் வெறும் ஜடங்களாகவே வாழ்ந்து வந்தனர். ஆயினும் வாய்க் கதவங்கள் அடைபடவில்லை. அவை வாதம் புரிந்த வண்ணம்தான் இருந்தன.

வாலிப வாசக உள்ளங்களின் கடிதங்கள் பெருகப் பெருகப் பாலுவுக்கு ஆத்திரமே தலை விரித்தது. அதன் காரணமாக ஒரு நாள் எழுத்துத் தொழிலுக்கே தலை முழுகிவிடக் கட்டளை யிட்டான். கணவன் எண்ணத்துக்கு மாறுபட்டு நடக்க விரும்பாத அமுதா அவ்வண்ணமே செய்தாள். இதனால் குடும்பத்தில் வறுமை மெல்ல மெல்லக் குடிபுகுந்தது. பள்ளியாசிரியர் பாலுவின் வருவாய் போதுமானதாக இல்லை. இந்த லட்சணத்தில் கிராமத்தில் வாழும் பெற்றோர்களுக்கு வேறு அவன் பணம் அனுப்ப வேண்டும். முன்பு நிறைய அனுப்பி மகிழ்வித்தான். இப்போது ஒரு பத்து ரூபாய்கூட ஒதுக்கி அனுப்ப அவனால் முடியவில்லை.

எப்படியோ வீட்டில் அமைதி கண்டால் போதும் என்பதுதான் அமுதாவின் அப்போதைய எண்ணம்! ஆனால் அந்த அமைதி



ஆமை: எப்ப வந்தேள்?
தேள்: சாதாரணமா எப்ப வந்தே என்று கேட்டால் போதாதாய்யா....கூட என்ன 'தேள்' வேண்டியிருக்கு?

கிடைக்க வில்லையே! அவன் அவளை வற்புறுத்திக் கொண்டே யிருந்தான். ''நீ யாரையோ காதலித்திருக்கிறாய்; ஒரு முறை தவறி இருக்கிறாய்! இதனை ஒப்புக் கொண்டே தீர வேண்டும்!''

எவ்வாறு ஒப்புக் கொள்வாள் அமுதா? மடிந்தாலும் மடியலாமேயொழிய மனம் அழுக இப்படி ஒப்புக் கொள்வதா?

ஓரிரவு இந்தச் சகிக்க முடியாத சோதனை தலைவிரித்துப்பேயாட்டம் போடத் தொடங்கி விட்டது. வாதம் என்றால் இப்படியப்படியான வாதமல்ல. எப்படியும் அவள் ஒப்புக் கொண்டே தீர வேண்டுமாம்!

அமுதா கணவனைக் கடைசியாகக் காலில் விழுந்து வணங்கினாள். கண்ணீரால் பாத பூஜை செய்தாள். மனம் நெகிழ்ந்தல்ல; மனம் வெறுத்துத்தான்! முடிவில் தான் படைத்த இலக்கிய ஏடுகளை எடுத்துக்கொண்டு வெளியேறி விட்டாள். பாலுவால் அவளைத் தடுத்து நிறுத்த முடியவில்லை; அந்தச் சக்தியும் அவனுக்கில்லை.

அமுதாவின் கால்கள் நடந்துகொண்டே இருந்தன. ஆயினும் அது முடிவற்ற பயணமாக இல்லை. அவள் என்ன தற்குறியா? தற்கொலைக்கு முயல? வாழ்ந்தே தீரவேண்டும்! அதன் மூலம் கணவனின் கண்களைத் திறக்க வேண்டும் என்று சங்கல்பம் செய்து கொண்டாள். நேரே அவளுடைய கால்கள் நெருக்கத் தோழி ராஜம் வீட்டு வாசற்படியில் நின்றன. அவளிடம் தனக்கேற்பட்ட அவல நிலையைச் சொன்னாள்.

மறு நாளே சிநேகிதியின் கணவருடைய செல்வாக்கின் மூலம் அடையாற்றிலிருந்த மாதர் சங்கத்தில் தஞ்சமடைந்தாள். பிரபல எழுத்தாசிரியை 'சுமங்கலி' மாதர் சங்கத்தில் பணி புரியும் பாக்கியம் ஏற்பட வேண்டுமே என்று அதன் தலைவி எண்ணி மகிழ்ந்தாள்.

மாதர் சங்கத்தில் பல முன்னேற்றங்களைச் செய்த ஒளிவிளக்காகச் 'சுமங்கலி' திகழ்ந்தாள். பல சுமங்கலிப் பெண்டிர் அவள் மூலம் சுமங்கலித் தத்துவத்தைப் புரிந்து கொண்டனர். இப்போது அமுதா என்ற பெயர் மறைந்து விட்டது. 'சுமங்கலி' என்ற பெயர் நிலைக்கத் தொடங்கியது. அந்தச் சங்கத்தின் உதவியால், தான் எழுதிய நூல்களைச் சொந்தமாகவே வெளியிட்டாள். அது நல்ல பயனைத்

தந்தது. இந்த ஏழரையாண்டுக்குள் அவனுக்கு நல்ல செல்வாக்குப் பெருகியது. எழுதி வெளியிட்ட நூல்கள் பல பதிப்புகள் கண்டன. பல பத்திரிகைகளில்தொடர்கதைகளை எழுதினான். ஒரு நாவல் அரசாங்கப் பரிசு பெற்றுப் பல மொழிகளில் பெயர்க்கப்பட்டது. குறிப்பாகப் 'பாலமுதம்' என்ற நூலை நாடே போற்றி வியந்தது. அது அவனுடைய வாழ்க்கை, கரு: தான் கண்ட சோதனைக் களம்! அவனது ஒன்றிரண்டு கதைகள் திரைப்படங்களாகவும் உருவாயின.

'பாலமுத'த்தைப் படித்து முடித்தாளே, பானுவின் கண்கள் திறந்தனவோ? பானுவையும், அமுதத்தையும் புனைந்தெழுதிய அந்த நாவலில் ஆண்களுக்கான பல சவுக்கடி வரிகள் கனலாகத் தெறித்தன. ஆண் சமுதாயம் சீற்றம் கொள்ளவில்லை. மனமாரப் பாராட்டியது. மனைவியின் பிரிவாற்றாமையால் தன்னைத் தானே வருத்திக் கொண்ட பானு, பள்ளி வாழ்வுக்கு எப்போதோ முற்றுப்புள்ளி வைக்க வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது. அவன் தனது வேலையில் கவனக்குறைவாக இருக்கிறான் என்று காரணம் காட்டி அவனை அனுப்பி விட்டார்கள் பள்ளி நிர்வாகிகள்.

நிறைவான சுமங்கலியின் நெற்றித்திலகம் போல் வைகறைப் போதின் வண்ணக் கதிரவன் உதயமாகிக் கொண்டிருந்தான்.

இந்த இரண்டு மாத காலமாகவே அமுதாவுக்குக் கணவனுடைய நிழல் நெஞ்சில் நீள்வதும் குறைவதுமாக இருந்தது. அன்று ஏன் அவர் தன்னை மறந்து என்னிடம் வர வேண்டும்?

அப்போது அவள் 'சுமங்கலி' என்ற ஒரு பெரிய தத்துவப் படைப்பைப் படைத்துக் கொண்டிருந்தாள். தன்னுடைய 'சுமங்கலி' என்ற பெயரை அதன் மூலம் நிலைநாட்டி விட வேண்டும் என்பது அவளுடைய கடைசி நோக்கம்! 'சுமங்கலி' எழுதும் சுமங்கலி!

வழக்கமாகக் காலை நேரத்தில் கற்பனோதயத்தில் மூழ்கினாள். அந்தத் தத்துவ நாவலும் முடியும் தருணத்தில் இருந்தது.

பேனா தடைப்பட்டது. பணியாளன் குரல் எழுப்பினான்.

அமுதா பேனா மூடியைத் திருகி விட்டு எழுந்து வெளியே வராந்தாவுக்கு வந்தாள்.

'மாம்பலத்தில் இத்தனை பெரிய வீட்டிலா அமுதம் வாசம் செய்கிறாள்!' என்ற வியப்போடு நின்றிருந்தான் பானு.

அமுதாவின் உடல் முழுதும் ஒருவிதப் புல்லரிப்பு. அங்க அவயவங்களில் ஒரு பொடி நடுக்கம். ஆயினும் அவள் தன்னைத் திடப்படுத்திக் கொண்டு வெளி வராந்தாவிலிருந்த பிரம்பு நாற்காலிகளுள் ஒன்றை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தாள்.

''யார் நீங்கள்? என்ன வேண்டும்?''

என் அமுதாவா என்னை இப்படி நடத்துகிறாள்? ஒரு பேச்சுக்கு உட்கார் என்றுகூடச் சொல்லவில்லையே! பெண் குலத்துக்குச் சிறப்பான பண்பைப் பற்றி எழுதும் 'சுமங்கலி'யா இவள்?

''அமுதா! நீ என்னை அடையாளமே தெரிந்து கொள்ளாதது போல் நடிப்பதற்கும் அலட்சியப்படுத்தி அவமதிப்பதற்கும் தகுந்த காரணமிருக்கிறது. அதனால் நான் உன் மீது கோபப்படப் போவதில்லை. இங்கே நான் வந்தது எனக்காக அல்ல. எனக்கென்று உன்னிடமிருந்து நான் எதையும் எதிர்பார்க்கவில்லை; எதிர்பார்க்க எனக்கு அருகதையுமில்லை. என்னுடைய நண்பன் கல்யாணராமன் என்னை எப்படியெல்லாமோ பேணிக் காப்பாற்றினான். அவன் இப்போது நொடித்துப் போய் விட்டான். அவனுக்காகவே இப்போது உன்னிடம் தூது வந்தேனே யொழிய, எனக்காக அல்ல! நீ இப்போது ஏதோ ஒரு புதிய தத்துவ நாவலைச் 'சுமங்கலி' என்ற தலைப்பிட்டு எழுதி வருகிறாயாம். அதை நாடே பரபரப்புடன் எதிர்பார்க்கிறது. அதன் மூலம் பெருத்த லாபம் காணலாம் என்று பல பதிப்பாளர்கள் போட்டியிடுவதாகவும் அறிந்தேன். நொடித்துப் போன என் நண்பனுக்கு — உன் நாவலை வெளியிடும் உரிமையைக் கொடுத்தால் அவன் மீண்டும் கரையேறி விடலாம் என்று எதிர்பார்க்கிறான். இந்த உதவிக்காகவே, இன்று வந்தேன், உதவுவாயா?''

அமுதாவின் நெஞ்சு நீரோடையாயிற்று. எண்ணத்தின் சலசலப்பு அங்கு இனிதாக ஒலித்தது. எனினும் துடுக்காகவே அவள் பேசினாள்: ''நீங்கள் வந்து கேட்டதும் நான் உடனே தட்டாமல் உங்கள் கோரிக்கைக்குச் சம்மதம் தெரிவித்து விடுவேன் என்று எண்ணியிருக்கிறீர்கள் ?''

''இந்த ஏற்பாட்டுக்கு நீ உடன்பட்டேயாக வேண்டும் அமுதா! ஏனென்றால் இன்று மங்காத புகழுடன் நீ விளங்குவதற்கு முக்கிய காரணம் என் நண்பன் கல்யாணராமன்தான். ஆமாம்; சுமங்கலி! உன்னுடைய இந்தப் புனிதமான பூ[illegible]பெயருக்கு மாசு தேட என்னைச் சாவு நெருங்கிய போது அதை நான் காலால் உதைத்து விரட்டியடித்தேன். கடுமையான நோயினால் நான் பீடிக்கப்பட்டுப் படுத்த படுக்கையாகக் கிடந்தபோது வைத்தியருக்கென்றும் மருந்துக்கென்றும் பாலுணவுக்கென்றும் பழங்களுக்கென்றும் பணம் செலவு செய்து என் உயிரை மீட்டவன் நண்பன் கல்யாணராமன்தான்! உனக்கு முன்னால் செத்துவிட நான் விரும்பவில்லை. உன் நெற்றியில் குங்குமம் இருக்க வேண்டுமே என்பதற்காகச் சாவுடன் போராடினேன்! நான் செத்து விட்டால் உன் படைப்புகளுக்குள்ள மரியாதை, பெருமை, அந்தஸ்து, அத்தனையும் போய் விடுமே என்ற பெரும் கவலைதான் எனக்கு!''

பானு அதற்கு மேலும் அங்கு நிற்க விரும்பாதவனாய் நடந்தான். எங்கும் நடக்கவில்லை. அமுதாவின் இதயத்தில்தான் அவன் நடந்தான். அமுதத்தின் கண்கள் மேலும் நீரைத் தேக்கி வைக்க முடியாமல் மடையுடைத்துக் கொண்டன.

''நில்லுங்கள்!''

பானு திரும்பிப் பார்த்தான். அவள் படிகளில் இறங்கி அவனை நோக்கி ஓடி வந்து கொண்டிருந்தாள்.




## ஐம்பத்து ஏழாவது அத்தியாயம்

தனக்குள்ளேபொங்கிக் கொண்டிருக்கிற துயரத்தையும் ஏமாற்றத்தையும் மோகினி தெரிந்து கொண்டுவிட முடியாமல் மிகவும் சாமர்த்தியமாக நடித்து விட்டாள் பாரதி. இன்னொருவருக்குமுன்னால் எதையும் நடித்துஏமாற்றி விட முடிகிறது. ஆனால் அதே காரியத்தைத் தன்னுடைய மனச்சாட்சிக்கு முன்னால் தானே நடிக்கவும் முடிவதில்லை; ஏமாற்றவும் முடிவதில்லை. சில வேதனை நிறைந்த வேளைகளில் தன்னை ஏமாற்றிக் கொள்ளவும் முடிந்தால்கூட நன்றாயிருக்கும் போல் தோன்றியது பாரதிக்கு. தன்னுடைய மகிழ்ச்சியின் மறுபுறமே பாரதியின் மௌனத்துக்கும் கலக்கத்துக்கும் காரணம் என்பதை மோகினியாலும் அப்போது புரிந்து கொள்ளமுடியவில்லை. பார்க்கப் போனால் இன்னொருவருடைய துயரத்தை மறுபு

# பொன் விலங்கு

## மணிவண்ணன்

ாகக் கொள்ளாத அசல் மகிழ்ச்சியே ந்த உலகத்தில் இருக்க முடியாது பாலும். கல்லூரி நிர்வாகியும் முதல் ரும் சத்தியமூர்த்திக்கு எதிராகச் செய்த சூழ்ச்சிகளும், கெடுதல்களும் தாற்று, நியாயமும், வெற்றியும் அவர் க்கமே கிடைத்துவிட்ட முதல் தினத் தக் கொண்டாடி மகிழும் எண்ணத் டன் தான் பாரதி அன்றிலிருந்து ல்லூரி வகுப்புகளுக்குப் போகத் தொடங்குவதென்று தீர்மானித்திருந் ாள். அந்தத் தீர்மானத்தில் என் வோ இப்போதும் கூட மாறுதல் ல்லை. ஆனால் அந்தத் தீர்மானத்துக்குக் ாரணமாயிருந்த உற்சாகம் மட்டும் ளர்ந்து நலிந்து குன்றிப் போயிருந் து. தான் கொடுத்தனுப்பிய கடி த்தை அவள் கொண்டு போகிறாள் ன்ற மகிழ்ச்சிப் பெருக்கோடு மோகினி ந்து முன்புறம் வழியனுப்புகிற பாவனை ல் உடன் நிற்க, மனத்தின் துயரத்தை றைத்துக் காட்டும் பொய்ச் சிரிப்போடு ாரில் ஏறி அமர்ந்தாள் பாரதி. 'தந்தை யைப் பறிகொடுத்த துயரம் ஆறி ஒருவழி ாகச் சின்னம்மா இன்றிலிருந்து காலே ுக்குப் போக ஆரம்பிச்சிருக்காங்க' ன்ற உற்சாகத்தோடு காரை ஸ்டார்ட் செய்த முத்தையா, கார் காம்பவுண் டைக் கடந்து சிறிது தொலைவு சென்ற ும் பின் ஸீட்டிலிருந்து மெல்ல கேம்பி அழுகிற ஒலியைக் கேட்டுத் கைத்தான்.

''என்னம்மா இது? அசட்டுப் பொண்ணு போல.... எதுக்காவ இப்படி அழுவுறே? அப்பா நெனைப்பு வந்திரிச்சுப் போலேயிருக்கு... நீ ஒண்ணும் சின்னஞ் சிறிசோ, பச்சைப் பசலையோ இல்லே. த்தினி அழுதாலும் அந்தப் புண்ணியப் பொறவி — மகராசன் இனிமே வரப் போறாரா? விவரந்தெரிஞ்ச பொண்ணு. யாத்தான் உன் மனசைத் தேற் றிக்கணும்..... இன்னிக்கி மனசு சரியா இல்லேன்னு காலேஜுக்குப் போகாட்டிப் போவுது...... ானைக்கிப் போயிக்கலாம்மா! என்ன சொல்றே? வண்டியை வீட்டுக்குத் திருப்பட்டுமா?'' ன்று 'அவளுடைய துயரத்துக்குத் ந்தையின் ஞாபகம்தான் காரணமோ?' னத் தானாகவே தனக்குள் கற்பித் துக் கொண்டு ஆறுதல் கூறத் தொடங்கி ிருந்தான் டிரைவர் முத்தையா.

'இல்லே முத்தையா! காலேஜுக்கு அப்புறம் போகலாம். முதலில் லேக் அவென்யூவுக்குப் போ....'' என்று கண்ணீரைத் துடைத்துக் கொண்டே அவனுக்கு மறுமொழி கூறினாள் பாரதி. அப்போது அவள் கையிலிருந்த கல் லூரிப் பாடப் புத்தகங்களுக்கிடையே மோகினி சத்தியமூர்த்தியிடம் அளிப்ப தற்காகக் கொடுத்தனுப்பியிருந்த கடித உறை இருந்தது. அவள் மேல் தனக்கிருக்கும் அதிக நம்பிக்கையை நினை வூட்டுவதற்காகவோ அல்லது உறைக் குள்ளே இருக்கிற கடிதத்தில் எந்த இரகசியமும் இல்லை என்று கருதிய தாலோ உறையை ஒட்டாமலே திறந்து வைத்திருந்தாள் மோகினி. செய்த சத்தியத்தையும் ஒப்புக்கொண்டு வாக் குக் கொடுத்துவிட்டதையும் காப்பாற்று வதற்காகப் பாரதி அந்தக் கடிதத்தைச் சத்தியமூர்த்தியிடம் கொண்டு போய்ச் சேர்த்தேயாக வேண்டும். தான் நியாய மாக நடந்து கொள்ள வேண்டுமானால் அதைச் சத்தியமூர்த்தியிடம் கொடுப்ப தற்கு முன் தானும் ஒரு முறை படித்து விடவேண்டுமென்று இந்த விநாடியில் தன் மனத்தின் அடிமூலையில் எழுகிற திருட்டு ஆசையைத் தான்விட்டுவிடுவதே நல்லதென்று அவளுக்குத் தோன்றியது. ஆனால் மிகப் பல சமயங்களில் மனி தர்களால் நினைப்பளவிலும் சொல்லள விலும்தான் நியாயத்துக்கும் சத்தியத் துக்கும் அதிக பட்சமாக மரியாதை செய்ய முடிகிறது. 'நியாயமாக நடந்து கொள்ள வேண்டும்' என்று நினைக்க முடிந்தவரை பெரும்பாலான மனி தர்கள் நல்லவர்கள்தான். இந்த நினைப் பின் எல்லை வரை எல்லாருக்கும் வெற்றி தான். ஆனால் இந்த நினைப்பளவைக் கடந்து 'செயலளவு' — என்ற இடம் வரும்போதுதான் சத்தியசோதனை மெய் யாகவே ஆரம்பமாகிறது. கல்வித் திற னும், நெஞ்சுரமும் உள்ள மனமுதிர்ச்சி யாளர்கள் பலரே இந்தச் சோதனை யில் தோற்றுவிடும்போது பாரதியைப் போல் ஓர் அபலைப் பெண் மட்டும் எப்படி வென்றுவிட முடியும்? நீண்ட நேரத் தயக்கத்துக்குப்பின் அந்தக் கடிதத் தைத் தானும் படித்துவிட வேண்டு மென்ற ஆவல்தான் அவள் மனத்தில் வென்றது.

நடுங்கும் கைகளால் மோகினியின் அந்தக் கடிதத்தை உறையிலிருந்து எடுத்துப் படிக்கத் தொடங்கினாள் அவள். கார் அதிக வேகமில்லாமல் 'லேக் அவென்யூவை' நோக்கி மெல்லப் போய்க் கொண்டிருந்தது. அந்தக் கடிதத்தைப் படித்து முடித்துவிட்டு மீண்டும் உறைக்குள் வைத்தபோது 'தான் தவறு செய்துவிட்டோம்' என்ற உணர்வு அவளுள் எழுந்தது. படிக்கத் தொடங்குவதற்கு முன்பும் அதே உணர்வுதான் இருந்தது. படித்தபோது மட்டும் ஆவல் பெருகி அவளுடைய கண்களுக்கு முன் நியாயத்தைச் சிறியதாக மறைத்து விட்டது. தவறுசெய்வதன் இலக்கணமே அப்படித்தான். செய்யத் தொடங்கு முன்பிருந்த விழிப்பும் எச்சரிக்கையும் அநேகமாகப் பயன்படுவதில்லை. செய்து முடித்த பிறகு வருகிற விழிப்பினாலும் எச்சரிக்கையினாலுமோ எந்த விதத்தினாலும் பயனே இல்லை. மோகினி சத்தியமூர்த்திக்கு மிக உருக்கமாகவும் அந்தரங்கமாகவும் காதல் கனியக் கனிய எழுதியிருந்த அந்தக் கடிதத்தைப் பாரதி படித்திருக்கக் கூடாது தான்! ஆனால் 'தான் அதைப் படித்திருக்கக் கூடாது' என்ற உணர்ச்சியே அதைப் படித்த பின்புதான் அவளுக்கு ஏற்பட்டது. படித்ததன் விளைவோ— அவளுக்கு முன்னைக் காட்டிலும் அதிகமாக அழுகை குமுறிக்கொண்டு வந்தது. திடீரென்று இருந்தாற் போலிருந்து தான் யாரும் விரும்பக் கூடாத குரூபியாகி விட்டாற் போலவும், தன்னிடமிருந்த சிறிய அழகும் இப்போது மோகினி ஒருத்தியிடமே போய்ச் சேர்ந்து அந்தப் பேரழகோடு சங்கமமாகி விட்டாற் போலவும் மோகினி எல்லோரும் விரும்பத்தக்க ஒரே பேரழகியாக ஒளிர்வதாகவும் ஒரு பிரமை கொண்டாள் பாரதி. மோகினிக்கும் — சத்தியமூர்த்திக்கும் இடையே தவிர்க்க முடியாத பிணைப்பும், அன்பும் இருப்பதாக இந்தக் கடிதம் பாரதிக்குச் சொல்லி விட்டது. அதே சமயத்தில் இன்னொரு விஷயத்தைப் பற்றித் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியாமல் மனம் குழம்பினாள் பாரதி.

இந்த நாட்டியக்காரி மோகினியைத் தான் ஏற்கனவே, மணந்து கொண்டு விட்டது போன்ற ஒரு நெருக்கமான உரிமையைப் பெற்றிருப்பதாகவும், இனி அந்த உரிமையை அதிகார பூர்வமாக அடைவதற்காக அவனைப் பதிவுத் திருமணமே செய்து கொண்டுவிடக் கருதியிருப்பதாகவும், ஜமீன்தார் மாமா தன் தந்தை பூபதி உயிரோடிருந்தபோது அவரிடம் மதுரையில் வைத்துப் பேசிக் கொண்டிருந்ததை நினைத்து மனம் குழம்பினாள் பாரதி. ஜமீன்தாரும் தன் தந்தையும் முன்பு இதைப் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டிருந்ததிலிருந்து மோகினியை ஜமீன்தாரோடு தொடர்புபடுத்தியே நினைக்கத் தொடங்கியிருந்தாள் பாரதி. மோகினி மல்லிகைப்பந்தலுக்கு வந்து விட்ட பின்பே பாரதியின் இந்த நினைப்புப் படிப்படியாக மாறியது. மல்லிகைப்பந்தலில் வந்து தங்கிய பின் சில தினங்களுக்குள்ளேயே மோகினி ஜமீன்தாரையும் கண்ணாயிரத்தையும் அடியோடு வெறுப்பதையும் பாரதி புதிதாகப் புரிந்து கொண்டிருந்தாள். அந்த நாட்டியக் கலையரசியின் இதயம் எங்கே ஆட்பட்டிருக்கிற தென்பது இன்று இந்த விநாடியில் பாரதிக்குத் தெரிந்து விட்டது. ஆனால் மோகினியின் லாபம் தன்னுடைய நஷ்டமாயிருப்பதை உணர்ந்து வேதனைப்பட்டுத் தவிக்காமல் இப்போது அவளால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. காரில் அவள் கண் கலங்கி அழுவதைப் பார்த்து — இறந்துபோன தந்தையின் நினைவாக அழுகிறாள் என்று டிரைவர் முத்தையா எண்ணிக் கொண்டான். பாரதியோ 'லேக் அவென்யூ' வருவதற்குள் அழுகையோடு அழுகையாக ஆவலையும் அடக்கிக்கொள்ள முடியாமல் அந்தக் கடிதத்தை இரண்டு மூன்று முறை அவசர அவசரமாக எடுத்துப் படித்துவிட்டாள். ஒவ்வொரு முறை படித்து முடித்தபோதும் அவளுக்குத் தவிர்க்க முடியாத அழுகை குமுறிக் கொண்டு வந்தது. கடிதமோ மனப் பாடமே ஆகிவிட்டது.

'மல்லிகைப்பந்தல் பட்டுப்புடைவைக் கடையில் என்னை ஜமீன்தாரோடு சேர்த்துப் பார்த்ததைத் தவறாக எண்ணிக் கொள்ளக் கூடாது. மறுக்க முடியாத காரணத்தால் மறுக்க முடியாத சூழ்நிலையில் அவரோடும் கண்ணாயிரத்தோடும் நான் கடைக்குப் புறப்படும்படி ஆகிவிட்டதென்று' மோகினி கடிதத்தில் எழுதியிருந்தாள். இதைப் படித்த பின்பே பட்டுப் புடைவைக் கடையிலிருந்து திரும்பும்போது மோகினி கண் கலங்கிய நிலையில் வருத்தத்தோடு வீட்டுக்குத் திரும்பியதன் காரணம் பாரதிக்குப் புரிந்தது. மேலும் அந்தக் கடிதத்தில் சத்தியமூர்த்திக்குக் கல்லூரியில் வந்த இடையூறுகள் தீர்ந்து நியாயம் கிடைத்ததைப் பாராட்டியும் அவருடைய தந்தை யாரென்று பாரதியின் மூலம் தான் புரிந்துகொள்ளநேர்ந்ததைப் பற்றியும் எழுதியிருந்தாள் மோகினி.

இவற்றைத் தவிர முதன் முதலாக இரயிலிலிருந்து கீழே குதித்துத் தற்கொலை செய்துகொள்ள முயன்றபோது சத்தியமூர்த்தி தன்னைக் காப்பாற்றியதிலிருந்து சங்கீத விநாயகர் கோவில் தெருவில் தன் வீட்டுக்கு வந்து தன் இதயத்தை ஆண்டது வரை எல்லாம் கூறி, 'நான் வாழ்ந்து உங்களை நினைக்க வேண்டும்; அல்லது நீங்கள் வாழ்ந்து நினைக்க ஒரு ஞாபகமாகி நானே போய்விட வேண்டும்' என்று கடிதத்தை முடித்திருந்தாள் மோகினி. இவற்றையெல்லாம் கண்ணீருக்கிடையில் பாரதி படித்து முடித்தபோது 'அவள் பாக்கியசாலி' என்று மோகினியின் மேல் பெருமையாகவும் இருந்தது. அதே சமயத்தில் அவள் பெற்றிருக்கும் பாக்கியம் எதுவோ அதுவே தான் இழந்து கொண்டிருக்கிற பாக்கியம் என்று அவள்மேல் பொறாமையாகவும் இருந்தது. காரை 'லேக் அவென்யூ'வி லுள்ள ராயல் பேக்கரி ரொட்டிக் கடை வாசலில்! நிறுத்தச் சொல்லி விட்டுக் கீழிறங்கியபோது பூமியில் மிதித்து நடப்பதற்கே சக்தி யில்லாதவள் போல் சோர்ந்து போயிருந்தாள் பாரதி. மாடிப் படி ஏறிப் போய்ச் சத்தியமூர்த்தியை நேருக்கு நேர் சந்தித்துத் தானே தன் கையினால் அந்தக் கடிதத்தை அவரிடம் கொடுத்தாக வேண்டும் என்று நினைத்தபோது அவளுடைய கால்கள் அந்தச் செயலைச் செய்வதற்காக முன்நோக்கி நடக்கத் துணியாமல் தயங்கின. மனம் மலைத்தது. நினைவுகள் கூசின. மோகினியிடம் சொல்லி ஒப்புக் கொண்டு விட்ட வார்த்தை ஒன்றைக் காப்பாற்றிவிட வேண்டுமென்ற பிடிவாதத்தை விட முடியாமல் தன்னுடைய ஆசையைத் தானே பலியிடுவது போன்ற அந்தக் காரியத்தைச் செய்வதற்காக நடைப்பிணமாய் மாடிப் படி ஏறினாள் பாரதி. 'படிகளிலேயே சுருண்டு விழுந்து விடுவோமோ' என்று பயப்படுமளவுக்கு அப்போது அவளுடைய கால்கள் ஒன்றோடொன்று பின்னின. அவளுடைய உடல் மேலே படியேறிக் கொண்டிருந்த அதே வேளையில் மனமும் உணர்ச்சிகளும் கீழே அதல பாதாளத்துக்குச் சரிந்து தலை குப்புறக் கவிழ்ந்து வீழ்ந்து கொண்டிருந்தன. அரிய முயற்சி செய்து அவள் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டியதாயிற்று. முகத்தில் அழுத சுவடு தெரியாமல் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, துடைத்தெடுக்க முடியாத அழுகையின் சாயலோடும் கையில் கடித உறையோடும் அவள் சத்தியமூர்த்தியின் அறைக்குள் நுழைந்தபோது, நல்லவேளையாக அறையில் அவன் மட்டுமே தனியாக இருந்தான். மேனியில் வெள்ளை வெளேரென்று மின்னலாய் வழியும் ஜிப்பாவும் வேஷ்டியும் அணிந்து பொன் மின்னலொன்று வெறும் மின்னலையுடுத்தி வீற்றிருந்தாற்போல் கல்லூரிக்குப் புறப்படத் தயாராகிவிட்ட கோலத்தில் ஏதோ வகுப்பு நடத்துவதற்கான பாடக் குறிப்புக்களைப் பார்த்தபடி வீற்றிருந்தான் சத்தியமூர்த்தி.

மெல்லத் தயங்கித் தயங்கி அறைக்குள் நுழைந்த பாரதி, அவன் தன்னை நிமிர்ந்து பார்த்ததும் என்ன செய்கிறோம் என்ற உணர்வே இன்றி ஆனால் ஏதோ செய்தாக வேண்டும் என்ற உணர்வுடன் மிகவும் தொலைவில் விலக்கி வைத்து வணங்கி மரியாதை செய்ய வேண்டிய பெரிய மனிதர் ஒருவரை எதிரே பார்த்து விட்டாற்போல் பயபக்தியோடு கைகூப்பினாள். திடீரென்று அவளை அங்கே எதிர்பாராமல் சந்தித்த பரபரப்பைச் சிறிதும் காண்பித்துக் கொள்ளாமல் ''என்ன?...... சௌக்கியமா யிருக்கிறீர்களா?'' என்று நிதானமாகச் சிரித்தபடி சுகம் விசாரித்தான் சத்தியமூர்த்தி. அந்தச் சிரிப்பும் அந்த முகமும் அந்தக் கண்களும், மின்னலாய் எதிரே வீற்றிருக்கும் அந்தக் கம்பீரத் திரு உருவமும், தரையில் பூத்த செந்தாமரைகளாய் இலங்கும் அந்தக் கால்களும் இப்போது 'தான் ஆசைப்படக் கூடாதனவாகி விட்டன' என்ற நிராசையின் காரணமாகவே முன்னிலும் அதிக அழகோடும், அதிகச் சோபையோடும் தோன்றி அவளை மயக்கின. அந்த மயக்கத்தினால் தன் கண்கள் கலங்குவதையும் அடக்கிக் கொள்ள முடியாமல்...''இதை மோகினி அக்கா உங்களிடம் கொடுக்கச் சொன்னாங்க'' என்று சொல்லுருவம் நலிந்து உடைபட்ட வார்த்தைகளால் கூறிவிட்டுக் கையிலிருந்த அந்தக் கடித உறையை அவன் கையில் நேரடியாகக் கொடுக்கவும் துணியாமல் அவனருகே இருந்த

**பொன் விலங்கு**

பார்க்கப் போனால் இன்னொருவருடைய துயரத்தை மறுபுறமாகக் கொள்ளாத அசல் மகிழ்ச்சியே இந்த உலகத்தில் இருக்க முடியாது போலும்.

மேஜையின் மேல் விளிம்பில் பட்டும் படாமலும் வைப்பதுபோல் தயங்கிய படியே வைத்தான் பாரதி. 'மோகினி அக்கா' என்ற பெயரைக் கேட்டதும் சத்தியமூர்த்தியின் முகத்தில் சிரிப்பு மறைந்து இன்னதென்று கண்டுபிடிக்க முடியாத ஓர் உணர்வு தெரிவதை எதிரே நின்ற பாரதி கவனித்தாள். ஆனால் அவளாலும் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. கடிதத்தை அவன் எடுத்துப் படிக்கத் தொடங்கிய பின்பும் அவள் சிறிது நேரம் நிராசை யோடு அவனையே பார்த்துக்கொண்டு நின்றாள். ஆசைப்பட முடியாத எல்லை யில்தான் அதிக ஆசை பெருகுகிறது என்பது அந்தக் கணத்தில் அவளைப் பொறுத்த வரை மெய்யாயிருந்தது. அவன் பார்வை நேர் எதிரே தன் மேல் இருந்திருந்தால் அவளுக்கு அவனை ஏறிட் டுப் பார்க்கும் துணிவே வந்திருக்காது. அவன் குனிந்து கடிதத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்ற காரணத்தால் அவள் நன்றாக அவனைப் பார்க்க முடிந் தது. அவள் உணர்ச்சி வசப்பட்டாள். அழுகை குமுறிக் கொண்டு வந்தது. விசும்பல் ஒலியைக் கேட்டுத் தலை நிமிர்ந்த சத்தியமூர்த்தி, "நீங்கள் ஏன் அழுகிறீர்கள்?" என்று அவள் அழுவதன் காரணத்தைத் தானும் புரிந்து கொண்டே புரியாதது போல் கேட்ட போது பாரதி வேகமாகக் கீழே திரும் பிப் படியிறங்கினாள். "அடடே.... இதென்ன தர்மசங்கடம்...?" என்று சொல்லிக் கொண்டே எழுந்திருந்த சத்தியமூர்த்தி அழுது கொண்டே விரைந்து விட்ட அவளைப் பின்தொடர வும் முடியவில்லை. மேலே யிருந்து பலகணி வழியே கீழ்ப்புறம் சாலையைப் பார்த்தபோது அவள் ஏறிக்கொண்ட பின் கார் புறப்படுவது மட்டும் தெரிந் தது. அந்தக் கடிதத்தைப் பாரதியிடம் அப்பாவித்தனமாகக் கொடுத்தனுப்பிய பேதை மோகினியின் மேல்தான் அவ னுக்கு அப்போது கோபம் கோபமா வந்தது. சிறிது நேரத்துக்குப் பி கல்லூரிக்குப் புறப்பட்டான் அவன்.

அன்று கல்லூரியில் மாணவர்கள் மி வும் உற்சாகமாக இருந்தார்கள். முத முதலாக அவன் நுழைந்த வகுப்பி மாணவர்கள் அவனை மாலை சூட்டி வ வேற்றார்கள். மூன்றாவது பாடவேளையி பாரதியின் வகுப்புக்குச் சென்றபோ தான் அவளும் அன்று கல்லூரிக் வந்திருப்பதை அவன் தெரிந்துகொள் நேர்ந்தது. தற்செயலாக அன்று நடத் வேண்டிய பாடக் கட்டுரையாக வந் வாய்த்தது 'குறுந்தொகையில் இல கிய நயம்' என்ற தலைப்பில் இருந்த கட்டுரையின் நடுவே சத்தியமூர்த்தி ம லிகைப்பந்தல் கல்லூரிக்கு இன்ட வியூவுக்கு வந்திருந்தபோது பூபதியிட விளக்கிக் கூறிய **'யாயும் ஞாயும் யா** **ரயோ?'** என்ற குறுந்தொகைப் பா லும் இருந்தது. சத்தியமூர்த்தி அந்த பாடலின் பொருளையும் நயங்களையு இன்றும் மாணவர்களுக்கு விளக்க தொடங்கினான். வகுப்பில் அதை கேட்கக் கேட்கப் பாரதியின் முக அழுவது போல் சிவந்து கண்கள் கலங் வதைச் சத்தியமூர்த்தியும் கவனி தான். வகுப்பின் நடுவே அவள் குமு அழுதுவிட்டால் நன்றாக இருக்காதென் கருதிய சத்தியமூர்த்தியே மிகவு சாதுரியமாக ஒரு காரியம் செய்தான் "மிஸ் பாரதி! உங்கள் தந்தை இழந்த பின் முதன் முதலாக இன் தான் கல்லூரிக்கு வந்திருக்கிறீர்கள் ஆனாலும் உங்கள் மனம் இன்னமு முழுமையாக ஆறுதல் அடையவில்லை என்று தெரிகிறது. தயவுசெய்து இன்று வீட்டிற்குப் போய் ஓய்வு எடுத்து கொள்ளுங்கள்! உங்களைப் பார்த்தா மிகவும் வருந்தத் தக்க நிலையில் இரு கிறீர்கள்..." என்று சொல்லி அ ளுக்கு வகுப்பிலிருந்து வெளியே செ ; தானாகவே அநுமதி கொடுத்துவிட

ான். அவளும் தலை குனிந்தபடியே ழுந்து மௌனமாக வெளியே சென்று ிட்டாள். அவள் எதற்காக மனம் டைந்து போயிருக்கிறாள் என்று த்தியமூர்த்திக்குத் தெளிவாகப் புரிந் ருந்தும் அந்தப் பேதைக்கு முன்னால் வனே ஒன்றும் தெரியாதது போல ப்போது நடிக்கத்தான் வேண்டியிருந் து. அவள் வெளியேறிச் சென்ற பின்பு குப்பு அமைதியாக நடைபெற்று டிந்தது. வெளியேறிச் சென்ற ாரதியோ கார் நிற்கும் இடத்துக் ப் போய் நேரே வீட்டுக்கு விடச் சொல்லிப் புறப்பட்டு விட்டாள். மாலை ில் அவள் கல்லூரிக்கு வரவேயில்லை.

சாயங்காலம் கல்லூரி விட்டதும் ான் பாரதி திரும்பி வருவாள் என்று னைத்து 'அவள் திரும்ப வரும் வேளை ந்த விநாடியே உடனே வரக்கூடாதா' ன்னும் தவிப்போடு வீட்டில் காத் ருந்த மோகினி நண்பகலிலேயே அவள் ிரும்பி வருவதையும் அவளுடைய ண்கள் அழுது அழுது சிவந்திருப்பதை ும் பார்த்துத் திகைத்துப் போனாள். போர்டிகோவில் காரிலிருந்து இறங்கி உள்ளே நடந்து வந்த பாரதி தன் கையில் அடுக்கிக் கொண்டிருந்த — புத்த ங்களில் இரண்டொன்று வருகிற வழி ில் வரிசையாக நழுவிக் கீழே தரை ில் விழுவதைக்கூட உணராமல் பிரமை பிடித்தவளாக நடந்து வருவதைப் பார்த்து மோகினிக்கு ஒன்றுமே புரியவில்லை. கையிலிருந்து நழுவி விழுகிற புத்தகங்களைப் போல அவளுடைய மனத்திலிருந்து நழுவிக்கொண்டிருக்கிற உணர்வுகளை மோகினியால் புரிந்து கொள்ள முடிந்திருந்தால் பாரதியின் துயரத்துக்குக் காரணம் என்னவென்பதை ஒருவேளை அவளால் உணர்ந்து கொண்டிருக்க முடியுமோ என்னவோ?

''ஏன்? நீ காலேஜுக்குப் போகவில்லையா?.... பாதியிலேயே வந்துவிட்டாயே... உடம்புக்கென்ன? பார்ப்பதற்கு என்னவோ போலிருக்கிறாயே?'' என்று விசாரித்த மோகினிக்குப் பதில் சொல்ல முடியாமல் அவளருகே வந்து தயங்கி நின்றாள் பாரதி. இரண்டாம் முறையாகவும், இதே கேள்விகளை மோகினி பாரதியிடம் கேட்டபோது, ''அவரை அறையிலேயே போய்ப் பார்த்து அந்தக் கடிதத்தைக் கொடுத்தாச்சு அக்கா!... எனக்கு ஒரே தலைவலியா இருக்கு... ஜுரமும் இலேசாக வந்திருக்கிறாற் போலத் தோன்றுகிறது...'' என்று அவள் தன்னைக் கேட்காத கேள்விக்கும் கேட்ட கேள்விகளுக்கும் சேர்த்தே மறுமொழி கூறினாள் பாரதி.



ஆபீஸ் முதலாளி: நம்ம ஆபீஸ் சிப்பந்திகளெல்லாம் லீவு போட்டு விட்டுக் காசையும் கொடுத்துக் கிரிக்கெட் மாட்சுக்கு வந்து தூங்குகிறார்கள் பார்த்தீரா? இங்கே தூங்குகிறதை ஆபீஸில் வந்து தூங்கப்படாதோ?

''கடிதத்தைப் பற்றி இப்போ என்ன வந்ததம்மா? நீ இன்றைக்குக் காலேஜுக்குப் போகாமலிருந்திருந்தாலும் பரவாயில்லையே?...போய் இப்படி உடம்புக்கு இழுத்து விட்டுக் கொண்டு வந்திருக்கிறாயே....'' என்று ஆறுதலாகக் கூறியபடி பாரதியைத் தழுவினாற்போல் கைத்தாங்கலாக அழைத்துச் சென்று படுக்கையில் படுக்க வைத்தாள் மோகினி.

''உடம்புக்குச் சரியில்லை என்றால் பச்சைக் குழந்தை மாதிரி இப்படியா அழுவாய் பெண்ணே?'' என்று மோகினி சிரித்துக்கொண்டே வினவியபோது, பாரதி பதிலுக்குச் சிரிக்க முயன்று முடியாமல் பொய்யாக ஏதோ நடித்தாள். மாலைவரை பாரதியிடம் ஒன்றும் பேச்சுக் கொடுக்காமல் அவளை நிம்மதியாய்த் தூங்கும்படி கூறித் தனியே விட்டுப் போயிருந்த மோகினி மாலையில் திரும்பி வந்து அவள் படுத்திருந்த அறையில் பார்த்தபோதுதான் அவள் தூங்கவே இல்லை. என்றும் இன்னும் நிறைய அழுதிருக்கிறாள் என்றும் தெரிந்தது. ''அசடு! எதற்காக அழுகிறாய் இப்படி? காலேஜுக்குப் போன உடனே உனக்கு அப்பாவின் நினைவு வந்து விட்டதா? பாவம்...'' என்று கேட்டுக் கொண்டே டெம்பரேச்சர் பார்த்த மோகினி பாரதிக்கு நிஜமாகவே நல்ல ஜுரம் வந்திருப்பதைப் புரிந்துகொண்டு பரபரப்படைந்து பதறினாள்.

(தொடரும்)

# மீனாட்சி கல்யாணம்



மனிதர்களுக்குத்தான் சுக்கிர தசை அடிக்கிறது என்று சொல்லிக் கேள்விப்படுகிறோம். சில சமயங்களில் தெய்வங்களுக்குக் கூட இந்த மாதிரி தசை பிறந்து விடுவதைக் காண்கிறோம். மதுரைக் கோயிலைப் புதுப்பித்துக் கும்பாபிஷேகம் செய்ததிலிருந்து ஸ்ரீ மீனாட்சி அம்மனுக்கே யோகம் பிறந்துவிட்டது என்று எண்ணத் தோன்றுகிறது. எல்லாப் பத்திரிகைகளும் அம்பாளுடைய படத்தைப் பக்தியோடு பிரசுரித்து வருகின்றன. ஸ்ரீ மீனாட்சி சுப்ரபாதம் தொடங்கிப் பல ஸ்தோத்திரங்கள் பிரசுரமாகிப் பிரபலமடைந்து வருகின்றன.

இந்த முறையிலே மீனாட்சி கலியாணம் நாட்டிய நாடகமும் அம்பாளுடைய புகழைப் பரிமளிக்கச் செய்து வருகிறது.

அமரபாரதி கலா நிலையத்தார் அளிக்கும் ''மீனாட்சி கலியாணம்'' என்ற நாட்டிய நாடகம் பல் வகைகளில் சிறப்பாக அமைந்திருக்கிறது. கதை அம்பிகையை நாயகியாகக் கொண்டிருக்கிறபடியால் பக்தியுடனேயே பார்க்கத் தொடங்குகிறோம்.

இந்த நாட்டிய நாடகத்தைத் தயாரித்து அரங்கேற்றியிருக்கும் குமாரி பத்மா, வழுவூர் ஸ்ரீ ராமையாபிள்ளையின் சிஷ்யையாவார். குமாரி பத்மா சிறந்த குருவினுடைய சிஷ்யை என்பதோடு மட்டுமல்லாமல் தமிழ் நாட்டின் கலைக் குடும்பங்கள் ஒன்றில் பிறந்து கலைகளில் ஊறி, இணைந்து வளர்ந்தவர். டைரக்டர் கே. சுப்பிரமணியம் அவர்கள் கலையுலகுக்குப் புதியவர் அல்லர். அவருடைய புதல்வியான குமாரி பத்மா நாட்டியம் கற்றுக் கொண்டு, பிறருக்கும் கற்றுக் கொடுத்துப் பணி புரிந்து வருவதில் அதிசயம் இல்லை.

மதுரை மாநகரில் மலயத்துவஜ பாண்டியனும் அவன் தேவியும் குழந்தை இல்லாத காரணத்தால் மனம் வாடியிருக்கிறார்கள். புத்திரகாமேஷ்டி யாகம் செய்து யாக குண்டத்திலிருந்து ஒரு தெய்விகக் குழந்தையைப் பெறுகிறார்கள். இந்தத் தெய்விகக் குழந்தை பெரியவளாகும்போது ராஜ்ய பாரத்தை அவளிடம் ஒப்படைத்து மறைகிறான் பாண்டிய மன்னன்.

திக்விஜயம் செய்யப் புறப்படுகிறாள் உலக மாதாவான அங்கயற்கண்ணி. அண்ட சராசரங்களை ஆளும் அகிலாண்டேசுவரிக்கு முன்னால் மண்ணுலகும் விண்ணுலகும் அடிபணிகின்றன. கடைசியில் சர்வேசுவரன் இருக்கும் கைலாயத்தை அடைகிறாள். வெல்வதற்காக வந்த மீனாட்சி தேவி பரமேசுவரனைக் கண்டதும் தன் ஆணவம் அடங்கிப் பெண்மையே வடிவாக நாணிப் போய் நிற்கிறாள். சிவபெருமான் சுந்தரேசுவரராகக் கூடல் நகர் புகுந்து உலகறிய மீனாட்சியின் கைத்தலம் பற்றுகிறார். சக்தியும் சிவமும் ஒன்று சேர்கின்றனர். இதுவே கதை.

இந்த நாட்டிய நாடகத்துக்கான கவிதைப் பாடல்களை இயற்றியவர்கள் சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மழவாபுரி சுப்பிரமணிய பாரதியும், சர்க்கரை பாரதியும் ஆவார்கள். குமாரி பத்மா மிகுந்த பிரயாசைப்பட்டு இந்த நாட்டிய நாடகத்தைத் தயாரித்திருக்கிறார்.

முக்கியமாகப் பால மீனாட்சியாகத் தோன்றிய குமாரி தாட்சாயணி சபையோருடைய கண்ணையும் கருத்தையும் எளிதாகக் கவர்ந்து விட்டாள். அவள் தன்னுடைய சின்னக் கழுத்தை ஆட்டி ஆட்டி அட்டமி போட்டதும், பிஞ்சுக் கால்களைத் தட்டித் தட்டி அழகு நடை போட்டதும், முத்துப் பற்களைக் காட்டி மோகனச் சிரிப்பு சிரித்ததும் நாட்டியம் பார்த்த அனைவருடைய உள்ளத்திலும் பதிந்து போயிருக்கும்.

இந்த நாட்டிய நாடகத்தைப் பற்றி முக்கியமாக மூன்று விஷயங்களைக் குறிப்பிட வேண்டும். இந்த மாதிரி பக்தி ரஸமான கதைகளில் பக்தியே பிரதானமாக இருக்க வேண்டும். கூட நாட்டியம் செய்வோர் ஒவ்வொருவரும் விநயத்தோடு ஈசுவரியிடமே இருப்பதாக நினைக்கப் பழகிக் கொள்ள வேண்டும்.

மற்றொன்று. ஜகன்மாதாவான அங்கயற் கண்ணியை ஒரு சாதாரண அகம்பாவம் பிடித்த ராஜகுமாரியாக எண்ணி விடக் கூடாது.

குமாரி பத்மா தன்னுடைய திறமை முழுவதையும் இதில் பூரணமாகக் காட்டிவிட வேண்டும் என்பதற்காக நாட்டியம் தயார் செய்திருப்பதாகத் தோன்றுகிறது. அப்படியில்லாமல் அம்மையப்பனுடைய திருவிளையாடலைக் கண்டோம் என்னும் உணர்ச்சி உண்டாகும்படி இருக்க வேண்டும். உதாரணமாகத் தேரை ஓட்டியபோது வெளிப்படுத்திய பௌருஷமும் ஆணவமும் மிகைப் படுத்திய அபிநயமாகத் தோன்றியது. அதே மாதிரி ஸர்வேசுவரனைக் கண்டதும் காட்டிய உணர்ச்சி வேகமும், உதடுகள் அளவுக்கு மீறித் துடிப்பதும், தலையை வேகமாக ஆட்டுவதும் மிகையாகத் தென்பட்டன. இந்த மாதிரி மிகைப்படுத்திய நடிப்பு வசன நாடகத்தில் பொருந்தலாமோ என்னவோ, நாட்டியத்துக்குப் பொருந்தவில்லை.

மூன்றாவது விஷயம்: புதை பொருள் இலாகா ஆராய்ச்சியாளராகப் பல வருஷங்கள் பணி புரிந்த ஸ்ரீ டி. என். ராமச்சந்திரன் அவர்களுடைய உதவியோடு குமாரி பத்மா கரணங்கள் பலவற்றைக் கற்றுக் கொண்டிருக்கிறார். அவருடைய உடல்





நினைத்தபடியெல்லாம் வளைகிறது. நல்ல மனோதிடம் அவரிடம் காணப்படுகிறது. நாட்டியம் செய்வோர் களைப்படையாமல் இருக்க வேண்டும் என்கிறது சாஸ்திரம். இந்த லட்சணம் பத்மாவுக்குப் பொருந்தியிருக்கிறது.

ஆனால் சிலை வடிவத்தில் நாட்டிய நிலைகளைக் காண்பதற்கும், நேரில் ஒருவர் செய்யும் போது காண்பதற்கும் நிறைய வித்தியாசம் இருக்கிறது. சிலையில் வேகத்தையும், அசைவையும் காட்டுவதற்காக அமைக்கப்பட்டிருக்கும் வளைவுகளும், அங்க நிலைகளும் நாட்டியத்தில் பொருந்தாது. எதிரே ஒருவர் நாட்டியம் செய்யும் போதுதான் ஒன்றன்பின் ஒன்றாக அசைவுகள் வந்து கொண்டே இருக்கின்றனவே. அந்த அசைவை மிகைப்படுத்துவது அஷ்ட கோணல் ஆகி விடுகிறது. இதை நாட்டியம் பயிலும் ஒவ்வொரு மாணவ மாணவியும் கவனித்து ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும்.

அன்று பின்பாட்டுப் பாடிய நீலா, சியாமளா, கோமதி ஆகியோர் காதுக்கு இனிமையாகப் பாடினார்கள். குமாரி நீலாவின் நட்டுவாங்கம் மெச்சும்படி இருந்தது.

டைரக்டர் கே. சுப்பிரமணியம் அவர்களால் ஆரம்பிக்கப்பட்டு நடந்து வரும் நிருத்யோதயா கலைக் கூடத்துக்கு நம் வாழ்த்துக்கள்.

# ஜெயப்பூர்
# கல்கி காமந்திர்

கவிச்சக்கரவர்த்தி கம்பன் காவிரிக் கரையில் இருந்து கொண்டே கோசல நாட்டின் தலைநகரான அயோத்தியையும், ஜனக மகாராஜனது தலைநகரான மிதிலையையும் இன்னும் கடல்சூழ் நிலத் தீவான இலங்கை நகரையும் கற்பனையில் கண்டு வர்ணித்திருக்கிறான். அவனது கற்பனையில் அயோத்தி லட்சிய ராஜ்யமாக உருவெடுத்திருக்கிறது. அதைப் போல மிதிலை லட்சிய தபோவனமாக உருப்பெற்றிருக்கிறது. ஆனால் இலங்கைதான் அவனுடைய லட்சிய சுவர்க்கமாக இருந்திருக்கிறது. அங்கு களிக்கின்றவர்களைத் தவிர கவலையுள்ளோர் ஒருவரையும் கம்பனால் காண முடியவில்லை. அவனது வர்ணனையில் இலங்கையிலுள்ள மாட மாளிகைகள் ஒளி வீசுகின்றன.

> பொன் கொண்டு இழைத்த,
> மணியைக் கொடு பொதிந்த,
> மின் கொண்டு அமைத்த,
> வெயிலைக் கொடு சமைத்த,
> என் கொண்டு இயற்றிய
> எனத் தெரிவிலாத
> வன் கொண்டல் விட்டு
> மதி முட்டுவன மாடம்

என்றே அவரால் பாட முடிந்திருக்கிறது. ராஜஸ்தானின் தலைநகரான ஜெயப்பூர் என்னும் வண்ண நகரம் சென்று அங்குள்ள மாட மாளிகைகள் அரண்மனைகளைப் பார்த்த போது இந்த இலங்கை வர்ணனைதான் என் ஞாபகத்துக்கு வந்தது. உண்மையிலேயே பெரிய பெரிய ராஜாக்கள் தங்கியிருந்த இடம் ராஜஸ்தான். அன்று இருபத்திரண்டு ராஜாக்கள் தனித்தனி ராஜ்யங்கள் அமைத்து ஆண்டுவந்தனர். அந்த சமஸ்தானங்கள் அத்தனையையும் ஒன்றாகச் சேர்த்து ராஜஸ்தான் என்று ஒரு பெரிய மாநிலத்தையே உருவாக்கிய பெருமை சர்தார் பட்டேலையே சாரும். அந்த மாநிலத்தின் தலைநகர்தான் ஜெயப்பூர். தலைநகராயிருக்கத் தகுதியுடைய பெரிய நகரம் அது. அங்குள்ள அகலம் அகலமான வீதிகளையும் வானுற ஓங்கி வளர்ந்திருக்கும் சிவப்பு வர்ணக் கட்டிடங்களையும் பார்த்தால் அது இந்தியாவின் எழில் வண்ணங்களைத் திரட்டி இழைத்த ஒரு சிறந்த வண்ண நகராகவே தோன்றும்.

ஜெயப்பூர் செல்ல அகமதாபாத்–டில்லி ரயிலில் செல்ல வேண்டும். அப்படிச் சென்றால் ஜெயப்பூர் ஸ்டேஷனிலேயே இறங்கலாம். இல்லை, சென்னையிலிருந்து செல்பவர்கள் என்றால் ஆக்ரா போய் அங்கிருந்து ரயில் மாறியும் செல்லலாம். காரிலேயே வடநாட்டு யாத்திரை செய்பவர்கள் என்றால் பம்பாய், அகமதாபாத், ஆஜ்மீர் வழியாகவும் ஜெயப்பூர் போய்ச் சேரலாம். மிகவும் வசதியான பயணம் விண்வெளிப் பயணம் தான். டில்லியிலிருந்து 191 மைல் தூரத்திலிருக்கும் ஜெயப்பூருக்கு டில்லியிலிருந்து விமானம் மூலம் சென்று திரும்புவதே வசதியானது.

பிரதான வீதிகள் 110 அடி அகலம் உள்ளன. இந்த நகரத்தை மூன்று பக்கங்களிலும் மலைத் தொடர்கள் சூழ்ந்திருக்கின்றன. இந்தப் பாதுகாப்பு காணாதென்று நகரத்தைச் சுற்றி ஒரு பெரிய மதிலும் கட்டப்பட்டிருக்கிறது. மதில் சுவர் சுமார் 20 அடி உயரமும், 9 அடி கனமும் உடையது என்றால் அதைக் கட்ட எவ்வளவு செலவாகியிருக்கும் என்று கணக்கிட்டுக் கொள்ளலாம். இந்த மதில் சுவர்களில் எட்டு வாயில்கள் அமைத்திருக்கிறார்கள். இவைகளில் முக்கியமானவை மூன்று வாயில்களே. கிழக்கு வாயிலை சூரஜ் போல், மேற்கு வாயிலைச் சாந்து போல், வடக்கு வாயிலைத் துருவ போல் என்றும் கூறுகிறார்கள். போல் என்றால் வாயில் என்று அர்த்தமாம். இந்த வாயில்களை நல்ல தமிழிலே சொல்ல விரும்பினால் சூரியன் வாயில், சந்திரன் வாயில், துருவ வாயில் என்றே கூறலாம். இந்நகரை அமைத்தவர் ராஜா ஜெய்சிங். அவர் கட்சுவா ராஜபுத்திர வம்சத்தைச் சேர்ந்தவர். அந்த மன்னர்கள் இருந்து ஆண்ட இடம்தான் அம்பர் கோட்டை. அங்குள்ள கோட்டை கொத்தளங்கள் போதிய பாதுகாப்பு உடையவை அல்ல என்று கண்டு ஜெய்சிங் இந்த நகரை நிர்மாணித்தார் என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. அவர் வான சாஸ்திர வல்லுநர். அதனாலேயே சூரிய, சந்திர, துருவ நட்சத்திரம் முதலிய பெயர்களையே தாம் அமைத்த பிரதான வாயிலுக்கு இட்டிருக்கிறார். வான சாஸ்திர மேதைகளும் சிற்ப சாஸ்திர மேதைகளும் கூடியிருந்து பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியிலே இந்நகர் அமைக்கப்பட்டிருக்கிறது. உலகில் உள்ள பெரிய நகர அமைப்புக்களைப் பற்றிய படங்களை வருவித்து ஆராய்ந்தாலும், இந்திய சிற்ப சாஸ்திரத்துக்கும் பண்பாட்டுக்கும் மாறுபடாத வகையிலேயே இந்நகர் அமைக்கப்பட்டிருக்கிறது: வீதிகள் எல்லாம் கீழ் மேலாகவும் தென் வடலாகவுமே ஓடும். இங்குள்ள மாடங்கள் பக்கத்தில் உள்ள மலையிலிருந்து கிடைக்கும் ஒரு வகை ரோஜா வர்ணச் செம்மண்ணால் பூசப்பட்டிருப்பதால் முழுதும் ரோஜா நிறத்திலேயே காட்சி அளிக்கும்.

முதன் முதல் நாம் சென்று காண வேண்டியது அங்குள்ள அரண்மனையைத்தான்: அது நகரின் வடப்புறத்தில் சதுரம் சதுரமாக அமைந்த வீதிகளுக்கு நடுவே ஒரு கோட்டைக்குள்ளே இருக்கிறது. அரண்மனை வெளி முற்றத்துக்குச் செல்வதற்கு அதிகாரிகளிடம் அனுமதி பெறவேண்டும். அரண்மனையில் காண வேண்டியவை முபாரக் மஹால், எல்லோருக்கும் மகாராஜா தரிசனம் தரும் திவானிஆம், அதி முக்கியஸ்தர்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

களுக்குள் கலந்து பேசும் திவானி காஜ், தர் பார் மண்டபம், சித்திரகூடம் முதலியவை களே. அரண்மனை ஓர் அழகான கட்டிடம். அங்குள்ள சித்திரக் கூடத்தில் ராஜபுத்திர மன்னர்கள், வீரர்கள் படங்கள் பெரிய பெரிய அளவில் எழுதி மாட்டப் பட்டிருக்கின்றன. ராதாகிருஷ்ண நடனமும், ராக மால சித் திரங்களும் மிக மிக அழகானவை. அங்குள்ள புத்தகசாலையில் பாரசீக மொழியில் எழுதப் பட்ட மகாபாரதம் ராஜ்நாமா என்ற பெய ருடன் இருக்கிறது. ஜெய்சிங் மன்னர் எழுதிய வான சாஸ்திரங்களும் உண்டு. இன் னும் ரேக கணிதம் என்னும் ஜியாமட்டிரீ யும் அராபிய மொழியில் இருக்கிறது. அரண்மனையில் காண வேண்டிய மற்றொரு இடம் சந்திர மஹால். அது ஒரு ஏழு மாடிக் கட்டிடம். அதன் மேல் மாடியில் ஏறி நின்றால் நகர் முழுவதையுமே ஒரு நோட்டம் விடலாம்.

அரண்மனையை விட்டு வெளியே வந்ததும் நாம் காண வேண்டியது ஜந்தர் மந்தர் என்னும் வான ஆராய்ச்சி நிலையம். அதனை யந்த்ரம் என அழைக்கின்றனர் மக்கள். வான ஆராய்ச்சியில் மிகவும் ஈடுபட்டிருந்த மன்னர் ஜெய்சிங் இதனைக் கட்டியிருக்கிறார்.

அரண்மனைச் சுற்றுப்புறத்திலேயே இன்னும் இரண்டு கட்டிடங்கள், ஒன்று சீஷ் மஹால், மற்றொன்று ஹவாய் மஹால். சீஷ் மஹால் முழுவதும் சிறு சிறு கண்ணாடிகள் பதிக்கப் பட்டிருக்கின்றன. அங்குள்ள பிரதான அறையில் நின்று கொண்டு கதவுகளை அடைத்துவிட்டு ஒரே ஒரு நெருப்புக் குச்சி மட்டும் கிழித்துப் பார்த்தால் அறை முழு வதும் ஜகஜ்ஜோதியாய், ஒரே நட்சத்திர மண்டலம் போல் காணும். பெரிய வீதியை ஒட்டியிருக்கும் ஹவாய் மஹால் ஒரு பெரிய கட்டிடம். ஒற்றைச் சுவரை அழகாக அடுக் கடுக்காய்க் கட்டி அதில் உள்ள சிறு சிறு துவா ரங்கள் மூலம் காற்று அரண்மனைப் பகுதிக்கு



ஜகத்சிரோமணி கோயில்

வந்து அந்தப் பகுதியையே குளுகுளு என்று வைத்திருக் கும் என்கிறார்கள். மனிதன் அறிவினால் சாதித்த ஓர் அற்புத சாதனை.

ஜெயப்பூர் நகரத்தை ஒட்டிய பிரதேசங்களில் நாம் காண வேண்டியவை இன்னும் இரண்டு இடங்கள் உண்டு. ஒன்று கெய்த்தோ என்னும் அரசர்களின் சமாதிகள் இருக்கும் இடம். மற்றொன்று காலவ மகரிஷி இருந்து பூஜித்த கால்டா என்பது. கெய்த்தோ ஊருக்கு வெளிப்புறத்தில் இருக்கிறது. அங்கு பலப் பல சமாதிகள் இருக்கின்றன. அவைகளைச் 'சத்ரி' என்று அழைக்கின்றனர்.

ஆறு சந்த்பால் என்ற பகுதியிலே ஒரு அனுமார் கோயில் இருக்கிறது. இதற்குப் பக்கத்திலேயே பாலனந்தாஜீ கிராமந்திர் என்று ஒரு கோயில். இது ஒரு விஷ்ணு கோயில். இன்னும் விநாயகருக்கு ஒரு கோயில். பெரிய கோயில் சுந்தார் கேட் பக்கம் இருக்கிறது. இதைக் கணேஷ்கர் என் கிறார்கள். இதைவிட அதிசயம், தசாவதா ரங்களில் இன்னும் பகவான் எடுக்காத அவ தாரமாகிய கல்கிக்கும் ஒரு கோயில் கட்டி யிருக்கிறார்கள். இதைக் கல்கி கா மந்திர் என் கிறார்கள். இந்தக் கோயில் கட்டியிருக்கும் இடத்தில் ராஜா ஜெய்சிங் அசுவமேத யாகம் நடத்தியிருக்கிறார். அதன் ஞாபகார்த் தமாக வெள்ளைச் சலவைக் கல்லில் குதிரை ஒன்று செய்து வைத்திருக்கின்றனர். ஆம்! கல்கியாகப் பகவான் அவதரிக்கும்போது குதிரை மேல் ஆரோகணித்துக் கொண்டு தானே வருவார்?

ஜெயப்பூரிலிருந்து ஏழாவது மைலில் அம்பர் கோட்டையும் அரண்மனையும் ஒரு மலை மீது இருப்பதைப் பார்ப்போம். மலை யடிவாரத்தில் யானைகள் நிற்கும். அதன் மேல் அம்பாரிகளும் இருக்கும். ஆளுக்கு எட்டு ரூபாய் என்று நாலுபேர்கள் சேர்ந்து ஏறிக் கொண்டு மலைமேல் ஏறலாம். இங்குதான் ஜெய்சிங்கின் முன்னோர்களான கச்சவாஸ் என்பவர்கள் ஆண்டிருக்கிறார்கள். அம்பர் என்பது சிவனுடைய மூர்த்தங்களில் ஒன்றான அம்பிகேசுவர் பெயராலேயே ஏற் பட்டது என்பர். இல்லை, அயோத்தி மன்ன னான அம்பரீஷன் அமைத்த காரணம்தான் அம்பர் எனப் பெயர் பெற்றது என்பர். ஆறு நூறு ஆண்டு காலம் ஜெய்சிங்கின் முன்னோர்கள் இங்கிருந்து ராஜ்ய பாரம் செய்திருக்கின்றனர். கச்சவாஸ் அரசர்கள்— ராமனுடைய மகனான குசனது வம்சத் தார் என்பது வரலாறு. குசனே கச்சன் என்று மருவியிருக்கிறது போலும். அம்பர்



ஹவாய் மஹால்



அரண்மனைப் பகுதி

## விடாதே, பிடி!



அரண்மனை ராஜபுத்திர மன்னர்கள் கட்டிடக் கலையில் அடைந்திருந்த தேர்ச்சிக்கு ஒரு பெரிய எடுத்துக்காட்டு. பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ராஜா மான்சிங் கட்ட ஆரம்பித்த இந்தக் கோட்டையும் அரண்மனையும் ஜெய்சிங்கின் காலத்தில் தான் கட்டி முடிந்திருக்கின்றன. ஆம். ஒரு நூற்றாண்டுகாலமாக நினைந்துநினைந்து கட்டிய கோட்டையும் மாளிகையும் அது. வளைந்து வளைந்து செல்லும் பாதையில் விதானம் அமைத்த வாயில்கள் இருக்கின்றன. இவைகளில் பிரதான வாயில் சிங் போல் என்பதாகும். அதைக் கடந்தால் 'திவானி ஆம்' இருக்கிறது. பிறகு அதையும் கடந்து சென்றால் ஒரு காளி கோயில் வரும்.

இங்குள்ள காளி கோயில் வெள்ளைச் சலவைக் கல்லால் கட்டப்பட்டிருக்கிறது. கோயில் வாயில் கதவுகள் வெள்ளித் தகடுகள் பொதித்து மிக்க வேலைப்பாட்டுடன் விளங்குகின்றன. வாயிலின் இரு புறங்களிலும் இரண்டு பெரிய வாழை மரங்கள். தூரத்திலிருந்து பார்த்தால் இரண்டு பசிய மரங்களை வெட்டி எடுத்து வந்து நாட்டியிருக்கிறார்கள் என்று எண்ணுவோம். பக்கத்தில் சென்றால் அவ்வளவு பசுமையாகக் காணும்படி சலவைக் கல்லிலே செதுக்கி, வண்ணம் தீட்டி வைத்திருக்கிறார்கள் என்று தெரியும். இந்தக் கோயிலில் எழுந்தருளி யிருக்கும் அன்னை காளியை வணங்கிய பின் உள்ளே சென்றால் பெரிய பெரிய ஹால்களைப் பார்ப்போம். அங்குள்ள சுவர்களிலும் தூண்களிலும் விதானங்களிலும் பல வர்ணக் கண்ணாடிகள் பதித்து ஒரு புதிய சொப்பன புரியையே உருவாக்கியது போலிருக்கும். மலையை விட்டு இறங்கி அடிவாரத்துக்கு வந்தால் இங்கும் சில கோயில்கள் உண்டே என்பர். அதில் பிரபல கோயில்தான் ஜகத் சிரோமணி கோயில். இங்கு வேணு கோபாலன் கோயில் கொண்டிருக்கிறான். படிகள் ஏறியே அவன் சந்நிதிக்குச் செல்ல வேண்டும். வழியில் இரண்டு பெரிய கல் யானைகள் நம்மை வரவேற்று நிற்கும். பக்த மீரா கட்டிய கோயில் அது என்று அங்குள்ளவர்கள் கூறுவார்கள். ஆனால் சரித்திர ஏடுகளைப் புரட்டினால் ராஜா பிஹாரிமான் கட்டினான் என்பது தெரிய வரும். ராஜா மான்சிங் தன் மைந்தன் ஜகத் சிங்கின் ஞாபகார்த்தமாகக் கட்டிய கோயில் ஆனதால் ஜகத் சிரோமணி கோயில் என்று கூறப்படுகிறது என்றும் விளக்கமுறும்.

இனி ஜெயப்பூரை விட்டுக் கிளம்பலாம். இங்கிருந்து டில்லி செல்லும் வழியில் ஐம்பது மைல் சென்றால் பிராட் என்ற ஊர் வரும். அது என்ன பிராட் என்று விசாரித்தால் அதுதான் பாரதத்தில் கூறப்படும் விராட நகரம். இங்குதான் பாண்டவர்கள் அஞ்ஞாதவாசம் செய்தார்கள் என்று அறிவோம். இங்கு வீடுகள் அதிகம் இல்லை. விராட நகரத்தின் சின்னம் ஒன்றுமே இல்லை. இங்கு தின்பதற்குக் கிடைப்பது சீமை இலந்தைப் பழம் போன்ற பெரிய இலந்தைப் பழங்களே; அவைகளைக் காயாகவே கடித்துத் தின்னலாம். சுவையாக இருக்கும். சரி, சரி, இந்த இலந்தைப் பழங்களைத் தின்றே பாண்டவர்கள் ஒரு வருஷத்தை இங்கு கழித்துவிட்டுப் போய்விட்டார்கள் போலிருக்கிறது. நம்மால் அப்படி அஞ்ஞாத வாசம் பண்ண இயலாது இங்கு. விரைவாகக் காரைச் செலுத்தி இருட்டுவதற்குள்ளாகவே டில்லிக்குப் போய்ச் சேருவோம்.




சுநீதிக்கு வயது இருபதுதான். ஆயினும் கைம்மையை எய்தி விட்டாள். அவள் கணவனுக்கு இரு தம்பிகள். அவர்களைக் கவனித்துக் கொள்வதில் தன் பொழுதைச் செலவிட்டு வந்தாள். ஊர் விவகாரம் தெரியாது; உலக விவகாரம் தெரியாது என்று சொல்லும்படியாகமௌனப் பணி புரிந்து வந்தாள். பெரிய தம்பியின் பெயர் வினயன். அவன் பட்டதாரி. சணல் ஆலை ஒன்றில் உத்தியோகம் பார்த்துவந்தான். வயதில் சுநீதியை ஒத்தவன்.

சுநீதி அவனுக்கென்று குடும்பப் பாங்கு நிறைந்த கிருஹலட்சுமியைத் தேடிக் கொண்டிருந்தாள். வரும் ஆனிக்குள் வினயனுக்கு ஒரு கால் கட்டுப் போட்டுவிட வேண்டும் என்று அவள் உறுதி பூண்டிருந்தாள்.

சின்னவன் பெயர் பஞ்சு. வயது பத்துக்குள் இருக்கும். பள்ளியில் படித்துக் கொண்டிருந்தான்.

ஒரு நாள் காலை படுக்கையிலிருந்து எழுந்து பஞ்சு பல் விளக்கக் கொட்டில் புறம் சென்றான். பாசி வழுக்கி விடவே, தடாரென்று கீழே விழுந்து விட்டான்.

விழுந்த சத்தம் கேட்டுச் சுநீதி பதறியடித்துக் கொண்டு ஓடினாள். அது வரை அழாமல் இங்கும் அங்கும் பார்த்துக்கொண்டு எழுந்திருக்க முயன்ற பஞ்சு 'ஓ'வென்று அழலானான். குழந்தைகளின் சுபாவமே இதுதானே? யாரும் பார்க்காமல் இருந்தால், எத்தனை தான் காயமாயிருந்தாலும், அதைத் துடைத்துக்கொண்டு எழுந்து போய் விடுவார்கள். 'ஐயோ, பாவம்' என்று ஆறுதல் அளிக்க ஆள் அகப்பட்டு விட்டால் ஊரையே கூட்டிவிடுவார்கள். சுநீதியைக் கண்டதும் பஞ்சு அந்தக் காரியத்தைத்தான் செய்தான். பஞ்சுவைத் தூக்கினாள் சுநீதி. காயம் கொஞ்சம் ஆழமாகவே பட்டிருந்தது. சுநீதி பஞ்சுவை இடுப்பில் தூக்கிக் கொண்டு உள்ளே வந்தாள். தட்டிக் கொடுத்தாள்; காயத்தைக் கழுவி மருந்து வைத்துக் கட்டினாள். அழாமல் இருக்க எத்தனை எத்தனையோ ஆறுதல் வார்த்தைகள் சொன்னாள். அவள் ஆறுதல் சொல்லச் சொல்ல அவன் அழுகை அதிகமாயிற்று. சிறிதுகூடக் கடிந்து கொள்ளாமல், கோபித்துக் கொள்ளாமல் அவனைச் சமாதானப்படுத்துவதிலேயே கருத்தாயிருந்தாள். அவன் கேட்பதையெல்லாம் வாங்கித் தருவதாகக் கூறி அவள் ஆசை காட்டவே பஞ்சு ஒருவாறு சமாதானமடைந்தான். அப்பொழுது பக்கத்து வீட்டுப் பெரிய மருமகள் அங்கேயிருந்தாள். சுநீதி பஞ்சுவிடம் காட்டிய பட்சத்தைக் கண்டு பெருமிதம் அடைந்தாள். "குழந்தாய்! நீ நீடூழி வாழ வேண்டும். நீ பஞ்சுவுக்கு மதனியில்லை; தாய்தான்!" என வாயாரப் புகழ்ந்து வாழ்த்தினாள்.

நொடிப் பொழுதில் இந்தச் செய்தி ஊரெங்கும் பரவியது. தெருவெல்லாம் சுநீதியைப் புகழ்ந்தன வாயார, மனமார.

"எவ்வளவு நல்ல பெண்! தன் கணவனின் தம்பிகளிடம் உயிரையே அல்லவா வைத்திருக்கிறாள்! அவர்களுக்காக உயிரைக் கொடுக்கவும் தயாராயிருக்கிறாளே!" என்று பேசாதவர் இல்லை.

சில நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் நடுப்பகலில் வினயன் வீட்டுக்குத் திரும்பினான். காரணம், ஜுரம். ஜுரம் அப்படி ஒன்றும் அதிகமில்லை. ஆயினும் தலைவலி அவன் உயிரை அடியோடு வாங்கிக் கொண்டிருந்தது.

சுநீதி அவனைக் கட்டிலில் படுக்க வைத்தாள். படுக்கை கொள்ளாமல் வினயன் புரண்டு புரண்டு படுத்தான். அரற்றினான்; பிதற்றினான்.

அவன் படும் சிரமத்தைக் கண்டு சுநீதிக்கு மனம் தாளவில்லை. அந்தக் கட்டிலில் அவன் தலைமாட்டில் போய் உட்கார்ந்து கொண்டாள். அன்போடு வினயனின் தலையைத் தன் மடியில் எடுத்து வைத்துக் கொண்டு தலையைப் பிடித்துவிடத் தொடங்கினாள். அப்படியே குனிந்து, "ரொம்பத் தலையை வலிக்கிறதா?" என்று வெகு ஆதுரத்தோடு விசாரித்தாள்.

அதே நேரம் பார்த்துப் பக்கத்து வீட்டுப் பெரிய மருமகள், "எங்கேடி, அம்மா இருக்கே?" என்று கேட்டுக் கொண்டே முற்றத்துக்கு வந்தாள். அப்படியே தலையை நீட்டி உள்ளேயும் எட்டிப் பார்த்தாள். அவள் கண்ட காட்சி அவளைத் திடுக்கிட வைத்தது. வந்த சுவடு தெரியாமல் பூனைபோல் திரும்பி விட்டாள் அவள்.

உடனே காட்டுத் தீயென ஊரெங்கும் ஒரு செய்தி பரவியது.

"சீ! நடத்தை கெட்டவள்! அதுவும் பட்டப் பகலிலா? என்ன வெட்கக் கேடு!"

இப்படிச் சொல்லாத ஒரு வாய் கூட அந்தத் தெருவிலில்லை. — **வங்காளிக் கதை**

நெடுங் கதை



# கடைசி வெற்றி

ஆர். சூடாமணி

மரக் கட்டிலின்மீது மிருதுவான மெத்தைப் பரப்பிலே கண் மூடிக் கிடந்தாள் ஆண்டாளு. கன்னமிரண்டிலும் எலும்புக் குழிகள். பழைய கால உடலில் பற்கள் கெட்டியாகவே இருந்தன. எத்தனையோ உழைத்து உருகின தேகம்தான். ஆனால் அதில் நலிவும் சிதைவும் கிடையா. இப்போது இருப்பது மரணப் படுக்கை. பரவாயில்லை. மரணம் என்பது வாழ்வைப் போலவே இன்னொரு முழுமை. அது நலிவு ஆகாது.

''அம்மா!'' தாயை நினைக்கும் குமுறல்.

கையகலம் கரை போட்ட கொரநாட்டுச் சேலை கட்டிப் பழக்கப்பட்ட அந்த உடலின் மேல் இப்போது இடுப்புக்கும் தோளுக்குமாக ஒற்றை விரிப்புத் துணி ஒன்று. ஏதோ வில்க்துணி. நன்றாய் இருக்கும் நாளில் ஆண்டாளு அது தன் மீது படுவதற்கு அனுமதிப்பாளா?

ஆண்டாளு அம்மாள் இன்னும் கண்களைத் திறக்கவில்லை. சரஸ்வதியும் ஜகந்நாதனும் அவளைப் பார்த்தவாறே அசைவற்று உட்கார்ந்திருந்தனர்.

கடைசி நாட்கள்தாம். அதைப் பற்றிச் சிறிதும் ஐயமில்லை. வைத்தியரின் சிகிச்சையை மீறி அவர்களுடைய உள்ளமும் கிழவியின் முகநிலையும் அப்படித்தான் உணர்த்தின. இருவரும் ஆசை ஒழுகும் விழிகளுடன் அம்மாவைப் பார்த்தார்கள். ஆசைக்கு வயது ஏது? ஆண்டாளு — அவர்களுடைய அன்னை — அவளுக்கு எழுபது ஆண்டுகள் நிறைந்து விட்டன. ஜகந்நாதனே ஐம்பதைக் கடந்து விட்டார். சரஸ்வதி அவரை விட ஐந்து வயது இளையவள். இந்தப் பிராயத்திலும் அம்மாவைப் பார்க்கும்போது—அவள் போகப் போவதை நினைக்கும்போது — பாசமும் சோகமும் நெஞ்சில் மாறிமாறி அலைமோதின.

''அம்மா, இந்த வில்க் ரகத்திலே எத்தனை பாஷன் வந்திருக்கு! அதிலே ஒண்ணை நீ...''

''போதுமே! எனக்கு எதுக்கடி அந்தக் கண்ணராவியெல்லாம்?''

பல்லிலே அந்த ஒளி. அதற்கேற்றபடி தலைக் கேசத்தில் ஓர் அதிசய வெண்மை. பளபளக்கும் பட்டு அது. அவிழ்ந்து விட்டால் அலை அலையாய்த் தொடை மட்டத்துக்குக் கீழே பாய்ந்து விழும். இருவரும் கடிகாரத்தைப் பார்த்தார்கள். பிறகு ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

நேரம் திருடனைப் போல் அடிமேல் அடி இட்டு நழுவிக் கொண்டிருந்தது. கிழவியின் முகத்தில் சலனமே இல்லை. ஏதோ சாதாரணக் குளிர் காய்ச்சல்தானாம். வயோதிக நோய் எதுவும் அவளுக்கு இல்லை. அது அஸ்தமிக்கும் சூரியன் அல்ல. முழுமையோடு மறையும் கிரகணம் போன்றதோர் அநுபவம். திரும்பவும் வேறொரு காலப் பிரமாணத்தில் அதற்கு உதயம் உண்டு என்பதாகத்தான் எண்ண முடிந்தது.

''சீதா வருவாளா?'' என்றாள் சரஸ்வதி.

''வந்தாலும் அவளை அம்மா...''

''அம்மாவுக்கு என்ன இருந்தாலும் அது மனசில் பெரிய குறைதான் அண்ணா. எனக்கென்னமோ தோணறது. சீதா வந்து விட்டால் அம்மாவுக்குச் சீக்கிரம் குணமாயிடும்னு.''

''குணமாகா விட்டாலும் கண்ணாலே பார்த்து மன்னிச்சுட்டாள் போதும் சரசு.''

''அம்மா மன்னிப்பாளா?''

''சீதா வருவாளா?''

''அவளுக்கு அம்மான்னா உயிராச்சே.''

''பின்னே ஏன் அப்படிப் போனாள்?''

அருகிலிருந்த பங்கஜம் — ஜகந்நாதனின் புதல்வி — முகத்தில் ஒருவித உணர்ச்சிப் பொருமலுடன் நோக்கினாள். மதிப்புக் கலந்த ஒரு மயக்கம். பதினெட்டு வயதின் கவர்ச்சிப் பூச்சிட்ட கண்கள். சீதா அத்தை அவளுக்கு ஏதோ ஒரு பெரிய லட்சியவாதியாய், வானத் தொலைவில் மின்னிய ஒளி மயக்கமாய், இன்னதென்று புரியாத கவர்ச்சியில் தோன்றினாள்.

''இப்போ டாக்டர் வருவாரில்லையா, அப்பா?''

''ஆமாம். டெம்பரேச்சர் சார்ட்டை எடுத்து வைத்திருக்கிறாயாம்மா பங்கஜம்?''

''ஓ! கடைசியாய் நாலுமணிக்குப் பத்மஜா டெம்பரேச்சர் பார்த்து எழுதிவைச்சாள்.''

பத்மஜா சரஸ்வதியின் மூத்த மகள். இரண்டு குழந்தைகளுக்குத் தாய். பாட்டியின் உடல் நிலையை எண்ணிப் பேரக் குழந்தைகள் அனைவருமே தத்தம் இடங்களிலிருந்து வந்திருந்தனர். ஜகந்நாதன், சரஸ்வதி, அவர்களது குடும்பத்தினர்கள்.....

எல்லாரும் இருந்தார்கள், ஒருத்தி நீங்கலாக. அவள் வருவாளா?

''அண்ணா!''

''சரசு!''

''சீதா வரல்லேன்னா?''

''என்னம்மா செய்யலாம்? நீயும் நானும் அம்மாவோடு இருந்த மாதிரி, அவளைத் தெரிஞ்சிண்டு பழகின மாதிரி சீதா இருக்கல்லியே? அவள் வளர்ந்தபோது அம்மாவுக்கு வயசாயிடுத்து. செல்லத்தை மட்டும் சீதா ஒரு வேளை நம்மைவிட அதிகம் அனுபவிச்சாளோ என்னமோ! ஆனால் அடிநாளின் அந்த அன்பு, அப்பா அம்மாவுடன் நெருக்கம், அந்த வாழ்வின் செழிப்பு, சந்தோஷம், விரிவு, அதுக்கெல்லாம் நாம்தான் கொடுத்து வைச்சோம், சரசு!''

''உண்மைதான் அண்ணா! அவளுக்குச் செல்லம், ஆனால் நமக்குத்தான் செல்வம்.''

விழியின் ஆவலில் அன்பு நெகிழ்ந்து அமுதத் துளிகளாய்க் கண்ணீரைப் பெருக்கியது. பழைய நாட்களின் நினைவு. அண்ணனும் தங்கையுமாய்க் கைகோத்து நின்ற நிலையில் காலம் மன இடுக்குகள் வழியே நழுவிப் போய்விட்டது. முதிர்ச்சியை அளித்துத் தோன்றும் வாழ்வின் அனுபவங்களிலிருந்து ஆச்சரியமான விடுதலை ஏற்பட்டு விட்டது போலிருந்தது. நினைவுக்கு நசிவு உண்டா? ஒரு பார்வை, ஓர் ஏக்கம் — அவை மீண்டும்



வந்து விடுகின்றன. உறங்கிக் கொண்டிருந்த நினைவுத் திரள் இன்று தனிப்பட்டு, கடலினின்று எழும் முழுமதி போல், பிரக்ஞையின் மேல் விரிப்பிலே மிதந்து எழுந்தது.

"இப்போத்தான் போல் இருக்கு சரசு. அம்மா சாதம் போடுவாளே, நினைவிருக்கா?"

"ஓ! அடேயப்பா, இப்போ நினைச்சாக் கூட......"

அப்போது அவ்விருவருக்கும் பால்யப் பருவம். சீதா பிறந்திருக்க வில்லை. சரஸ்வதிக்கே எட்டு வயதுதான் இருக்கும் அப்போது. சீதா அவளைவிடப் பன்னிரண்டு வயது சிறியவளாயிற்றே.

"ம், சாப்பிடு, எடுத்துப் போடு, ம்!" என்று அதட்டுவாள் ஆண்டாளு.

"அம்மா, பசிக்கலே....."

"இப்போ மணி என்ன தெரியுமா?"

"பத்தேகால்."

"ஆமாம். பத்து மணிக்கே உங்களுக்குச் சாப்பாட்டு வேளை. பசிச்சே ஆகணும். அது எப்படிப் பசிக்காமல் போகும்?"

"கார்த்தாலே ஒரு மாம்பழம்..."

பேசி முடிக்குமுன் வாய் கோணிக் கை தலையை அமுக்கிக் கொள்ளும். குட்டு விழுந்த கூர்மை எளிதில் அடங்கக் கூடியதா? ஆண்டாளு தன் குழந்தைகளுக்குச் சாப்பாடு போடும் போது ஒரு கையால் உருட்டிப் போடுகையில் இன்னொரு கை உயர்ந்தே இருந்து, சாப்பிடாத குழந்தையின் தலையில் குட்டு வைக்கத் தயாராக நிற்குமே. கண்டிப்புள்ள, திட்டவட்டமான அன்பு அவளுடையது. எடுத்த காரியம் எதிலும் வெற்றி பெற்றே தீருவாள். இல்லையானால், சீதா பிறந்த இரண்டு வருஷங்களில் கணவரைப் பறி கொடுத்தபின் வாழ்வில் நசுங்கி விடாமல் மக்களை வளர்த்து வளமுறச் செய்து பேரன், பேத்திகளுடன் கப்பும் கிளையுமாய் விரிந்த விரிவுக்கு வழிகோலியிருக்க முடியுமா? அந்த உறுதி கண்ணீரைப் போல் வலுவுள்ளது. ஆகவே, ஆண்டவனைப் போல் அழிவற்றது.

மருந்தைக் கொடுத்து விட்டுக் கடிகாரத்தைப் பார்த்தார்கள். மணி ஏழரை. ஆறு மணிக்கே வண்டி வந்திருக்குமே? ஒருவேளை தாமதமாகிறதோ?

"குழந்தைகள்ளாம் இங்கேயே இருக்கட்டும். மூச்சு பிரியச்சே சுத்தி எல்லாரும் இருக்கணும்னு எனக்கு ஆசையாயிருக்கு."

"அம்மா!"

"வருத்தப்படாதேடா. இன்னும் எத்தனை நாளைக்கு? உங்களுக்கெல்லாம் தெரியாததா?"

உள்ளத்துக்குச் சாட்சியாய் விழிகள் பேசின. இருவரும் மௌனமானார்கள். அம்மாவின் மேல் போர்வையை நேராய் இழுத்து விட்டு இருபுறமும் தரையில் அமர்ந்தார்கள். ஆண்டாளு முகத்திலும் இலேசான மலர்ச்சி.

"ஜக்கு, சரசு, இப்படியே உட்கார்ந்திண்டிருங்கோ ரெண்டு பேரும். எனக்குப் பழைய நாளைக்கே போய்விட்டாற் போல இருக்கு. உங்க அப்பா இருந்தபோது...."

மௌனத்தின் தொடர்ச்சியில் அவன் அவருடைய எண்ணமாக மாறி விட்டான். அந்த நினைவுகளின் இயல்பு அவர்களுக்குக் கூடத் தெரிய முடியாதது. எந்தக் காலத்தில் வாழ்கிறாள் அவள் இந்த நிமிஷம்? கண்களின் ஆழத்தில் கோடிட்ட மென்மையில் அவளுடைய ரகசிய மூச்சாக அப்பாவின் இருப்பை அருகிலேயே உணர்ந்த நிலை.

அப்பா...... அம்மா....

அவர்களுக்கும் நினைவு மயக்கம். முகத்துச் சுருக்கங்கள் மறைந்தன. தலையில் நரை கறுத்தது.

"டேய் ஜக்கு! அப்பாவுக்கு ஒத்தாசையாய்க் கறிகாய் நறுக்கிக் கொடுடா." — அம்மாவின் கட்டளை நெஞ்சில் ஒலித்தது.

"போம்மா, எனக்குப் பள்ளிக்கூடம் இருக்கு." ஏழு வயதுப் பையன் ஜக்கு பொருமினான். "இன்னிக்குத் திங்கட்கிழமை இல்லையா? அவசரமாகப் போகணும். இல்லேன்னா அந்தக் 'கழுகு மூக்கு' கம்மா விடாது. இன்னிக்கு முதல் பாடமே அதனுடையது தான்...."

"இருக்கட்டுண்டா. அவசரத்தோட அவசரமாய்க் கறிகாய் நறுக்கிக் கொடு. அப்பா தான்சாப்பாடு பண்ணணுண்டா இன்னிக்கு."

அம்மாவுக்கு உடம்பு சரியில்லை. இன்னும் இரண்டு நாளைக்கு அப்பாதான் சமையல், அவன்தான் சுற்று வேலை. சேச்சே, என்ன துரதிருஷ்டம்! ஏழு வயதுதான் என்றாலும் அவனுக்கு ஆத்திரம் பொங்கி வந்தது.

"ஏம்மா, எனக்கு ஸ்கூல் நாளாய்ப் பார்த்துத்தான் உனக்கு உடம்புக்கு வரவேண்டுமா? நேத்தும் முந்தாநாளும் எனக்கு லீவு இருந்ததே, அப்போ வரக் கூடாது?"

"சரிதாண்டா, போய் அந்தக் கத்திரிக்காயை நறுக்கு. கை பத்திரம்."

முனகிக் கொண்டே அவன் வேலையில் முனைந்தான். அப்பாவைப் பார்த்தபோது தான் அவனுக்குத் தன் சொந்த துக்கம் சிறிது அடங்கியது. பாவம், அப்பா! கறுப்புக் கோட்டும், கட்டு 'பைல்'களுமாய்த் தினம் ராஜா மாதிரி வெளியே போவாரே, இன்று? நெற்றியின் ஸ்ரீ சூர்ணம் வியர்வையில் கரைய, வேட்டியை அரையில் இழுத்துக் கச்சம்கட்டித் திறந்த மார்போடு அவர் அடுப்புக்கு எதிரே நின்று சமையல் செய்யும்போது அவனுக்கு வருத்தமாயிருந்தது. தந்தம் போன்ற அவர் உடல், பார்த்துக் கொண்டிருக்கிற போதே அடுப்புக் கனலில் சிவந்து விட்டது. அந்தச் சிறுவயதில்கூட அவனுக்கு ஒரு தீவிர அனுதாபம் தோன்றியது. கத்திரிக்காய் நறுக்குவதை விட்டு விட்டுத் துணியை எடுத்து அவர் உடம்பை ஆதரவாய்த் துடைத்து விடலாம் போல் இருந்தது.

ஆயினும் அடுப்பின்மீது பாத்திரம் உருக்கும் ஆவியில்தான் எத்தகைய மணம்! அவன் மூக்கை ஆழ உறிஞ்சினான். அப்பாவின் சமையலின் ஜோரே அலாதிதான்.

"அப்பா, முருங்கைக்காய்க் குழம்பா? ரொம்ப வாசனையாயிருக்கப்பா!"

"ஆமாண்டா! நான் ஒருத்தி தினம் உசிரை விட்டு விதம் விதமாய்ப் பண்ணிப் போடறேன். உங்களுக்கெல்லாம் உள்ளே இறங்கறதில்லே. உங்கப்பா ஒரு நாள் பண்ணிட்டா ரோல்லியோ? மெச்சிக்க வேண்டியதுதான்!" என்று அம்மா இடையில் கோபித்தாள்.

''குழந்தை சொல்றுன்னுல் என்னடி தப்பு? இந்த முருங்கைக்காய்க் குழம்பைப் பதமாய்ப் பண்ணு பண்ணுன்னு நான் எவ்வளவோ தரம் உன்கிட்டே முட்டிண்டு இருக்கேன் ? எத்தனை சொல்லிக் கொடுத்தாலும் தெரியறதில்லே. இன்னிக்குச் சாப்பிட்டுப் பாரு, அப்படியே நளபாகந்தான்!''

''கேட்கணுமா? பெருமையை யெல்லாம் பிள்ளைகிட்டே சொல்லிக்குங்கோ. அது குழந்தை! கேட்டிண்டிருக்கும்.''

''பெருமைன்னு, இல்லாததையா சொல்றேன்? அன்னிக்கு ஒரு நாள் சொன்னேனே, தாளிக்கிறதைப் பத்தி. அப்படிப் பண்ணினது என்னமா யிருந்ததாம் சொல்லேன்!''

''சேச்சே, இந்தப் புருஷாளுக்கு உள் விஷயம் தெரியவே கூடாது. தெரிஞ்சா பொம்மனாட்டிகள் பாடு கஷ்டந்தான். அப்படிக் களைச்சுப் போயிருக்கேளே. கொஞ்சம் காப்பியானும் போட்டுச் சாப்பிட்டுட்டு அப்புறமா சமையல் பண்ணுங்களேன்!''

அம்மா சுபாவமே அப்படி. அவள் கோபம் கூடச் சிரித்துக் கொண்டுதான் இருக்கும்.

''ம்...ம்..... ஜக்கு, என்னடா, முழிச்சுண்டு நிக்கறே? அப்பா பார், கறிகாய் வதக்கிண்டிருக்கார் பாவம். நீ அந்தத் துவையலை அம்மியிலே கொஞ்சம் அரை'' என்று ஆண்டாளுவின் உத்தரவு ஒலித்தது.

''என்னம்மா, இது, என்னுலே முடியாது. சரசுவைப் பண்ணச் சொல்லேன்.''

''அவள் குழந்தைடா. ம் ம், பண்ணு சீக்கிரம். இல்லே விசிறிக்காம்பு முறிஞ்சுடும்.''

சொல்வாளே தவிர அம்மா அடிக்க மாட்டாள். சாப்பிடா விட்டால் தலையில் குட்டுவது ஒன்றுதான் அவள் அளிக்கும் தண்டனை. வெளியில் விழும் அந்த ஒவ்வொரு குட்டும் உள்ளே ஒவ்வொரு உருண்டை சாதமாக மாறி இறங்குவதால் அதை அவன் தண்டனையாகவும் நினைக்கவில்லை.

''அரையடா துவையலே !''

அழ முடியாமல் அவன் அரைத்தான். வெளிக் கூடத்தில் இருந்தவாறே அம்மா,'அப்படிச் செய்' 'அதைச் சேர்' என்று சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். அவள் பிரயோகங்களே அலாதி. ''அம்மியை ஓட்டு'' என்றுள். 'நடத்து' என்றுள். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லே.

''எதையம்மா?''

''வேற எதையடா? அம்மியை நடத்து.''

''எப்படி? அம்மிக்குக் கால் இருக்கா?''

''அட பிரகஸ்பதி!'' அவள் அந்தச் செயலே விவரித்தாள். சிறிது நேரத்தில் அவன் அலுப்புடன் வேலையை நிறுத்தி விட்டான்.

''என்னடா பாதியிலே நிறுத்திட்டே?''

''அம்மியை ஓட்டியாச்சு, நடத்தியாச்சு, இப்போ படுக்க வைச்சுட்டேன்.''

''கிரகசாரம், கிரகசாரம்!''

''சரி, போதும்! நீ குளிச்சிட்டு ஓடி வா, சாதம் போடறேன். ஸ்கூலுக்கு நாழியாகலே?'' என்றுர் அப்பா.

அவன் விடுதலை பெற்ற திருப்தியோடு வெளியே வந்து விட்டான்.

**டா**க்டர் உள்ளே வந்ததும் அவர்கள் எழுந்து நின்றுர்கள். சிகிச்சை முறை கிரமப்படி நடந்தது. அவர், ''ஒண்ணும் கவலைப்படாதீங்க ஸார்! எனக்கு தேறாப் இருக்கு'' என்று கூறிச் சென்றுர். ஜுரம் சிறிது குறைந்திருந்தது. ஆண்டாளு மெதுவாக, ''தாகமாக இருக்கு'' என்றுள். சரஸ்வதி கொண்டு வந்து தந்த பாலில் பாதி மிஞ்சி விட்டது. தலையணையில் நேராகப் படுத்துக் கொண்டு அவள் கூரையை வெறித்தாள்.

கிழக் கண்களில் சட்டென்று ஒரு துடிப்பு. இரு கைகளையும் நீட்டி ஜகந்நாதனையும் சரஸ்வதியையும் பற்றிக் கொண்டாள். வேறொரு இருப்பை மறுதளிக்கும் முயற்சி. அடிவயிற்றிலிருந்து பீறிட்டெழுந்த சுரீரென்ற வேதனைக் கீறல் ஒன்று உச்சந் தலையில் மோதியது.

''ரெண்டிலே ஒண்ணு தேர்ந்தெடுக்கணுமா? அப்படின்னு எனக்கு அந்த வாழ்வு தான் வேணும்.''

சீதாவின் குரல் அவள் நினைவில். அந்தக் குரலில் மாற்ற இயலாத் தீர்மானம். அவளுடைய மகள்தானே?

'என்னை அவள் வேண்டாமென்று உதறி விட்டாளே !'

அருமையான குழந்தை. இரண்டே குழந்தைகள் என்று எண்ணி யிருந்த போது பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின் தேவலோகத்தின் அதிசயப் பொன் மலர் போல் அவள் வயிற்றிலே பூத்த அற்புதமான எழிலுருவம்: சந்தியா காலத்தின் ரகசியமும் நிழல் துடிப்பும் இணைந்த மர்ம ஒளியிலே காணும் அழகுப் புதிர்போல நின்ற பதுமை. முதல் இருவரைப் போலன்றி இந்தக் குழந்தை இரண்டே வருஷங்களில் தந்தையின் அன்பைச் சுவைக்கும் அனுபவத்தை இழந்து விட்டதே என்ற தாப உந்தலில் ஆண்டாளு அத்தனை வறுமையிலும் விசேஷச் சலுகையுடன் வளர்த்தாள் அவளை. கூடுதலான பரிவைத் தந்து வளர்த்தாள். கடைசியில்?

என்னை வேண்டாமென்று உதறித் தள்ளி விட்டாளே!

அவளுடைய ஒரே தோல்வி — சீதாவால்.

மீதியெல்லாம் வெற்றிதானே?

குழந்தைகளை முன்னுக்குக் கொண்டு வர வேண்டும் என்று நினைத்தாள். நினைத்ததை முடித்தாள். அதற்காக உடல் உழைப்புத் தான் கொஞ்சமா? அந்தக் கைகள் எத்தனை பேருக்குத் துணி தைத்திருக்கும், எத்தனை

---

''முதலாளி ஆபீஸில் இருக்கிறுரா?'' தன் கணவனுக்குப் போன் செய்த ரமா ஆபீஸ் பையனைக் கேட்டாள்.



''இப்பத்தானே முதலாளி ஐயா அம்மாவோடு வெளியே போனுர்கள். நீங்க யாரு பேசறதுங்க?'' என்று கேட்டான் ஆபீஸ் பையன்.

ரமா சற்று யோசித்தாள். ''ஐயா வந்ததும் உங்க ஸ்டெனே போன் செய்தாங்கன்னு சொல்லு!'' என்றுள்.



கடைக்காரர்: இனி மேல் நான் உங்களுக்குக் கடன் தர முடியாது. உங்கள் கடன் தலைக்கு மேல் போய்விட்டது.

வாடிக்கைக்காரர்: உங்களுக்கு எப்படித் தெரியும்?

கடைக்காரர்: நீங்கள் தலையில் வைத்துக் கொண்டிருக்கும் தொப்பிக்கே இன்னும் பணம் வந்து சேரவில்லையே!

கூடைகள் முடைந்திருக்கும், எத்தனை வீடுகளில் சமைத்திருக்கும்! ஒரு சமயத்தில் சில கல்லூரி மாணவர்களுடைய அறைக்குத் தினமும் இட்டிலியோ உப்புமாவோ தயாரித்துக் காலையும் மாலையும் சுமந்து வரவில்லையா? விதி வளைத்தாலும் வளையாத நெஞ்சுரம். இறுதியில் வெற்றி அவளுக்குத்தான். வீரத்தின் நிழல்தான் வெற்றி. இரண்டும் இருவேறு பொருள்களல்ல.

ஜகந்நாதன் எஸ். எஸ். எல். சி. பரீட்சை தேறியதும், தான் அண்டியிருந்த குடும்பங்களிலிருந்து ஒரு பெரிய மனிதரிடம் அவனுக்காகச் சிபாரிசு கோரினாள் ஆண்டாளு.

''வேலை போட்டுக் கொடுக்கிறதுன்னு சுலபமா என்ன? என்னால் முடியாது'' என்று அவர் முதலில் மறுத்தார்.

''நீங்கள் போட்டுத் தரேன்னு சொல்கிற வரையில் நான் இங்கேயிருந்து நகரப் போகிற தில்லை!'' என்றாள் அவள் சிரித்துக்கொண்டே.

அந்த உறுதிக்கு முன் அவர் எம்மாத்திரம்? கடைசியில் ''சரி! சரி! பையன் ஒழுங்காயிருப்பானா?'' என்று கேட்டார்.

''இருப்பான்.''

''என்ன நிச்சயம்?''

''புருஷனை இழந்த நாளாக நான் இராப்பகலாய் வேர்வையைக் கொட்டி உழைச்சு உடம்பைத் தேய்ச்ச மானத்தோட வாழ்ந்து வந்திருக்கேன். அவன் என் பிள்ளை.''

ஒரு தரம் அவளை அவர் ஏறிட்டுப் பார்த்தார். அந்தச் சிபாரிசை ஏற்றுக் கொண்டார் அவர்.

பிற்காலத்தில் ஜகந்நாதன் வேலையிலிருந்து கொண்டே பி. ஏ. வரை தேறி மேல் நிலைக்கு வந்து விட்டான்.

சரஸ்வதியின் விஷயத்திலும் அப்படித்தான். திடீரென்று ஒரு நாள் ஆண்டாளு தன் புத்திரி மணப் பருவத்தை எட்டி விட்டதாகத் தீர்மானித்தாள். அவள் செய்த இட்டிலிகளை ருசித்த மாணவர்களில் ஒருவன் அநாதை. ஆனால் புத்திசாலி. அவனும் அவளுடைய உழைப்பின் அயராமை கண்டு மதிப்புப் பூண்டிருந்தான். அவளுக்கும் அவன் உருவமும் குணமும் பிடித்திருந்தன.

பீடிகையில்லாமல் ஒரு நாள் அவனிடம் தன் கருத்தை வெளியிட்டாள்.

''ரகுராமா! என் பெண் சரஸ்வதியை உனக்குக் கொடுக்கலாம்னு இருக்கேன்.''

அவ்வளவுதான்; அப்போதே விஷயம் நிச்சயமாகி விட்டது போல் இருந்தது. அவன் முதலில் விழித்தான்.

''என்னம்மா சொல்கிறீர்கள்?''

''எங்க சரசுவை நீ பார்த்திருக்கிறயோ இல்லியோ...?''

''பார்த்திருக்கேன்.''

''அழகாய்த்தானே இருக்கா?''

''ஆமாம்......''

''ஏதோ ஓரளவுக்குப் படிச்சுமிருக்கா,— இல்லையா?''

''அது சரி......''

''சமர்த்தான பெண். குடித்தனப் பாங்கு. புத்திசாலி. உன் மனசு தெரிஞ்சு நடந்துப்பாள், இல்லையா?''

''அதெல்லாம் இருக்கட்டும்....''

''வேறென்னப்பா வேணும் உனக்கு? என் கிட்ட பணம் காசு கிடையாதுதான். ஆனால் நீதான் அதையெல்லாம் பெரிசா நினைக்கலியே? அது தெரிஞ்சுதானே உன்னை என் மாப்பிள்ளையாய்ப் பண்ணிக்கலாம்னு தீர்மானிச்சிருக்கேன்.''

''அதுக்கில்லை......''

''நாங்க நல்ல குலத்திலே வந்தவர்கள் தானப்பா! என்னமோ நான் இட்டிலி பண்ணி வித்தவளாச்சேன்னு பார்க்காதே. அது ஏதோ போதாத காலம். நாளைக்கே உனக்கு நல்லதாய் ஒரு உத்தியோகம் கிடைச்சுடுத்துன்னு நான் பெரிய ஆபீஸருடைய மாமியார் ஆயிடுவேனுக்கும்!''

அவன் சிரித்து விட்டான்.

''அப்போ முகூர்த்தத்தை எப்போ வைச்சுக்கலாம்டாப்பா?''

''அதை மட்டும் என்னைக் கேட்பானேன்? எல்லாத்தையும் ஏற்பாடு பண்ணின மாதிரியே அதையும் பண்ணிடுங்கோம்மா, எனக்கு ஆட்சேபமில்லை. இப்படி ஒரு மாமியார் கிடைக்கிறதானால் சீக்கிரமே கலியாணத்தை முடிக்க வேணுமா?'' என்று கூறி அவன் மீண்டும் சிரித்தான்.

அவள் சோதிடம் பொய்யாகவில்லை. மாப்பிள்ளை ரகுராமன் உலகில் நல்ல அந்தஸ்தை அடையத்தான் செய்தான். வெற்றி அவளுக்குத்தான்.

நாளடைவில் அவள் நிலையும்தான் உயர்ந்து விட்டது. நல்ல உத்தியோகத்தில் மகன். கிளைகளெல்லாம் சுபிட்சமாய் விரிந்து விட்டன. சிறிய வீடானாலும் இன்று அவள் இருப்பது அவளுடைய சொந்த வீடு. அன்பு மிக்க மக்கள், பாசத்தைச் சொரியும் பேரன் பேத்திகள். பேத்தி பத்மஜாவின் கல்யாணத்தைக் கூடப் பார்த்து, கொள்ளுப் பேரனைக் கையில் வைத்துக் கொஞ்சியாகி விட்டது. சரத்கால சந்திரனாக வாழ்வில் ஒளி கூடியது. அதில் ஒரே ஒரு நிழல்.

கடிகாரத்தைப் பார்த்தார்கள். இனி இன்றிரவு சீதா வர முடியாது. அண்ணனும் தங்கையும் தாபத்துடன் தாயின் முகத்தை நோக்கிய ஏக்கத்தில் எதுவும் அவர்களால் பேச இயலவில்லை.

மாத்திரையும் மருந்தும் உட்கொண்டபின் ஆண்டாளு தன்னை மறந்து உறங்கி விட்டாள். பத்மஜா முன்பே உணவை முடித்துக்கொண்டு

# ால்கேட்டின்மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை கற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர் நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் கிரீமினுல் உங்கள் பற்களை நன்ருகத் துலக்குங்கள். இதன் வீசியதும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிறுர்கள்.




க்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- துர் நாற்றத்தை அகற்றுகிறது
- சொத்தையைத் தடுக்கிறது
- பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது

நீங்கள் பற்பொடியை விரும்பினுல், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத்பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

சுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெற
ம் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும்
விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறுர்கள்.

-8-33-TAM.

பாட்டிக்கு அருகில் வந்து துணையாய் உட்கார்ந்து கொள்ள, மற்ற எல்லாரும் சாப்பிடச் சென்றார்கள்.

''சீதா வரவேயில்லே, பார்த்தியா?'' என்று பெருமூச்செறிந்தான் ஜகந்நாதன்.

'' தந்தி போய்ச் சேர்ந்திருக்காதோ, அண்ணா?''

''எக்ஸ்பிரஸ் தந்தி அல்லவா கொடுத்தோம்! போகாமல் என்ன?''

''அவள் வந்தால் அம்மாவுக்குச் சந்தோஷமாயிருக்கும்னுதான் எனக்குத் தோணறது.''

''பதிமூணு வருஷமா ஒரு தடவைகூட வராமல் இருந்துட்டாளே! என்ன வைராக்கியம்! நீயும் நானும் அப்படி இருந்திருக்க முடியுமா சரசு? அம்மா செருப்பாலே அடிச்சாலும் நம்மாலே அவளை வந்து பார்க்காமல் இருக்க முடியாது.''

''நம்ம பாசம் வேறே விதம் அண்ணா. ஒரு விதத்திலே நமக்கு இருந்த ஓர் அதிர்ஷ்டம் அவளுக்கு இல்லே. சௌகரியமாய், சந்தோஷமாய் வாழற அப்பா அம்மாவோடு இயற்கையாய், கஷ்டம் தெரியாமல் அன்பிலே திளைச்சு வாழ்ந்து அவாளோட நெருக்கமாக இருந்தவா நாம ரெண்டு பேரும். சீதா சரிவு காலத்திலே வளர்ந்த குழந்தைதானே. நம்ம முழுமை அவளுக்கு எங்கே? அந்தப் பாசமும் அவளுக்கு ஏற்பட இடமில்லே.''

ஆண்டாளு கண்களைத் திறந்தபோது எதிரே பத்மஜாவின் முகம் தென்பட்டது.

''ஏதாவது வேணுமா பாட்டி?'' என்று பரிவாக அவள் கையைப் பிடித்துக் கொண்டாள் பத்மஜா.

இல்லை தலையை அசைத்தாள். பத்மஜாவின் விழிகள் பாசக் கண்ணீரில் நெகிழ்ந்தன. பாட்டியின் மீது அவளுக்கு விசேஷ பிரேமை உண்டு. முதல் பேத்திக் குழந்தை என்ற முறையில் அவளும் பாட்டிக்குச் சற்று அதிகச் செல்லம்தான்.

வாழ்வின் கனம் இறங்கி நின்ற அந்த முகத்தைப் பத்மஜா ஆர்வத்துடன் பார்த்தாள். பாவம், பாட்டி! சீதா சித்தி விஷயம் ஒன்றுதான் அந்தச் சிறிய வாழ்வின் ஒரே குறை. விரும்பினவனை மணந்து கொள்ளட்டும் என்று பாட்டியும் விட்டிருக்கலாம். அம்மாதிரி விஷயங்களில் நம்பிக்கை இல்லாதவள் இல்லையே பாட்டி!

பத்மஜாவுக்கு ஞாபகம் இருந்தது. நாராயணன் அவளைப் பெண் பார்க்க வரவிருந்த போது பாட்டி அவளுக்குக் கடிதம் எழுதியிருந்தாள்: ''பையனைப் பார்க்கிறபோது ஆசைக் கண்ணாலே பார்.'' சிரிப்புத்தான் வருகிறது இன்று அந்த நினைவில். கூடவே கண்களும் பனிக்கின்றன.

நாராயணனை மணந்து அவள் புதுக் குடித்தனம் செய்யப் புறப்பட்டுச் சென்றபோது பாட்டி எத்தனை நல்லுரைகள் சொல்லி அனுப்பினாள்! அடிக்கடி கடிதம் எழுதுவாள். அது மட்டுமல்ல. ஒரு நாற்பது பக்க நோட்டுப் புத்தகம் நிறையச் சமையல் குறிப்புகள் எழுதிக் கொடுத்திருந்தாள். அன்பும் அங்கலாய்ப்பும் வரிக்கு வரி மின்னும்.

''அரைத்த மெந்தியக் குழம்பு......'' ''கொட்டு ரஸம்'' ''எல்லாவற்றையும் அம்மியில் ஒன்றிரண்டாய் அரைத்துக் கொண்டு..''

குழம்பு, ரச வகைகளுக்குப் பின் கூட்டு முதலியவை. பிறகு சித்திரான்ன, பட்சண வரிசைகள். அச்சுப் புத்தகங்களில் இல்லாத சில குறிப்புக்கள் பாட்டியின் விதிகளில் காணப்படும்.

''பாத்திரத்தைக் கையால் உடனே தொட்டு விடாதே. கை பொரிந்து போய் விடும்.'' ''பதம் பார்க்கும் போது ரொம்பக் கிட்டத்தில் குனியாதே. முகத்தில் வெடித்து விடும்.'' ''உனக்குத் தேங்காய் பிடிக்கும் என்பதற்காகத் திருத்தி வைத்திருப்பதையெல்லாம் நீபாட்டுக்கு வெறும் வயிற்றில் சாப்பிட்டு விடாதே.'' ''இந்த வகைக் குழம்பு நம் வீட்டில் மட்டும்தான் செய்வது. என் சின்னம்மாவிடமிருந்து நான் கற்றுக் கொண்டது. வேறு யாருக்கும் தெரியாது. நீயும் யாருக்கும் சொல்லி விடாதே. இப்படிச் செய்து பரிமாறினையானால் விருந்துக்கு வருபவர்கள் ரொம்ப அருமையாய் இருக்கிறது என்று சாப்பிடுவார்கள்.'' ''இந்தத் தினுசு உன் அகத்துக்காரருக்குப் பிடித்திருந்தால் நிறையச் செய்து போடு.'' இப்படி எத்தனை எத்தனையோ!

கடிதங்களிலோ? ''உடம்பைப் பார்த்துக் கொள்.'' ''புருஷனுக்கு வேண்டியதை யெல்லாம் கவனித்து அவர் பேச்சைக் கேட்டுக் கொண்டு நட.'' ''அவரைத் தனியாக நீ இல்லாமல் அடிக்கடி வெளியே போகவிடாதே. ஆண் பிள்ளைகளை முழுக்க நம்பக் கூடாது.'' ''உனக்குப் பிடித்த மாம்பழங்கள் இங்கே கொட்டிக் கிடக்கும்போது எனக்குச் சாப்பிடவே மனசு வரவில்லை........''



'பாட்டி, பாட்டி, இந்த அன்பை யெல்லாம் இழந்து விடப் போகிறேனா?' பத்மஜா துடிப்புடன் கிழவியின் கால்களைப் பிடித்துக் கொண்டாள்.

''என்ன பத்மஜா ?''

''ஒன்னுமில்லே, பாட்டி! உனக்குக் காலேப் பிடிச்சு விடறேன். நீ அப்படியே தூங்கு.''

''ம்..... நீயும் போய்ப் படுத்துக்கோடியம்மா. குழந்தைகளோட விடியற்காலையில் கண் விழிக்கணும்.''

''ஆகட்டும். பாட்டி. நீ பேசி அலட்டிக்காதே. ஜுரம் ஏறிவிடப் போகிறது. பேசாமல் தூங்கு.''

அவள் முகத்தையே சிறிதுநேரம் பார்த்துக் கொண்டிருந்தாள் ஆண்டாளு. வேறு முகம் அங்கு எதிர் நிற்பது போல் இருந்தது. இளமை, அழகு...... அன்பும் இல்லையென்று சொல்ல முடியாது. ஆனால் அன்பை மீறிய உறுதி, பிடிவாதம், தீவிரம். ஆண்டாளு கண்களை மூடிக் கொண்டாள். இப்போது நினைவில் பதிந்தது அந்தப் பின்னணி முகம்தான்.

''ரெண்டுலே ஒன்னு தேர்ந்தெடுக்கணுமா? அப்படியானால் எனக்கு அந்த வாழ்வுதான் வேணும்.''

என்னே அவள் உதறி எறிந்தாளே.

தாயின் பேச்சை மீறிச் சென்று விட்டாள். சீதா ஏன் அப்படிச் செய்தாள்? தான் அவளே இஷ்டம் போல் விட்டிருக்கலாமோ? ஒருவனை வரித்து அவனுக்கே வாழ்க்கைப்படுவேன் — என்று சொன்னாள் என்பதற்காகவா தனக்கு அத்தனே கோபம் வந்தது? தான் அவ்வளவு பெருந்தன்மையற்றவளா? அப்படித் தோன்றவில்லே.

செல்வக் குழந்தை. கபிட்சத்தில் குறைந்து விட்ட மொட்டாயிற்றே என்ற ஆற்றாமையின் வேகத்தில் பொங்கிப் பெருக்கெடுத்த அன்பு. எதையோ ஈடு செய்ய நினைக்கும் இரட்டிப்புத் தாபம். அதனாலேயேதான் அந்த அதிர்ச்சியும்கூட. தன் சந்தோஷ நாட்களில் இல்லாமல் கஷ்ட தசையைப் பகிர்ந்து கொள்ள வந்த பசலே மீது கொண்டிருந்த அந்த அன்பின் உத்வேகம் எதிர்ப்பைக் கண்டபோது வியந்து கோபத்தில் சீறியது.

''கூடாது, சீதா!''

''அதுதான் என் இஷ்டம் அம்மா. கல்யாணம் என் சொந்த விஷயம்.'' சிவந்த முகத்தோடு, இளமையின் ஆர்வப் புரட்சியோடு சீதா பேசினாள்:

'' அப்படியானால் என் இஷ்டம்....''

''கொஞ்சம் யோசி அம்மா. நான் சொல்றதில் தப்பொன்னும் இல்லே.''

''என் வார்த்தைக்கு மதிப்பு அவ்வளவு தானா? உனக்கு எங்கிட்ட இருக்கிற பிரியம் அவ்வளவுதானா?''

''உங்கிட்ட எனக்கு இருக்கிற பிரியத்துக்கும் இதுக்கும் சம்பந்தமில்லே.''

''நீ அவனேப் பண்ணிக்கக் கூடாது.''

''நான் பச்சைக் குழந்தையில்லேயம்மா, நீ இப்படி யெல்லாம் உத்தரவு போட.''

''அடி பாவி! பெற்றவள்னு நல்லது கெட்டதை யெல்லாம் எடுத்துச் சொல்லக்கூட அதிகாரம் இல்லேயா?''

''நான் கெட்டதாக ஏதானும் செய்தால் நீ கண்டிக்க வேண்டியதுதான். நான் கலியாணம்தானே செய்து கொள்ளப் போறேன்?'' சீதா சிரித்தாள், தாயை அன்போடு பார்த்துக் கொண்டே கேட்டாள்: ''மாப்பிள்ளே தேடற சிரமத்தை உனக்கு நான் மிச்சப்படுத்தறேனே? அதிலே உனக்குச் சந்தோஷமில்லேயா அம்மா?''

ஆண்டாளு வெகுண்டு எழுந்தாள்.

''சீதா! இது விளையாட்டில்லே. நீ அவனேப் பண்ணிக்கக் கூடாது, முடிவாய்ச் சொல்லி விட்டேன்.''

சீதாவின் முகமும் கடுமையாயிற்று. ''நானும் முடிவாய்த் தீர்மானிச்ச விஷயம் தான், அம்மா!''

''அதாவது உன் இஷ்டம் போல்தான் செய்வே ?''

''நான் செய்யறது தப்பில்லே!''

''அவனேப் பண்ணிண்டாயானால் என்னே மறந்துடணும் நீ.''

''இதெல்லாம் என்னம்மா பைத்தியக்காரப் பேச்சு?''

''நிச்சயமாத்தான் சொல்றேன். உனக்கு அவன் வேணுமா, நான் வேணுமா?''

'' அம்மா ! கொஞ்சம் அமைதியாய் யோசனே பண்ணு.''

''நீ எனக்கு அமைதி சொல்லிக் கொடுக்க வந்துட்டியாடி? ரெண்டாம் பேச்சு எதற்கு? இப்பவே சொல்லு, உனக்கு அவன் வேணுமா, நான் வேணுமா?''

சீதா மௌனமாய் அவளே நோக்கினாள்.

''சொல்லு. என் பேச்சைக் கேட்டுண்டு இங்கே இருக்கயா, அவனேக் கலியாணம் பண்ணிண்டு போயிடறயா? அப்புறம் என் முகத்திலே விழிக்கக் கூடாது, ஆமாம்.



அன்னையைப் போன்ற அழகொளி படைத்தவள்.



தாயைப் பார்த்தால்
மகளைப் பார்க்கவேண்டாம்.
ஒரே அச்சு! 'சகோதரிகளோ?'
என்றுகூடச் சிலர் சந்தேகிக்கின்றனர்.
தாயின் வழி சென்று தன் அழகைப்
பராமரிக்கிறாள் அவள். ஆண்டுகள் பல
சென்றாலும் அவள் எழில் குன்றாது. காரணம்,
தொடர்ந்து அவள் உபயோகிப்பது 'ஹேஸலின்'
ஸ்னோ. ...தனியாகவோ, பவுடர் படியும்
தளமாகவோ எழிலைப் பாதுகாத்து, அதற்கு
மெருகூட்டுகிறது 'ஹேஸலின்' ஸ்னோ.

# 'ஹேஸலின்' ஸ்னோ

உங்களுக்கு எழிலூட்டுகிறது.
'ஹேஸலின்' வரிசையில் மேலும் கிடைப்பவை
கோல்ட் க்ரீம், டால்கம்.

பர்ரோஸ் வெல்கம் & கம்பெனி (இந்தியா)
ப்ரைவேட் லிட்.
த. பெ. நெ. 290, பம்பாய்-1



BI-BW-20 TAM

இப்போ சொல்லு, உனக்கு எந்த வாழ்வு வேணும்?'' என்று கேட்டாள் ஆண்டாளு.

ஆவலின் விளிம்பில் அவள் நின்ருள். அருமையாக வளர்த்த குழந்தை. ''அம்மா, எனக்கு உன்னைவிட எது முக்கியம்?'' என்று வரமாட்டாளா? காலடியில் விழப் போகும் அவளைத் தூக்கித் தழுவிக் கொள்ள ஆண்டாளுவின் கரங்கள் துடித்தன.

ஆனல் சீதா அப்படிக் காலில் விழவில்லை. நிமிர்ந்து நின்று உறுதியுடன் தாய்க்கு மறுமொழி கூறினுள். ''ரெண்டிலே ஒண்ணு தேர்ந்தெடுக்கணுமா? அப்படியாஞல் எனக்கு அந்த வாழ்வுதான் வேணும்.''

எவ்வளவு காலம் ஆயிற்று, அந்த அதிர்ச்சியைச் சமாளித்துக் கொள்ள! தீய கனவு கண்டதைப் போல் விழிப்பு நிலையிலேயே இன்னுமொரு விழிப்பைத் தேடித் தடவிப் பல ஆண்டுகளைக் கடத்தினுள். 'என்னை உதறி விட்டாள்.' வாழ்வின் ஒவ்வொரு சோதனையிலும் வெற்றியே கண்டு வந்த அவளுக்கு இப்படி ஒரு பெருந் தோல்வி, சொந்த மகளாலேயே.

அமைதிக்கு இடமளித்து அருளோடும் யோசனையோடும் நடந்து கொண்டிருந்தால் எல்லாம் இன்பகரமாய் ஆகியிருக்கலாம் என்று நிகழ்ச்சிக்குப் பின் வருந்துவது வியர்த்தம். விதி வகுத்த கோட்டை மீற முயல்வதில் பயனென்ன? இரும்புக் கதவில் மோதிய தீவிரம் நோவைத்தான் கொடுத்தது. ஆயினும் மனமையத்தில், வாழ்வின் கேந்திர ஆழத்தில், ஒரு வடு நிலைத்துத்தான் போயிற்று. மாருத் துயரம் தாயுள்ளத்தைச் சூழ்ந்துகொண்டது.

பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன் சீதா அவளுக்குத் தோல்வியைத் தந்து விட்டுப் போய் விட்டாள். தன்னம்பிக்கை சிதைவுற்று விட்டது. உறுதியின் அர்த்தத்திலேயே கேள்விக்குறி தோன்றி விட்டது. அவள் தன்னையறியாமல் இன்னும் எத்தனை பல வினைகளைக் கொண்டிருக்கிருளோ? சரஸ்வதியும் ஜகந்நாதனும் கூட அவளால் ஏதேனும் வகையில் — மனம் எண்ணுத சிறு செயல்களில் — புண்பட்டுப் போயிருக்கிருர்களோ என்னமோ? அவளுடைய பலம் பூரணமானதல்ல என்பதைச் சீதா நிரூபித்துவிட்டாள். அதன்பின் ஒவ்வொரு மூலையிலும் நெஞ்சம் நிச்சயமின்றித் தடுமாறிக் கூசியது.

ஆண்டுகளூடே இதயத்தில் ஏக்கச் சுமை. கண்கள் அவளைக் காணுது வாடின. சொல்லியனுப்பலாமா? ஆனல் அவள் வருவாளா? தோல்வியை ஒப்புக் கொண்ட பின் ஆண்டாளுவின் பெருமிதமும் நம்பிக்கையும் சிதறி விட்டன. மிஞ்சியது அன்பின் ஒரே நெகிழ்ச்சி. அதுவும் பயனற்றது.

''நீ போய்ப் படுத்துக்கோ பத்மா. நான் அம்மாவோடு உட்கார்ந்துண்டிருக்கேன்'' என்றவாறு சரஸ்வதி வந்தாள்.

''நீங்கள்ளாம் சாப்பிட்டாச்சா அம்மா?''

''ஆச்சு. நீ எழுந்து போ.''

பத்மஜா மெல்ல எழுந்து வேறு அறைக்குச் சென்ருள். காலைப் பிடித்துவிட்ட செயல் எப்போதோ நின்று விட்டிருந்தது.

''சரசு!'' ஆண்டாளு ஈன சுரத்தில் தன் மகளைக் கூப்பிட்டாள்.

''அடடா, அம்மா நான் உன்னை எழுப்பிட்டேனு?''

''இல்லே. வெறுமதான் கண்ணை மூடிண்டிருந்தேன். ஜக்கு எங்கே? வராளு?''

''ஆமாம்.''

''ரெண்டு பேரும் என் பக்கத்திலே கொஞ்ச நாழி உட்கார்ந்திண்டிருங்கோ. நீங்க ரெண்டு பேர்தானே எனக்கு?''

சரஸ்வதியால் தாங்க முடியவில்லை. ''மூணு பேர்னு சொல்லும்மா. அவளை மன்னிச்சுடு.''

''நான் மன்னிக்க என்ன இருக்கு? எனக்கு என்ன தகுதி உண்டு?''

பாசத் துடிப்பாக வாய் படபடத்தது. பழங்காலச் சரீரம் உணர்வின் நெகிழ்ச்சியைத் தாங்கவில்லை. அவள் நெளிந்தாள். சரஸ்வதி அருகில் சென்று ஆசுவாசப்படுத்தித் தலையணையையும், போர்வையையும் சரி செய்து விட்டு ஒரு பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள். சாப்பாட்டு அறையிலிருந்து வந்த ஜகந்நாதன் அன்னையின் மறு பக்கத்தில் அமர்ந்தான்.

வெளியே நிலவு தோன்றி விட்டது. ஜன்னல் கம்பிகள் வெளிறடித்த வானத் துண்டின் மீது கோடு இழுத்தன.

''அப்படித்தான் என் பக்கத்திலேயே இருங்கோ.''

கிழவியின் உள்ளத்தில் தாபச் சுழல். பாச வேர் புரையோடிப் போன வேதனை. கண்களை மூடினுல் மணற் பரப்பு விரிவதுபோல் பிரிபிரியாக இருள் அலைகளின் அணிவகுப்பு. களைத்து நீண்டிருந்த நிலையிலும் அந்த உடலிலே பொலிவு மாறவில்லை. சுடர் விடும் கொழுந்து போல் ஒரு தேஜஸ். இருவர் உள்ளங்களும் மருண்டன. அம்மா போய் விடுவாளோ? எழுபது வயதிலே அற்பாயுளில் போய்விடுவாளோ? ஆம். அவளைப் போன்ருருக்கு அது அற்பாயுள்தான். அத்தகைய உயர்ந்த ஜீவன்களுள் அவள் ஒருத்தி. அவளைப் போன்ருேர் எத்தனை காலம் வாழ்ந்திருந்தாலும் அத்தனையும் சிறப்பு. அவர்கள் எப்போது மறைந்தாலும் அற்பாயுள்தான்.

சீதா வரவில்லை. நாளையாவது வருவாளா?

''ஜக்கு! சரசு!''

''அம்மா!''

''எனக்கு ஒண்ணு ஆயிடுத்துன்னு பெரிசா அழுது சத்தம் போடாதேங்கோ. சிறிசுகளும், சின்னக் குழந்தைகளும் பயந்துக்கப் போரு....''

''அம்மா! உனக்கு.... நீ போகக் கூடாதம்மா!'' என்ருன் ஜகந்நாதன்.

''என்டா? வாழவேண்டிய வயசிலேயே உங்கப்பா போகலையா? எனக்கென்ன கேடு? எழுபது வயசிலே?''

எத்தனை நாளைய ஆற்ருமை, அந்த நினைவு? இன்றுவரை அவர்கள் அதை அறிந்ததில்லை. அந்த அடிமுடியற்ற ஏக்கத்தைக் கிழக் குரலில் உணர்ந்தபோது அவர்கள் வாயடைத்து உட்கார்ந்து விட்டார்கள்.

''உங்களுக்குப் படுத்துக்க நாழியாகலையா?''

''வேணும்மா. இப்படியே உட்கார்ந்திருக்கோம். நீ தூங்கு.''

''ஆகட்டும். தூங்கறேன். நீங்க ரெண்டு பேரும் போய்ப் படுத்துக்குங்கோ.''

அவள் சொல்லிவிட்டால் அவர்கள் மீறுவதென்பது ஏது?

அண்ணனும் தங்கையும் தாழ்வாரத்துக்கு வந்து படுக்கைகளை விரித்தனர். உறக்கம் பிடிக்கவில்லை. நெஞ்சம் நிலைகெட்டு அலைந்தது.

''என்னிக்குமே குழந்தைகளாய் இருந்துட்டால் எத்தனை நன்னாயிருக்கும் அண்ணா!''

''இல்லே சரசு!'' ஜகந்நாதனின் முகத்தில் அலுப்புக்கூட ஓர் அடங்காத ஒளியைக் காட்டியது. ''குழந்தையுள்ளம் வேண்டியதுதான். ஆனால் பெரியவர்களின் அனுபவம் வேணும். சுக துக்கம் வேணும். இந்த நாடகத்தின் ஒரு காட்சியைக் கூட விட நான் தயாராயில்லே.''

சரஸ்வதி பெருமூச்செறிந்தாள். சட்டென்று அவள் முகம் கவனத்தில் தீவிரமாயிற்று. இருவருக்குமேதான். அப்படியே திரும்பி வாசல் கதவைத் திறந்துகொண்டு வராந்தாவுக்கு வந்தார்கள்.

உண்மைதானா இது? உண்மைதானா? டாக்சிக்காரனுக்குப் பணம் கொடுத்து அனுப்பி விட்டுப் படி ஏறி வந்தாள் சீதா.

''சீதா!''

''ரயில் லேட்டண்ணா. அதுவும் தவிர இந்தச் சைதாப்பேட்டைக்கு ராத்திரியிலே வர ஒரு டாக்சியும் இலேசிலே ஒத்துக்கறதில்லே. அதிருக்கட்டும். அம்மாவுக்கு...?''

அண்ணாந்து பார்த்தான். இருட்டிலும் முகங்களின் ஒளி தெரிந்தது.

''நீ எங்கே வராமல் போயிடுவையோன்னு பயந்துட்டோம் சீதா.''

''அம்மாவுடைய இந்த நிலையிலேகூடவா? என்னை நீங்கள்ளாம் புரிஞ்சுண்டது அவ்வளவுதானா...?''

''அதுக்கில்லே...''

''அவள் எங்கே இருக்காள்?''

சரஸ்வதி அவளை உள்ளே அழைத்துச் சென்றாள். வண்டியிலிருந்து இறக்கிய பெட்டியையும் படுக்கையையும் எடுத்துக் கொண்டு ஜகந்நாதன் பின்தொடர்ந்தார். இருவர் மனத்திலும் அமைதி. கூடவே, அம்மா என்ன சொல்வாளோ என்ற அச்சம்.

''இதோ.''

விடி விளக்கின் சிவப்பொளியும், ஜன்னல் வழி பாய்ந்த நிலா வெள்ளத்தின் பால் சுடரும் கட்டிலின் மேல் ஒளியைக் குவித்தன. சீதா பார்த்துக் கொண்டு நின்றாள். கிழவியின் மூடிய கண்களின் கீழ் கருமை தேங்கிக் கிடந்தது. ஒட்டிய கன்னங்களிலும் கருமை. நெற்றி மேடும், மூக்குத் தண்டும் முகவாய் நிமிர்ச்சியும் வெளிச்சத்தைப் பெற்றுப் பளபளத்தன. துல்லியமாக வெளுத்த கேசம் மட்டும் அந்த மங்கிய ஒளியிலும் பட்டு அருவியாக மின்னிப் படுக்கை விரிப்பெங்கும் பிரவாகம் எடுத்தது. சீதாவின் கண்கள் மெல்ல மங்கின. எத்தனை நாளைய பிரிவு! எத்தனை எத்தனை ஆண்டுகள் சூனியக் குழியில் விழுந்து வியர்த்தமாகி விட்டன!

இமைகள் மேல் படபடப்பு. ஆண்டாளு இன்னும் தூங்கவில்லே. கண்களை மெதுவாகத் திறந்தாள்.

''யாரங்கே நிற்கிறது?''

ஒரு நாள் இரவு செட்டியார் வீடு ஒன்று தீப்பிடித்து எரிந்து விட்டது. செட்டியார் கோடீசுவரர். அந்த வீட்டை இன்ஷ்யூர் செய்திருந்தார். இன்ஷ்யூர் கம்பெனியார் தீப்பிடித்த காரணத்தை அறிய ஓர் இன்ஸ்பெக்டரை அனுப்பி வைத்தார்கள். வெகு நேர சோதனைக்குப்பின் இன்ஸ்பெக்டர் புறப்பட்டார். செட்டியார் அவரைக் கூப்பிட்டு, ''தீப்பிடித்தது எதனால் என்பது ஏதாவது தெரிந்ததா?'' என்று கேட்டார்.

''இரு பொருள்கள் உரசினதால் ஏற்பட்டிருக்க வேண்டும்!''

''அப்படி உரசக் கூடிய பொருள் எதுவும் இருந்ததாகத் தெரியவில்லேயே!'' என்றார் செட்டியார்.

''உங்கள் வீட்டின் பெறுமானம் என்ன? ஒரு லட்சம்! நீங்கள் எடுத்த பாலிஸியின் பெறுமானம் இரண்டு லட்சம்! இரண்டுக்கும் இடையே ஒரு மோதல் ஏற்படவே தீப்பிடித்திருக்கிறது!'' என்றார் இன்ஸ்பெக்டர்!

பின்னாலிருந்த சரஸ்வதி சட்டென்று மின் விளக்கை ஏற்றிவிட்டு வெளியேறினாள்.

ஒரு கணம் பரிபூரண மௌனம். கண்களால் நெஞ்சை ஊடுருவி மறைந்து போன காலத்தை யெல்லாம் ஒரு நோக்கினால் இட்டு நிரப்பும் பிரும்மாண்டச் செயலிலே உணர்ச்சிகள் தடுமாறிவிட்டன.

''அம்மா!''

ஓடிவந்து அவள் அன்னையின் முகத்தைப் பிடித்துக் கொண்டாள்.

''சீதா.... சீதா! அடி சீதா.....!''

ஏதோ குமுறல்தான். குரல் ஒப்புக்கு வெளி வந்ததே தவிர எதையும் உணர்த்தவில்லை. ஆனால் வாக்கின் தெய்விகத் திறமை எல்லாம் அந்த வாக்கற்ற உளறலில் நிறைந்து விட்டது. கைகள் தாபமாய்ப் பற்றின. இதயமும் பற்றியது. தாயும் மகளும் ஒருவரை யொருவர் அணைத்துக் கொண்டு கரைந்து விட்டார்கள்.

காலம் ஒருவாறு நிலைபெற்றது. இருவரும் ஒன்றிய நிலை மாறிக் கண்ணில் பார்வையை வைத்து நோக்கினார்கள். முப்பத்து மூன்று வயதிலும் சீதாவிடம் எத்தகைய அழகு! முகத்தில் நிறை. அன்பில் கனிகின்ற முகத்தின் பின்னணியின் துயரற்று அமைந்த வாழ்வின் அடிச்சுவடு. பெற்றவளுக்குச் சட்டென்று நெஞ்சில் ஒரு திருப்தி. இடம் பெயர்ந்து அந்தரத்தில் ஊசலாடிய பாதம் கடைசியில் பூமியில் வந்து படிந்து விட்டது போன்ற எல்லையற்ற ஆறுதல்.

அம்மாவின் முகத்துக் கோடுகள் ஒவ்வொன்றும் வாழ்க்கை நூலில் உழைப்பும் உதிரமும் கொண்டு வரைந்த ஒரு பொன் அட்சரமாகத் தோன்றியது சீதாவுக்கு. இத்தனை ஆண்டுகளில் எவ்வளவு அனுபவங்களை அடைந்திருப்பாள் அம்மா. தான் அதைப்

பற்றி ஏதும் அறியவில்லை. அது என்னவோ ஒரு நிரந்தர இழப்புத்தான்.

பாசம் குழறும் கரங்களில் மீண்டும் மகளைத் தழுவிக் கொண்டாள் ஆண்டாளு. ''சீதா.... என் சீதா... என் குழந்தை.''

''உடம்பு எப்படி அம்மா இருக்கு?''

அவள் பேசாமல் பார்த்தாள். பார்த்துக் கொண்டே இருந்தாள்.

''அம்மா.....''

''சீதா... நீ அப்படியே இருக்கே. அதே அழகாய். ஒண்ணும் மாறலே. ஆனால்...''

''ஆனால் என்னம்மா?''

'எனக்கு அந்த வாழ்வுதான் வேணும்!' அந்தச் சொற்கள் ஒரு மாறுதலை அழிக்க இயலாத வகையில் அறுதியிட்டுக் கூறிவிடவில்லையா?

''ஒன்றுமில்லை சீதா.''

''நீ எதுக்கும் கவலைப்படாதேம்மா. நாங்க எல்லாரும் இப்போ கூட இருக்கோம்.''

''ஆமாம்.''

''நான் வந்துட்டேம்மா.''

''வந்துட்டே.'' ஆண்டாளு அவளை நெகிழ்ச்சியோடு பார்த்தாள். நெகிழ்ச்சி ஒண்ணுதான் அவளிடம் இப்போது இருந்தது. பாசத்தின் மெலிவு. அன்பு ஒன்றே இதயம் முழுவதும் நிறைந்தது. நீங்காத செல்வமாக நிலைநின்றது. வேறெதுவும் இல்லை. வேறெதுவும் வேண்டாம். இதன் வலிமைக்கு முன் வெற்றியும் தோல்வியும் பயனில்லாச் சொற்கள்.

''நீ வந்தது எனக்குச் சந்தோஷம் சீதா. புருஷனோடும், குடும்பத்தோடும் தீர்க்காயுசாய் நன்றாயிரு.''

சீதா அவள் கையைப் பரிவாக அழுக்கினாள். ''உன் ஆசீர்வாதம் இருந்தால் எனக்கு எல்லாம் நிறைவுதான் அம்மா.''

''அந்த நிறைவைத் தேடிக்கிற சாமர்த்தியம் உனக்கு இருந்தது!'' ஆண்டாளு மகளைச் சிறிது நேரம் பார்த்தாள். மெதுவான குரலில் உயிர்த்தாள். ''அதுக்காகத்தானே என் வார்த்தையை மீறி, என்னை உதறிட்டு நீ போனே?''

சீதாவின் கண்கள் மிருதுவாயின.

''நீ என்னைப் புரிஞ்சுக்கலையம்மா. நான் அவரை விரும்பினேன் என்பது உண்மைதான். ஆனால் அந்த அன்பு முனைஞ்சு வளர்த்துக்க வேண்டிய அன்பு. இல்லேன்னா அது நிலைக்கும் என்கிற உத்தரவாதம் இல்லை. தாய்—மகள் உறவு அப்படி இல்லே. நான் உன்னை விட்டுப் போனாலும் நம் பந்தம் அறுந்து போகாது. நம் அன்பு மறையாது. நமக்குள் கோபம் ஏற்படலாம். ஆனால் வெறுப்பு வரமுடியாது. இதோ பதிமூணு வருஷங்கள் கழிச்சு நான் வந்திருக்கேன். நீ என்னைக் கைநீட்டி அணைச்சுக்கறே. அந்த இன்னொரு அன்பு இப்படி வருஷக்கணக்கில் உறுதியோடு இருக்கும்னு எனக்கு என்னம்மா நிச்சயம்? உன்கிட்ட எனக்கிருந்த நம்பிக்கை அவர் கிட்ட இல்லே. உனக்கும் எனக்கும் உள்ள அன்பு இயற்கையானது; மாற முடியாதது. உன்னை விட்டு விட்டாலும் நான் உன்னை இழக்க முடியாது. ஆனால் அவர் வேணும்னு நான் முடிவு பண்ணியிருந்தால் அவரை ஒரு வேளை இழந்திருப்பேன். ரெண்டு பேரும் வேணும் என்கிறதால்தான் நான் உன்னை விட்டு விட்டு அவர் பின்னால் போய் விட்டேன். **உன்** பந்தத்தில்தான் நான் நம்பிக்கை வைக்கும்படியான அதிக சக்தி இருந்தது.''

கிழவியின் கண்களில் திடீரென்று மலர்ச்சி பொங்கி எழுந்தது. முகத்தில் அன்போடும் நெகிழ்ச்சியோடும் ஒரு புதிய ஒளி மெள்ள மெள்ளக் கொழுந்து விரிக்கத் தொடங்கியது.

கதவருகில் வந்து மெதுவாக எட்டிப் பார்த்தாள் சரஸ்வதி. பின்னால் ஜகந்நாதன் நின்றார். அம்மா கோபித்துக் கொள்வாளோ? சீதாவைக் கண்டது அவளுக்கு அதிர்ச்சியாக இருந்திருக்குமோ? வெறுப்பினால் கலவரம் கொண்டிருப்பாளோ? உடல்நிலை அதனால் கேவலமாகி விடுமோ?

இல்லை... இல்லை.. இதோ அம்மா சீதாவைப் பார்த்துப் புன்னகை செய்துகொண்டிருக்கிறாள். எத்தகைய அதிசயமான, புதிய பிரகாசம் அந்தப் புன்னகையிலே. மெலிந்த உடலில் சுவாசம் நிதானமாகவே எழுகிறது.

''அம்மா!''

''சரசு!'' கிழக் கண்களில் கனிவு. ''இதோ பார் சீதா வந்துட்டா! இப்போ நீ சொன்ன மாதிரி... மூணு பேரும்!''

''அம்மா!''

மூவரும் அருகில் சூழ்ந்தார்கள். துடிக்கும் விரல்கள் மூவரையும் தொட்டுத் தடவிச் சிலிர்த்தன.

''இந்தா, சீதா ஏதாவது சாப்பிட்டாளோ என்னமோ. அழைச்சுண்டு போய்க் கொஞ்சம் பாலாவது கொடுங்கோ.'' கிழவியின் பார்வையிலே அதே மர்மமான ஒளி.

''நீ கண்ணை மூடிண்டு தூங்கம்மா.''

''ஆகட்டும், ஆகட்டும்.''

''உன் கூட நாங்க யாராவது....''

''அதெல்லாம் அப்புறம் பார்த்துக்கலாம். நீங்க முதலில் உங்களைக் கவனிச்சுக்குங்கோ.''

அவர்கள் எழுந்து சென்றார்கள்.

உள்ளே இளையவர்கள் விழித்துக்கொண்டு விட்டார்கள். சீதா வந்திருப்பதில் ஒரே பரபரப்பு. அவளுக்கு உபசாரம் செய்வதில் போட்டியும் உற்சாகமும் எல்லைமீறிவிட்டன.

பங்கஜம் வந்து எட்டிப் பார்த்தாள். ஐயோ, என்ன கொடிய ஏமாற்றம்! இந்தச் சீதா அத்தை காதல் செய்தவள். தாய் சொல்லை மீறி ஓடிக் கல்யாணம் செய்து கொண்ட வீரக் கதாநாயகி, பார்ப்பதற்கு எல்லோரையும் போலத்தான் இருக்கிறாள்!

ஆண்டாளு நிம்மதியாய் உறங்கிக்கொண்டிருந்தாள். காலன்கூட இன்று அவளை அணுகும் துணிச்சலைப் பெற முடியாது. அவளிடம் அப்படி ஒரு கம்பீர ஆதிக்கம், பலவீனம் மறைந்த புத்துணர்ச்சி — தன் வலிமைதான் எப்போதுமே உயர்ந்து நின்றிருக்கிறது என்ற உண்மை புலனாகிய காரணத்தினால்! அன்னையின் அன்பும் கனிப்பும் நெகிழ்வும் பொங்கிப் பொலிந்து கொண்டிருந்த கிழ முகத்தில் அவற்றின் கூடவே எத்தனையோ காலத்துக்கு முன்பு மறைந்து போயிருந்த பெருமிதமும் தன்னம்பிக்கையும் இன்று மீண்டும் புத்துயிர் பெற்று மலர்ந்திருந்தன. தோல்வியறியாத வெற்றி — வாழ்வின் சுக நினைவு துலங்கும் அமைதியோடு அவள் உறங்கிக் கொண்டிருந்தாள்.




# மனைவி பி.ஏ.

அநுசுயா

'பட்டதாரிணிகளுக்குக் கடிதம்' என்ற தலைப்புடன் சில மாதங்களுக்கு முன்னால் நான் எழுதியது உங்களுக்கும் ஞாபகமிருக்கும். ஏனென்றால், நான் எழுதுவதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருக்க வேண்டியதைத் தவிர உங்களுக்கு வேறு வேலை இல்லை அல்லவா!

அதில், பெண்கள் படித்து முடித்த பிறகு கலியாணம் செய்து கொள்ளும்வரை ஏதாவது ஒரு வேலையில் அமர்வது நல்லது என்று எழுதியிருந்தேன். எத்தனையோ சிரமப்பட்டு, எத்தனையோ கஷ்ட நஷ்டங்களுக்கிடையே படித்த படிப்பையும், அருமையான பொழுதையும் வீணாக அடிக்கக் கூடாது என்பதற்காகத்தான். அத்துடன் பணமும் சம்பாதிக்கலாம் அல்லவா!

இப்போது ஸ்ரீமதி மைதிலி ஜகந்நாதன் 'கிராஜுவேட் ஹௌஸ் ஒய்ப்' என்ற தலைப்புடன் ஹிந்துப் பத்திரிகையில் ஓர் அழகான கட்டுரை எழுதியிருக்கிறார்.

இந்த 'ஹௌஸ் ஒய்ப்' வேறு யாரும் அல்ல. ஒரு புருஷன் தொட்டுத் தாலி கட்டிய மனைவிதான். ஆங்கிலத்தில் அவளை 'வீட்டின் மனைவி' என்று அழைக்கிறார்கள். வீட்டை நிர்வகிப்பவள் என்று அதற்கு அர்த்தம். அது கிட்டத்தட்ட ஓர் உத்தியோகம் மாதிரி. சென்னையில் அமெரிக்க வாசகசாலை ஒன்றிருக்கிறது. வாசகசாலையின் அங்கத்தினராகச் சேருவதற்கு மனுச் செய்து கொள்ளும் பெண்கள் மனுவில் தங்கள் உத்தியோகம் என்ன என்று குறிப்பிட வேண்டும். கல்யாணமாகி இருந்தால், 'உத்தியோகம்' என்ற வார்த்தைக்கு நேரே 'ஹௌஸ் ஒய்ப்' என்று எழுதச் சொல்கிறார்கள். உண்மையில், நடைமுறையிலும் விவாகம் செய்து கொண்ட பெண் வீட்டுக்குத்தான் மனைவியாயிருக்கிறாள்!

''வீட்டு வேலை என்பது பிரமாதமான காரியமல்ல. சில வருஷங்களில் எல்லாம் தலைகீழ்ப்பாடமாகி விடும். அதுவும் இப்போது உள்ள பல வசதிகளுடன் வீட்டுக் காரியங்களை மிக சுலபமாகச் செய்து முடித்து விடலாம்.... படிப்பு என்பது பெருமைக்காகப் படிப்பதாகப் போய் விட்டது. 'என் மனைவி முதல் வகுப்பில்தேறிய பி.ஏ.' என்று கணவன் தன் நண்பர்களிடம் பெருமையாகச் சொல்லிக் கொள்கிறான். மாமியார் அம்மாளோ, 'என் நாட்டுப்பெண் எம். ஏ. யாக்கும்!' என்று பெருமையடித்துக் கொள்கிறாள். ஆனால், அந்த முதல் வகுப்பில் தேறிய பி. ஏ.யும், எம்.ஏ.யும் காலையில் காப்பி போடுகிறார்கள். பிறகு சமைக்கிறார்கள், மத்தியானத்துக்கு மேல் டிபன் செய்கிறார்கள், இரவு சமைக்கிறார்கள், மறு நாள் காலையில் காப்பி போடுகிறார்கள். பிறகு சமைக்கிறார்கள்..... இவற்றையே திரும்பத் திரும்பச் செய்து கொண்டிருக்கிறார்கள். படிப்பைப் பயன்படுத்துவதேயில்லை. அவள் சில மணி நேரமாவது ஓர் உத்தியோகம் பார்த்து வரலாம். அந்த வகை உத்தியோகங்கள் ஏற்படச் சர்க்காரும் மற்றவர்களும் ஏற்பாடு செய்ய வேண்டும்.''

இந்தப் பொருள்படச் சகோதரி மைதிலி எழுதியிருக்கிறார். இதை ஆதரித்துச் சிலரும், ஆட்சேபித்துச் சிலரும் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். 'அவர்கள் உத்தியோகத்துக்குப் போனால் வீட்டில் குழந்தைகளை யார் பார்த்துக் கொள்வதாம்?' என்கிறார்கள் சிலர்.

சமீபத்தில் ஒரு சிறுகதை படித்தேன். அதில் வரும் கதாநாயகி நன்றாகப் படித்த பெண். அவள் என்ன படித்தென்ன? எல்லாம் ஊறுகாய் போட்டு வைக்க வேண்டியதுதான். ஆனால், ஊறுகாயையாவது அடிக்கடி திறந்து விடுகிறோம்; வெயிலில் வைக்கிறோம். அந்த நல்ல அதிர்ஷ்டம்கூட எங்கள் படிப்புக்கு இல்லை என்கிறாள். அவள் வாய்விட்டு அழாத குறைதான்.

விவாகம் செய்து கொண்டு குழந்தைகளுக்குத் தாயாகி விட்ட ஸ்திரீகள் உத்தியோகம் செய்தால், குழந்தைகளை யார் பார்த்துக் கொள்கிறது? இது ஒரு பிரச்னைதான்.

சில வருஷங்களுக்கு முன்னால் நான் பார்த்த ஓர் ஆங்கில சினிமாவில் இந்தப் பிரச்னையை வைத்துக் கொண்டு தமாஷ் செய்திருந்தார்கள். கதாநாயகிக்கும், கதாநாயகனுக்கும் உப்புப் பெறாத விஷயத்தில் தகராறு ஏற்படுகிறது. 'பிரமாதமாகக் குழந்தையை வளர்த்து விடுகிறாயோ? நீ வேண்டுமானால் உன் பிறந்தகத்துக்குப் போய் விட்டு வா. நான் எப்படிப் பார்த்துக் கொள்கிறேன், பார்!' என்று சவால் விடுகிறான். அந்தப் பெண்ணுக்குக் கோபம் எப்போதும் மூக்கின் நுனிக்கு மேலே காத்துக் கொண்டிருக்கும். அடுத்த ரயிலேறி ஊருக்குப் போய் விடுகிறாள்.

குழந்தைக்கு மூன்று வயது இருக்கும். அவன் காரியாலயத்துக்கு வேலை செய்யப் போகும் போது அதைப் பார்த்துக் கொள்ள யாரும் கிடைக்கவில்லை. வேறு வழியின்றித் திருட்டுத்தனமாக ஆபீசுக்குக் கொண்டு போகிறான். காகிதங்கள் வைக்கும் இரும்பு ஷெல்பில் ஒளித்து வைக்கிறான். மற்றக் குமாஸ்தாக்கள் அவனுக்கு இது விஷயத்தில் உடந்தையாக இருக்கிறார்கள்; குழந்தைக்கும் இது தமாஷாயிருக்கிறது. ஆனால் காரியாலயத் தலைவர் வரும் சமயம் பார்த்துக் குழந்தை கத்துகிறது.





எல்லாம் ஒரே கலாட்டாதான். ஸ்திரீகள் ஆபீஸில் மேஜை மீது குழந்தையை உட்கார வைத்துக் கொண்டு வேலை செய்தால் எப்படி இருக்கும்?

மேல் நாடுகளில் முக்கியமாக ரஷ்யா போன்ற கம்யூனிஸ்டு நாடுகளில் வேலை செய்யும் ஸ்திரீகளின் குழந்தைகளைப் பார்த்துக் கொள்ள எல்லா வசதிகளும் செய்திருக்கிறார்கள். நமது தேசத்திலும் சில ஆபீஸ்களில் வேலை செய்யும் ஸ்திரீகளுக்கு இந்த வசதிகள் உண்டு. மேல் நாடுகளில் உத்தியோகம் செய்யும் பெரும்பாலான ஸ்திரீகள் 'பேபி ஸிட்டர்' என்பவர்களை அமர்த்திக் குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளச் சொல்கிறார்கள். கிட்டத்தட்ட ஆயாக்கள் மாதிரி.

இங்கே, பெண்கள் தாய்மார்கள் ஆகும் வரை வேலை பார்க்கலாம். அவர்களுக்குக் குழந்தை பிறந்து விட்டால் 'என் நாட்டுப் பெண் எம். ஏ.யாக்கும்' என்று பெருமை யடித்துக் கொள்ளும் மாமியார் அம்மாள் குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளவாளே? அப்படிப் பந்துக்கள் யாரும் இல்லா விட்டால் சிரமந்தான்.

ஒவ்வொரு ஸ்திரீயும் வசிக்கும் வீட்டுக்குச் சமீபத்திலேயே செய்யக் கூடியதான வேலையாக அமைந்தால் சௌகரியமாக இருக்கும். 'ஸ்திரீகள் உத்தியோக சென்டர்' அமைத்துப் படித்த ஸ்திரீகள் ஏதோ நான்கு ஐந்து மணி நேரம் செய்யக் கூடிய வேலையாக ஏற்பாடு செய்யலாம்.

அமெரிக்காவில் பெரிய கிராமத்தப் பகுதிகளில் 3, 4, 5 வயதுள்ள சின்னஞ் சிறுவர்களுக்கான 'நர்ஸரி'ப் பள்ளிக்கூடங்களை அந்தப் பகுதிகளில் உள்ள ஸ்திரீகளே கூட்டு முறையில் நடத்துகிறார்களாம். அவர்களே முறை போட்டுக் கொண்டு குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிறார்களாம்.

'ஆமாம்! பேசாமல் ஹௌஸ்-ஒய்ப்பாக இருப்பதை விட்டு இந்தத் தொல்லை எல்லாம் எதற்கு?" என்று சில கணவன்மார்களும் பல மாமியார்களும் முணுமுணுப்பார்கள்.

பட்டம் பெற்று வேலை கிடைக்காமல் திண்டாடும் பிரும்மச்சாரிகளோ நிச்சயமாக எதிர்ப்புத் தெரிவிப்பார்கள். "ஏற்கனவே வேலை கிடைப்பது குதிரைக் கொம்பாக இருக்கிறது; இதில் இவர்கள் வேறு போட்டிக்கு வந்து விட்டால் வாழ்ந்தாற் போலத்தான். ஹவுஸ்-ஒய்ப் வேலைக்கு வேண்டுமானால் மனுப் போடட்டும். போனால்போகட்டு மென்று தாலி கட்டி வைக்கலாம்!" என்பார்கள்.

## குடும்ப அகராதி

**மருந்தும் விருந்தும்:**

'மருந்தும் விருந்தும் மூன்று நாள்' என்பது மிகப் பழைய பழமொழி. இப்போதெல்லாம் 'மருந்து' என்றால் ஒரே ஒரு இஞ்செக்ஷன். ஒரே வேளை மருந்து. அவ்வளவுதான். அதற்கேற்றாற்போல் விருந்து முறையும் மாறிவிட்டிருக்கிறது. ஒரே ஒரு வேளை; அதுவும் பிசைந்த சாதங்கள்.

**ஸோபா:**

ஸோபா என்பது வீட்டில் உள்ளவர்கள் உட்கார்ந்து கொள்வதற்காக மட்டும் ஏற்பட்டதல்ல. உற்றார் உறவினர் யாராவது வந்தால் அவர்கள் பாதரக்ஷை படுவதற்காகவும் உபயோகப் படுவது. நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேருக்குத் தங்கள் குதிகாலைச் சோபாவின்மீது வைத்துக்கொள்ளாமல் உட்காரத் தெரியாது. ஸோபா எத்தனைக் கெத்தனை உயர் தரமாயிருக்கிறதோ அத்தனைக் கத்தனை உள்ளங்கால்கள் அதனைப் பரீட்சை பார்க்கத் துடித்துக் கொண்டிருக்கும்!

**பால்கனி:**

ஒவ்வொரு பங்களாவின் முன்னுள்ள போர்ட்டிகோவின் மேலிருக்கும் பகுதியையும் இப்படிச் சொல்லலாம். இந்த இடத்தில் நான்கு பக்கமும் உள்ள கைப்பிடிச் சுவர்கள் கட்டுவதற்கு முக்கிய காரணம், படுக்கை, அணிமணிகளை வெய்யிலில் காயப் போடுவதற்காகத்தான். பங்களா அழகாயிருந்தால் திருஷ்டி விழாதிருக்கத் தினமும் ஒரு பழைய கிழிசல் பாயை உலர்த்தி வைப்பார்கள்.



**வீட்டுக் குறிப்புக்கள்**

பெரிய திராட்சைப்பழம், அதுதான் கொட்டை இருக்கும் காய்ந்த திராட்சைப் பழம்—ஐந்தாறு எடுத்து முதல் நாளிரவு ஆறிய வெந்நீரில் ஊற வையுங்கள். மறுநாள் காலையில் கசக்கிப் பிழிந்து, அதை வடிகட்டவும். அந்த ஜலத்தைப் 'பீடிங்' பாட்டிலில் கொடுத்தால் குழந்தை அனுபவித்துக் குடிக்கும். குடல் சுத்தமாகும். அதே சமயத்தில் உடலுக்கும் உறுதி அளிக்கும்.

குழந்தைக்கு ஒரு மாதம் ஆகும்போதே கொடுத்து வரலாம். வயது ஆக, ஆகப் பழங்களின் எண்ணிக்கையை அதிகரித்து வரலாம்.

# குமாரி துப்பறிந்தாள்

எஸ். வைத்தியநாதன்



டிபன் இடைவேளை. 'கோவிந்தா கம்பெனி'யின் சிப்பந்திகள் அனைவரும் எதிரேயிருந்த ஹோட்டலை நோக்கிக் கிளம்ப ஆயத்தம் செய்தார்கள்.

சோமு மாத்திரம் அந்தக் கோஷ்டியில் சேராமல், வீட்டிலிருந்து கொணர்ந்திருந்த டிபன் பொட்டலத்துடன் ஒருபுறமாக இருந்த அறையை நோக்கிச் சென்றான்.

''என்ன சோமு! இன்றைக்கும் மோரும் சாதமும்தானே!'' என்றான் டைப்பிஸ்ட் ரங்கநாதன், ஏளனப் புன்னகையுடன்.

''வாயை அலம்புடா! மோருஞ் சாதமும், இருஞ்சாதமும் சாப்பிட்டு உடம்பைக் கெடுத்துக் கொள்கிறவனா நம்ப சோமு! பழையதைத் தவிர எதுவும் கொண்டு வரமாட்டானே அவன்!'' என்றார் அக்கௌண்டெண்ட் அருணாசலம்.

''ஓய், அருணாசலம்! என்னமோ நக்கல் பண்ணுகிறீரே! பழையதின் மகிமையைப் பற்றி உமக்கு என்ன தெரியும்? அதில் எத்தனை வைடமின் இருக்கிறது, தெரியுமோ?'' என்றார் டெஸ்பாட்ச் ஹெட்மத்தாமஸ்.

''அதெல்லாம் இல்லே! விஷயம் எனக்குத்தான் தெரியும். சோமுவின் 'ஹோம் கவர்ன்மெண்ட்' ரொம்ப 'ஸ்ட்ரிக்ட்'டான ஆட்சி செலுத்துகிறது. அதுவும் நிதி விஷயங்களில் ரொம்ப ரொம்பக் கடுமை. முதல் தேதி சம்பளத்தை வாங்கிக் கொண்டு போய்த் தேவியின் கர கமலங்களில் சமர்ப்பித்து விட்டானானால் வெற்றிலே பாக்குக்கு அரையணா வேண்டுமென்றாலும் கிடைக்காது! அப்படியிருக்க ஹோட்டலுக்கும் கிட்டலுக்கும் அவள் கட்டளையை மீறி அவன் எப்படி வரத் துணிவான்!'' என்றார் காஷியர் கமலஹாஸன்.

ஏழெட்டு மாதங்களுக்குமுன் குமாரியை அவன் மணந்து தாம்பத்தியம் தொடங்கியதிலிருந்து அவன் ஹோட்டல் தீனியை இழக்கும்படி ஆகிவிட்டது!

அவன் மேல் எல்லையற்ற காதலையும் அன்பையும் பொழிந்த அவன் எழில் மனைவி குமாரி, அவனுக்கு ஆபீசுக்கு டிபன் பண்ணிக் கட்டிக் கொடுப்பதைத் தன் தினசரிக் கடமையாகக் கொண்டு விட்டாள்.

''எதற்காக வீண் சிரமமெல்லாம் படுகிறாய் குமாரி! எங்கள் ஆபீஸ் எதிரில், ரொம்ப ரொம்பக் கிட்டத்தில் ஹோட்டல் இருக்கு'' என்றான் சோமு.

''நன்றாயிருக்கு! என்ன இருந்தாலும் வீட்டுப் பண்டம் மாதிரி ஆகுமோ! ஹோட்டலில் கண்டபின்னு வென்று தின்றால் உடம்புக்கு ஆகாது. செலவும் அதிகம்.....!''

''உடம்பாவது கிடம்பாவது! இத்தனை வருஷங்களாக ஹோட்டலில்தானே தின்று கொண்டிருந்தேன்! என்னை என்ன பண்ணி விட்டது?'' என்றான் சோமு அழாக்குறையாக.

தன்னால் முடிந்தவரை பார்த்து விட்டான் சோமு! பிரயோசனப்பட வில்லை! எனவே, பேசாமல் ஒப்புக் கொள்வதைத் தவிர வேறு வழி? அவள் கட்டிக் கொடுக்கும் டிபனை ஆபீஸில் தின்று தொலைத்து, மாலை வீட்டுக்குப் போய்க் காப்பி குடிக்க வேண்டியதாயிற்று.

ஆயினும் இந்த நிலைமை இப்படியே நீடித்துக் கொண்டு போவதை அவன் எள்ளளவும் விரும்ப வில்லை. போதும் போதாததற்கு ஆபீஸ் நண்பர்களின் பரிகாசம் வேறே! ஆகவே மனைவியின் இந்த டிபன் உபத்திரவத்திலிருந்து எப்படித் தப்பலாம் என்று அதற்கான உபாயங்களைச் சிந்தித்துக் கொண்டிருந்தான்.

ஒரு யோசனை தோன்றியது. மனைவியிடம், ''குமாரி! நீ எவ்வளவோ கஷ்டப்பட்டு மிகுந்த சிரத்தையுடன், குசியாகத்தான் தினமும் டிபன் பண்ணிக் கொடுக்கிறாய்! என்றாலும்....'' என்று ஆரம்பித்தான் ஒரு நாள்.

''என்றாலும்...?''

'' காலை ஒன்பது மணிக்குச் செய்கிற டிபனை நான் மத்தியானம் இரண்டு மணிக்குச் சாப்பிடும் போது ஆறி அவலாகப் போய் ருசி ரொம்பக் குறைந்து விடுகிறது.''

''நியாயந்தான்! அதற்கு என்ன பண்ணலாம் என்கிறீர்கள்?''

''நீ வீணுக்குச் சிரமப்பட வேண்டாம். டிபனை ஹோட்டலிலேயே பார்த்துக்கொண்டு விடுகிறேனே!''

''பேஷாகத்தான் இருக்கிறது! மூட்டைப் பூச்சிக்குப் பயந்து கொண்டு வீட்டை விட்டு ஆலமரத்தடியில் போய்ப் படுத்துத் தூங்குகிற மாதிரிஅல்லவா இருக்கிறது உங்க யோசனை?''

''அப்போது என்ன செய்யச் சொல்கிறாய்? ஆபீஸில் ஒரு ஸ்டவ் வைத்துக் கொண்டு

டிபனை மறுபடியும் சூடாக்கிக் கொள்ளட்டுமா?'' என்று கேட்டான் சோமு.

''அப்படி நடக்குமா?''

''பின்னே!''

''அடுத்த வீட்டுக் குண்டுராவின் ஆபீஸ், உங்கள் ஆபீஸ் கிட்டதானே!''

''ஆமாம்!''

''அவர் காலையில் சாப்பாடு சாப்பிட்டு விட்டுப் போவதில்லை; 'மத்தியானம்தான் சாப்பிடுகிறாராம். அவர் மனைவி சொன்னாள்!''

''அதற்கும் என் விஷயத்துக்கும் என்ன சம்பந்தம்?''

''சம்பந்தம் இருக்கப் போகிறது. ஆமாம்! நீங்கள் கையில் டிபன் எடுத்துப் போக வேண்டாம்!...... மத்தியானம் பன்னிரண்டரை மணிக்கு டிபன் பண்ண ஆரம்பித்தேனானால் ஒரு மணிக்கு முடிந்து விடும். அப்போதுதான் தினமும் அடுத்த வீட்டுக்காரருக்குச் சாப்பாடு போகும். அந்த வேலைக்காரியிடமே உங்கள் டிபனையும் கொண்டு கொடுக்கும்படி சொல்லி ஏற்பாடு செய்து விடறேன். உங்களுக்கு டிபன் ஆறி அவலாகப் போகாமல் கிடைக்குமல்லவா!''

தாங்கொணா அதிர்ச்சியுடன், 'நான் திருப்தியாகச் சாப்பிட்டு நாசமாய்ப் போகிறேன்' என்று எண்ணமிட்டுப் பொருமினான் சோமு!

என்றாலும், விஷயத்தை முடிவடைந்து விட்டதாகக் கருதி அத்துடன் விட்டுவிட அவன் விரும்பவில்லை. அவன் மூளை இடைவிடாமல் வேலை செய்து கொண்டேயிருந்தது. வேறு புதுத் திட்டம் வகுத்துக் கொள்ளத் தன் மூளையை இயக்கிக் கொண்டிருந்தான்.

அடுத்த மாதத்தில் அவன் கம்பெனியில் எல்லோருக்கும் சம்பள உயர்வு கொடுத்தார்கள். சோமுவுக்கு இருபது ரூபாய் சம்பள உயர்வு கிடைத்தது. மனைவியிடம் அந்த 'இன்கிரிமெண்ட்' விஷயத்தைப் பற்றி மூச்சு விடவில்லை அவன்! அந்தப் பணத்தை ஹோட்டல் செலவுக்கு உபயோகித்துக் கொள்ளத் தீர்மானித்தான்!

அன்று மத்தியானம், டிபன் கொணரும் பெண்மணி வரும் நேரத்துக்குச் சற்று முன்னரே ஆபீஸ் காம்பவுண்டுக்கு வெளியே போய்க் காத்து நின்று அவளை எதிர்கொண்டு, ''ஏ, முனியம்மா! இன்றிலிருந்து எனக்காகக் கொண்டு வரும் டிபனை நீயே சாப்பிட்டு விடு'' என்று கூறினான்.

அவள் திகைத்து, ''என்னங்க, சாமி இது!'' என்றாள்.

''உண்மையாகத்தான் சொல்கிறேன். உன்னைப் போலொத்த ஏழைகளெல்லாம் கால் வயிறும் அரைக் கால் வயிறும் சாப்பிட்டுத் துன்பப்படுவதைக் கண்டு என் மனசு ரொம்பக் கஷ்டப்படுகிறது. தினந்தோறும் ஓர் ஏழையின் பசியை ஓரளவுக்காவது தீர்க்க வேண்டும் என்று தீர்மானித்திருக்கிறேன்.''



''என்னத்துக்குங்க....!''

''நான் சாப்பிடாமல் பட்டினி கிடப்பேன் என்று நினைக்கிறாயா? அப்படி யொன்றும் பட்டினி கிடப்பவன் அல்ல நான்! ஹோட்டலில் டிபன் பண்ணிக் கொள்கிறேன்!''

''அதுக்கில்லீங்க. இதெல்லாம்....''

''எங்க வீட்டு அம்மாவுக்குத் தெரிந்து போய்விட்டால் என்ன பண்ணுவது என்கிறாயா! தெரியும்படி விடுவேனா நான்! அவள்தான் கருமியாச்சே! இதெல்லாம் மனசாகுமா அவளுக்கு?.... ஆகவே அவளுக்கு இதைப் பற்றிச் சொல்லவே மாட்டேன் நான். நீயும் இதைப் பற்றிச் சொல்லாதே.''

அப்போதும் அவள் தயங்கினாள். சோமு அவளை வற்புறுத்தி ஒப்புக் கொள்ளச் செய்து விட்டான்.

அன்றிலிருந்து சோமு ஹோட்டலில் புனர்ப்பிரவேசம் செய்து இஷ்டப்படி ஜமாய்த்துப் பேரானந்தம் எய்திக் கொண்டிருந்தான்.

அவனுக்காக வீட்டிலிருந்து அனுப்பப் பெறும் டிபன்களை வழியில் எங்காவது வெளுத்துக் கட்டிக் கொண்டிருந்தாள் முனியம்மா!

அவனுடைய திடீர் மாற்றத்தைக் கண்டு அவன் ஆபீஸ் சகாக்களெல்லாம் வியந்து திகைத்தார்கள்.

மனைவிக்குக் குட்டு வெளியாகக் கூடாது என்பதற்காகத் தினந்தோறும் காலையில் உத்தியோக சாலைக்குப் புறப்படும்போது, ''இன்று என்ன டிபன் பண்ணப் போகிறாய்?'' என்று ஞாபகமாகக் கேட்டுக் கொண்டு போய் மாலை திரும்பி வந்ததும் முதல் காரியமாக, ''குமாரி! இன்று பூரி கிழங்கு பிரமாதம்!'' ''இன்றைக்கு அடை தேவாமிர்தந்தான் போ!'' என்றெல்லாம் புகழ்வான்.

சுமார் ஒரு மாத காலம் இந்த நாடகம் நடைபெற்றது.

ஒரு நாள் காலை, ''இன்று என்ன அனுப்பப் போகிறாய்?'' என்று கேட்டபோது, குமாரி, ''இனிமேல் நீங்கள் ஹோட்டலிலேயே டிபன் பண்ணி விடுங்களேன்!'', என்றதும் சோமு திகைத்து, ''ஏன் குமாரி, என்ன சமாசாரம்?'' என்று கேட்டான்.

''வர வர எனக்கு உடம்பு தள்ளவேயில்லை! ரொம்ப அலுப்பாயிருக்கிறது!'' என்றாள் அவன் மனைவி குமாரி.

"அட, பாவமே! நான் அப்போதே அதைத்தான் சொன்னேன். நீ கேட்கவில்லை! உன் கையால் செய்யப்பட்ட அபூர்வமான டிபன்களைச் சாப்பிட்டுவிட்டு இனி ஹோட்டல் பண்டங்களை என் நாக்கு ரொம்பச் சிரமத்துடன் தான் ஏற்கும். என்றாலும் என்ன செய்வது! உனக்குக் கஷ்டமளிக்கவும் எனக்கு மனம் வரவில்லை!" என்று அவளுக்குச் சௌகரியம் செய்பவன்போலப் பேசினான் சோமு.




அன்று மாலை ஆபீஸிலிருந்து அவன் திரும்பிக் கொண்டிருக்கையில் அகஸ்மாத்தாக முனியம்மாள் எதிர்ப்பட்டாள். அவனுக்குத் தான் செய்து கொண்டிருந்த 'தர்மம்' நின்று விட்டதே, என்ன சமாதானம் சொல்லலாம் என்று அவன் எண்ணமிடுகையில் அவள், "சாமி, அன்னைக்கே நான் வேண்டாமென்று சொன்னேன்! நீங்கதான் கேட்கலே!" என்று முறையிடத் தொடங்கினாள்.

"ஏன், என்ன நடந்துவிட்டது?"

"விஷயம் அம்மாவுக்குத் தெரிந்து போய் விட்டது!"

திடுக்கிட்ட சோமு, "தெரிந்து விட்டதா? எப்படி?" என்றான்.

"எப்படியோ, எனக்குத் தெரியாது! நேற்றுச் சாயங்காலம் என்னைக் கூப்பிட்டு, 'ஐயாவுக்கு நான் அனுப்புகிற டிபன் சரியாகப் போய்ச் சேருவதில்லையாமே! என்ன இல்லுமுல்லு பண்றாய் நீ!'-என்று மிரட்டினாங்க. அப்புறம் மறைக்க முடியுங்களா! எல்லா விஷயத்தையும் ஒப்புக் கொண்டு விட்டேன்!"

சோமு அளவற்ற அதிர்ச்சியுடன் ஸ்தம்பித்து நின்றான்.

அன்று வீட்டுக்குள் நுழைந்த சோமுவுக்கு மனைவியை ஏறெடுத்து நோக்கவே தயக்கமாயிருந்தது.

"ஏன் என்னவோ போலிருக்கிறீர்கள்?" என்று கேட்டாள் குமாரி.

"ஒன்றுமில்லை!"

"என்னமென்று விழுங்குகிறீர்கள்? உங்கள் முகமே சொல்லுகிறதே, எதையோ மனத்தில் வைத்துக் கொண்டு மறுகுகிறீர்கள் என்று!" என்றாள் குமாரி.

"இல்லை, குமாரி!"

"ஒன்றும் யோசிக்காதீர்கள், சொல்லுங்கள்!"

"நீ என்னை மன்னிப்பதாயிருந்தால் சொல்லுகிறேன்!"

"எதற்காக இப்படியெல்லாம் பேசுகிறீர்?"

"உனக்குத் தெரியாதா? இன்னமுமா என்னைப் பரீட்சை பண்ணுகிறாய்!"

"............"

"ஆமாம். என்னுடைய 'குயுக்தி' வேலையை எப்படிக் கண்டுபிடித்தாய்?"

"திடீரென்று கொஞ்ச நாட்களாக என்னுடைய தயாரிப்புக்களை அளவுக்கு மீறி நீங்கள் புகழ்வதைக் கண்டதிலிருந்தே எனக்குச் சந்தேகம்! மூன்று நாள் சனிக்கிழமை காலையில், உருளைக் கிழங்கு போண்டா பண்ணிக் கொடுத்து அனுப்புகிறேன் என்று உங்களிடம் சொன்னேன். அப்புறம் கறிகாய்க் கூடையைப் பார்த்தால் அதில் உருளைக் கிழங்கே இல்லை. ஆகவே, வெங்காய பகோடா செய்து கொடுத்தனுப்பினேன். சாயங்காலம் நீங்கள் உருளைக்கிழங்கு போண்டா அபாரமாக இருந்தது என்று புகழ்ந்த போது மலைத்தேன். முனியம்மாளைப் பிடித்து உருட்டி மிரட்டியதும் விஷயம் வெளியாயிற்று!.. உங்களுக்கு நான் செய்யும் டிபன்கள் ருசியாக இல்லை என்றால் அதை ஒளிவு மறைவின்றிக் கூறியிருக்கலாமே! நீங்கள் ஹோட்டலில் தின்னக் கூடாது என்று தடை உத்தரவு போட்டதற்குக் காரணம், நான் செய்வது ருசியாயிருக்கும், உடம்புக்கும் தீங்கு செய்யாது என்று எண்ணித்தான். உங்களுக்கு நான் செய்து தருவது பிடிக்கவில்லையென்றால், தெளிவாகச் சொல்லியிருக்கலாமே! உங்கள் திருப்திதானே எனக்கு முக்கியம்! வீணாக நானும் கஷ்டப்பட்டு, ஹோட்டலிலும் செலவாகி, நான் பண்ணிய டிபனும் வீணாகி, அதைச் சாப்பிடுவதற்காக வேலைக்காரிக்கு ஒரு ரூபாய் கூலியும் கொடுத்து வருகிறீர்கள். இந்த விரயங்களெல்லாம் எதற்காக?" என்றாள்.

சோமு வெட்கித் தலைகுனிந்தான்!


ஆழ்ந்த சிந்தனையோ?
காபி குடியுங்கள்
இதோ காபி....காபி உங்களுக்கு உற்சாகம் கொடுக்கும். சூடான காபிக்கு வேறு ஈடு கிடையாது. மணமான காபி மனதிற்கு திருப்தியளிக்கும். எந்த மனநிலையிலும் காபியே குடியுங்கள்.
காபி எந்த மனநிலையிலும்
திருப்தி அளிக்கிறது
ருசியான காபி தயாரிப்பது மிக சுலபம். இதைப் பற்றிய எங்கள் இலவச புத்தகத்திற்கு எழுதுங்கள். எந்த பாஷையில் வேண்டுமென்பதையும் குறிப்பிடவும்.
காபி போர்டு
பெங்களூர்

# நிமிஷக் கதைகள்

"ஏம்மாம் நடை நடக்கிறதுங்க? உங்க அறுதல் செருப்பைத் தெக்கக் கொடுத்து ஆறு வாரமாவுது. கூலிக்காக முக்கால் ரூபாய்க்கு என்னை இப்படி இழுத்தடிக்கிறீங்களே! என் காலுச் செருப்பேயல்ல தேஞ்சு போயிடும் போலிருக்குது!" அலுத்துச் சலித்துக் கொண்டான் பாதரட்சைத் தொழிலாளி.

"இதோ பார்! நீ என்ன தான் நடையா நட. பிரயோசனப்படாது. இந்தச் சம்பந்தம் கறார்ப் பேர்வழி. சொன்னால் சொன்னதுதான். உன் முறை வர்றபோது நானு கூப்பிட்டுக் கொடுத்து விடுவேன், போ!" என்றான் சம்பந்தம்.

"என் முறை எப்போ வருதுங்க?"

"பேசப்படாது. யாருமே என்னிடம் 'க்யூ ஸிஸ்டம்'த்தைப் 'பிரேக்' பண்ணக் கூடாது. பண்ணினால் எனக்குப் பிடிக்காது. நீ ரிப்பேர் பண்ணிக் கொடுத்தியே, அந்த செருப்பை வாங்கின கடைக்கே நான் இன்னும் பணம் கொடுக்கவில்லே. அதுக்குள்ளே உனக்குக் கூலி கொடுன்னு முடியுமா? அந்தக் கணக்கை நான் தீர்த்ததும் என்னை வந்து நீ பாரு. தரேன்!" என்றான் சம்பந்தம்.

●

ரங்கசாமிக்கு ஒரு மாதமாகவே ஹோட்டல் சாப்பாடு. காரணம், அவன் மனைவி கல்யாணி பிறந்தகம் போயிருந்தாள். காரியாலயம் போனதும் முதல் காரியமாக ஆபீஸ் பையனை அனுப்பி இரண்டு கார்டுகள் வாங்கிவரச் சொல்லுவான். தன் மனைவிக்குக் கடிதம் எழுதி மறக்காமல் தபாலில் சேர்க்கச் செய்துவிட்டுத்தான் மறு காரியம் பார்ப்பான்.

இதையே கவனித்து வந்த அவன் நண்பன் சுந்தரம், "தினம் தினம் கடிதம் எழுதுகிறாயே, யாருக்கு?" என்று ஒரு நாள் கேட்டான்.

"ஏன்? என் மனைவிக்குத்தான். ஊருக்குப் போயிருக்கிறாள்" என்றான் ரங்கசாமி.

"சரி, இன்னொரு கடிதம்?"

"அதுவும் அவளுக்குத்தான்!"

"என்ன?" — சுந்தரம் வியந்தான். "இரண்டு கார்டுகள் தினம் தினம் எழுதுகிறாயே. அப்படி எழுத வேண்டிய விஷயம் அதிகம் இருந்தால் இரண்டு கார்டுகளுக்குப் பதிலாக ஓர் 'இன்லெண்ட் லெட்டர்' வாங்கி எழுதினால் காசுக்குக் காசும் மிச்சப்படும், வேண்டிய விஷயங்களையும் தாராளமாக எழுதி விடலாமே!" என்று ஆலோசனையும் சொன்னான்.

"விஷயம் என்ன மண்ணாங்கட்டி! தினம் ஒரு கடிதாசு போடணும்னு உத்தரவு போட்டு விட்டுப் போயிருக்கிறாள் என் சம்சாரம்."

"அப்படியானால் ஒரு கடிதாசோடு நிறுத்திக் கொள்ளக் கூடாதோ?"

"நிறுத்திக் கொள்ளலாம் தான். ஆனால் போய்ச் சேரா விட்டால்...?"

"...என்ன? மறுநாள் போகிறது..."

"அதில்தான் இருக்கிறது ஆபத்து!"

"என்ன?"

"ஒரு நாள் உங்கள் கடிதாசு வரவில்லையென்றால், உடனே புறப்பட்டு வந்துவிடுவேன் என்று சொல்லியிருக்கிறாள். இந்த அஞ்சல் நிலையத்தாரிடம் எனக்கு அவ்வளவாக நம்பிக்கை இல்லை. கடிதம் போய்ச் சேராமல் இருந்து, அவள் வந்துவிட்டால் என்ன செய்வது? எனவேதான் ஒற்றைக்கு இரட்டையாய்ப் போட்டு வைத்தால் ஒன்றாவது போய்ச் சேருமே! அவளும் வராமல் இருப்பாளே என்று போடுகிறேன். அப்படி இரண்டுமே போய்ச் சேர்ந்துவிட்டாலோ, 'நம் கணவருக்கு நம்மிடம் எத்தனை கரிசனம்? ஒற்றைக்கு இரட்டையாகப் போடுகிறாரே!' என்று மகிழ்வாள்! அதற்காகத்தான் முன் ஜாக்கிரதையாக இரண்டு கார்டுகள் போட்டு வைக்கிறேன்!" என்றான் ரங்கசாமி.

●

இரண்டு ஜேப்படித் திருடர்கள் தேட்டைக்காக ஒரு சந்தில் வளைய வளைய வந்து கொண்டிருந்தார்கள். ஒருவன் அடிக்கடி தன் பையில் கையை விட்டுக் கடிகாரத்தை எடுத்துப் பார்ப்பான்; பிறகு பைக்குள்ளேயே போட்டுக் கொள்ளுவான்.

இதைக் கண்ணுற்ற மற்ற திருடன் "உனக்கென்ன மூளை குழம்பி விட்டதா? அடிக்கடி கடிகாரத்தை எடுத்து மணி பார்க்கிறாயே, எதற்காக?" என்று கேட்டான்.

"நான் ஒன்றும் மணி பார்க்கவில்லையே!"

"அப்படியானால் அடிக்கடி பையிலிருந்து கடிகாரத்தை எடுத்துப் பார்ப்பானேன்?"

"நீ எங்கேயாவது என் பையையே தேட்டை போட்டுக் கடிகாரத்தைத் திருடிக் கொண்டு விட்டால்...? அதற்காகத்தான் கடிகாரம் என் பையிலேயே இருக்கிறதா, உன் கைக்கு மாறிவிட்டதா என்று அடிக்கடி பார்த்துக் கொண்டிருக்கிறேன்!" என்றான் முதல்வன்.

●

உபாத்தியாயர்: தண்ணீர் ஐஸ் ஆயிற்று என்றால், அதில் முதலில் ஏற்படும் மாறுதல் என்ன?

மாணவன்: நீருக்கு விலை கிடையாது. அது ஐஸாகி விட்டால் முதல் மாறுதலாக அதற்கு ஒரு விலை ஏற்பட்டு விடுகிறது!







Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# மக்ளீன்ஸ்

உபயோகித்து
அந்த அதிகமான வெண்மையைப்
பாருங்கள்!



## இவ்விதம் சோதியுங்கள்



1. உங்கள் நாக்கினால் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியை உணர்கிறீர்களா?
2. இப்போது, மக்ளீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கிக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.




மக்ளீன்ஸ் பழுப்பு நிறமடைந்த
பற்களை வெண்மையாக்குகிறது!

MTP/LP/3/63 TMA

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon